# சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்

சென்னைப் பல்கலைக்கழகக் கலைப்புலத்து
முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றிற்காக
அளிக்கப்படும் ஆய்வேடு


ஆய்வாளர்
**மு. நாராயணன்**

நெறியாளர்
**முனைவர் சுப. நடராசன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ் இணைப்பேராசிரியர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 005






**தமிழ்த்துறை**
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 005.


ஏப்ரல் – 2014

**முனைவர் சுப. நடராசன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 005.

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்"** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத்தின் முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றிற்காக, மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறையில் எனது மேற்பார்வையில் ஆய்வாளர் **திரு.மு. நாராயணன்** அவர்களால் உருவாக்கப்பட்டதாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கோ அல்லது பட்டயத்திற்கோ, வேறு எப்பல்கலைக்கழகத்துக்கும் வழங்கப் பெறவில்லை என்றும், இது அவர்தம் சொந்த முயற்சியில் உருவானது என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை – 05.
நாள் : 30.4.14

**நெறியாளர்**
முனைவர் **சுப. நடராசன்,**
M.A., M.Ed., M.Phil., Ph.D.,
இணைப்பேராசிரியர்-தமிழியல் துறை
மாநிலக் கல்லூரி, சென்னை-600 005

30/4/14
**துறைத் தலைவர்**
முனைவர் ப. மகாலிங்கம்
தமிழ்த் துறைத்தலைவர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை . 600 005

30/4/14
**முதல்வர்**
PRINCIPAL
PRESIDENCY COLLEGE (AUTONOMOUS)
CHENNAI-600 005.

**மு. நாராயணன்**
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்)
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்"** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தின் முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றிற்காக மாநிலக் கல்லூரி தமிழ்த்துறையில் **இணைப் பேராசிரியர் முனைவர் சுப. நடராசன்** அவர்களின் மேற்பார்வையின்கீழ் உருவாக்கப்பட்ட இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்காகவும் வேறு எப்பல்கலைக் கழகத்துக்கும் அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

இடம் : சென்னை – 05.
நாள் : 30-04.2014

ஆய்வாளர்
மு. நாராயணன்
**(மு. நாராயணன்)**

30.4.14
முனைவர் **சுப. நடராசன்,**
M.A.,M.Ed.,M.Phil.,Ph.D.,
இணைப்பேராசிரியர்–தமிழியல் துறை
மாநிலக் கல்லூரி, சென்னை-600 005

# நன்றியுரை

சென்னை, மாநிலக் கல்லூரியின் தமிழ்த்துறையில் **“சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்”** என்னும் தலைப்பில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வு செய்வதற்கு அனுமதியளித்த, சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர், பதிவாளர், தேர்வாணையர் மற்றும் மாநிலக் கல்லூரியின் முதல்வர் ஆகியோருக்கு என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு மாணவர்களின் நலனில் மிகுந்த அக்கறைக் கொண்டு எந்நாளும் அவர்களை ஊக்கப்படுத்தி வரும் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் ப. மகாலிங்கம்** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வுப்பணியில் ஈடுபடத் தொடங்கியது முதல் ஆய்வுத்தளத்தில் எனக்கு பல்வேறுப்பட்ட கருத்துகளை வழங்கி என்னை நெறிப்படுத்திய இத்துறையின் இணைப்பேராசிரியர் **முனைவர் சுப. நடராசன்**அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக் காலங்களில் பல உதவிகள் புரிந்த மாநிலக் கல்லூரியின் **தமிழ்த்துறைப் பேராசிரியர்கள்** அனைவருக்கும் என் மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத்தளத்தில் எனக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் செய்து, பல நிலைகளில் என்னை ஆற்றுப்படுத்திய **முனைவர் பெ. அர்த்தநாரீஸ்வரன்,** தமிழ் வளர்ச்சித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், **முனைவர் வீ. அசோகன்,** தமிழ் இணைப்பேராசிரியர், மாநிலக் கல்லூரி அவர்களுக்கும் எனது மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடர்பான ஆலோசனைகள் வழங்கி, ஆய்வுப்பணிகள் குறித்து அவ்வப்போது கலந்துரையாடி, என்னை ஊக்கப்படுத்திய செம்மொழித் தமிழாய்வு

மத்திய நிறுவனத்தின் பதிவாளர் **முனைவர் மு. முத்துவேலு** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வுலகிற்கு அறிமுகப்படுத்தியதோடு என்னை ஓர் ஆய்வாளர் என்னும் நிலைக்கு உயர்த்திய என் நினைவில் வாழும் தந்தை **தெய்வத்திரு. பாண்டியன்(எ) முத்துசாமி,** எனது சகோதரர் **தெய்வத்திரு. மு. பெருமாள்** மற்றும் எனது தாயார் **திருமதி. சின்னபாப்பா** அவர்களுக்கும் எனது சகோதரர்கள் மற்றும் குடும்பத்தினர் அனைவருக்கும் எனது வாழ்நாள் வரையிலான நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

என் கல்விப்பணிக்குப் பேருதவி புரிந்து, பல நல்லுரைகளை வழங்கி எனது வாழ்வியல் வழிகாட்டியாக இருந்து வரும் **முனைவர் கதிர்முருகு,** வி.ஐ.டி. பல்கலைக்கழகம், சென்னை அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது வாழ்வில் எப்பொழுதும், எந்த நிலையிலும் வளர்ச்சியைக் காண விரும்பும் சகோதரர்கள் **மு. கோபால்,** எம்.இ., (நெடுஞ்சாலைத்துறை), **த. முருகன்,** எம்.எஸ்.சி., தம்பி **முனைவர் மு. சிவப்பிரகாசம்** ஆகியோர்க்கும் எனது மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கி உதவிய சென்னைப் பல்கலைக்கழக நூலகம், மாநிலக் கல்லூரி நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நூலகம், மறைமலையடிகள் நூலகம், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகம், ரோசா முத்தையா ஆராய்ச்சி நூலகம் ஆகியவற்றின் நூலகர்கள் மற்றும் நூலக ஊழியர்கள் அனைவருக்கும் என் நன்றி.

இவ்வாய்வேட்டை அழகுறத் தட்டச்சு செய்து வடிவமைத்துக் கொடுத்த **திருமதி. இரா. மோகனலட்சுமி** அவர்களுக்கும் நன்றி.

**மு. நாராயணன்**

ஆய்வாளர்

# சுருக்கக் குறியீடு

| | | |
|---|---|---|
| அகத். | – | அகத்திணையியல் |
| அகம். | – | அகநானூறு |
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| க.ஆ. | – | கட்டுரை ஆசிரியர் |
| குறள். | – | திருக்குறள் |
| குறுந். | – | குறுந்தொகை |
| ச.இ. | – | சங்க இலக்கியம் |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நச்சி. | – | நச்சினார்க்கினியர் |
| நற். | – | நற்றிணை |
| ப. | – | பக்கம் |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| பக். | – | பக்கங்கள் |
| பா. | – | பாடல் |
| புறம். | – | புறநானூறு |
| பொரு.ஆ.ப. | – | பொருநராற்றுப்படை |
| மணி. | – | மணிமேகலை |
| மு.நூல். | – | முன்னர் குறிப்பிட்ட நூல். |

# பொருளடக்கம்

# ஆய்வின் உள்ளடக்கப் பகுப்பு முறை

## ஆய்வு முன்னுரை



இயல் - ஒன்று

## வாழ்வியல் அறங்கள் - ஒரு பார்வை

*இயல் - மூன்று*

**சொல் தூய்மையில் தனிமனித அறம்**

## இயல் - ஐந்து

## சமுதாய மேம்பாட்டில் தனிமனித அறம்

# முன்னுரை

## 0.1. முன்னுரை

தமிழ்மொழி தொன்மையானது. எண்ணற்ற இலக்கண, இலக்கிய வகைமைகளைத் தன்னகத்தே கொண்டது. பண்டைத் தமிழ் இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் என அழைக்கப்படுகின்றன. அவை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என இருவகைப்படும்.

எட்டுத்தொகை இலக்கியங்கள் தனிப்பாடல்களின் தொகுப்பாகவும், பத்துப்பாட்டு இலக்கியங்கள் அடியளவில் நெடிய பாடல்களைக் கொண்ட தொகுப்பாகவும் தனித்தனியே விளங்குகின்றன. பண்டைய தமிழ்ப்புலவர்கள் அகத்திணையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலப்பாகுபாடுகளாகவும், புறத்திணையில் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழாகவும் பகுத்துக் கொண்டு சங்க இலக்கியங்களைப் படைத்தளித்தனர்.

சங்க இலக்கியங்கள் காதல், வீரம் என்னும் இரு களங்களை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டவை. பண்டைய மக்கள் வாழ்ந்த வாழ்க்கை முறை அவர்கள் வாழ்க்கையில் போற்றிக் காத்த மரபுகள் முதலானவற்றை எடுத்துக்காட்டும் சான்றுகளாகச் சங்க இலக்கியப் பாடல்கள் நின்றிலங்குகின்றன. இவ்விலக்கியங்கள் எக்கால மக்களும் ஏற்றுப் போற்றத்தக்க மனித வாழ்விற்குரிய அடிப்படையான அறங்களைத் தன்னுள் கொண்டிருக்கின்றன.

அகப்பாடல்கள், புறப்பாடல்கள் ஆகிய இருவகைப்பாக்களுமே தன்னுள் அடிநாதமாக அறச்சிந்தனைகளைக் கொண்டிலங்குகின்றன. இவற்றுள் அறம் வாழ்வியல் வழியாகவும் இயற்கைத் தன்மையுடனும் இணைக்கப்பட்டு இலக்கியத்தின் ஊடுபொருளாகக் காட்டப்பட்டிருக்கிறது.

சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவியிடையிலான உறவுமுறைகள் களவு நிலையில் காதல் வாழ்க்கையாகவும், கற்பு நிலையில் குடும்ப வாழ்க்கையாகவும் இரு நிலைகளில் பேசப்பட்டிருக்கிறது. தலைவன் குடும்ப வாழ்வில் தலைவியுடன் சேர்ந்து அறங்கள் பல செய்தமைக்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. ஒருவர் எந்நிலையிலும் யாருக்கும் துன்பம் செய்யாத மனநிலையில் வாழ்ந்த வாழ்வினைச் சங்கப்பாக்கள் தெளிவுபடுத்துகின்றன.

குறிப்பாகச் சங்க இலக்கியப் பாக்களில் காணப்படும் அறங்களுள் தனிமனித அறம் குறிப்பிடத்தக்கதாகும். பொதுவாகத் தனிமனித அறங்கள் என்பன தொடக்க நிலையில் குடும்பத்தில் இருந்தே பிறக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் சிறந்த மனிதனாக, வாழ்க்கையின் சாதனையாளனாக உருவாக ஒரு சிறந்த வழிகாட்டி அமைவது அவசியமாகிறது. அவ்வகையில் ஒரு சிறந்த வழிகாட்டியாக அன்று ஒவ்வொரு குடும்பமும் விளங்கியதை சங்கப் பாக்களின்வழி அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் அறக்கருத்தாக்கங்கள் வாழ்க்கையின் பன்முகமாகப் பரிமாணத்தை எடுத்துக்காட்டும் தன்மையுடையனவாக விளங்குகின்றன.

தனிமனித அறம் என்பது முதலில் குடும்பம் சார்ந்த அறமாகிப் பின் சமுதாயம் சார்ந்த அறமாகி அதன்பின் உலகளாவிய நிலையை அடையும் படிப்படியான வளர்ச்சித் தன்மையைக் கொண்டிருக்கிறது. எனவே தனிமனிதன் மன அளவிலும், சொல் அளவிலும், செயல் அளவிலும் தூய்மையாக இருப்பது

மிகவும் அவசியமாகும். இத்தகைய தூய்மைகள் தனிமனிதனின் வளர்ச்சிக்கும், நல்வாழ்க்கைக்கும் துணை நிற்கும் முக்கியத்துவமான கூறுகளாகும். சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் தனிமனித ஒழுகலாறுகள் பலவற்றையும் தன்னுள் கொண்டிலங்குகின்றன. இவ்வறங்களை ஆராய்ந்து அவை மனித வாழ்வுக்கு நன்மை பயக்கும் தன்மைகளை எடுத்துக்காட்டுவதன் மூலம் சங்ககால அறங்களை அவற்றின் தனிச்சிறப்புக்களை உலகறியச் செய்ய இயலும். அவ்வடிப்படையில் சங்க இலக்கியங்களில் காணப்படும் தனிமனித அறங்களை ஆராயவேண்டியது காலத்தின் அவசியமாகிறது.

## 0.2. தலைப்புத் தேர்வு

சங்க இலக்கியத் தொகுப்புகளான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் தன்னுள் உலகளாவிய சிந்தனைகள் பலவற்றைக் கொண்டிருக்கின்றன. அகவாழ்வு, புறவாழ்வு, போர்ச்செய்திகள், பண்டைத் தமிழர்களின் வாழ்க்கைமுறை, உணவு, உடை, கலை முதலான பல கூறுகளையும் சங்க இலக்கியங்களின் வழியாக அறியலாம். உலகளாவிய நிலையில் நுட்பமான பொருள்கள் பலவற்றையும் சங்க இலக்கியங்கள் தன்னுள் கொண்டிருப்பினும் அவை வாழ்வியல் சார்ந்த அறங்களை எடுத்துக்காட்டுவதில் தனித்தன்மையுடன் திகழ்கின்றன. குறிப்பாகத் தீமைகளைக் களைந்து நன்மைகளை எடுத்துக்கூறுவதில் சங்க இலக்கியங்கள் பிறவகை இலக்கியங்களைக் காட்டிலும் முன்னிற்கின்றன எனலாம்.

***"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்***
***அல்லது செய்தல் ஓம்புமின்"*** ***(புறம். 195)***

***"எவ்வழி நல்லவர் ஆடவர்***
***அவ்வழி நல்லை வாழிய நிலனே"*** ***(புறம். 65)***

***"இசைபட வாழ்பவர் செல்வம் போல"*** ***(நற்றி. 217)***

*"விளைக வயலே வருக இரவலர்"* *(ஐங். 2)*

*"செல்வத்துப் பயனே ஈதல்"* *(புறம். 189)*

*"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"* *(புறம். 183)*

என்றவாறாகப் பல அறங்கள் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கின்றன. அவ்வறங்கள் தனிமனிதனின் மனநிலையைச் செம்மைப்படுத்தக் கூடியனவாக அமைந்திருக்கின்றன. சங்க இலக்கியங்களில் காணப்படும் தனிமனித ஒழுக்கங்களை ஆராய்வதன் மூலமாகச் சமுதாயத்திற்கான நலம் தரும் கருத்தாக்கங்கள் பலவற்றையும் இனம் காண முடியும்.

அவ்வடிப்படையிலே **"சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்"** என்னும் தலைப்பு இந்த ஆய்வுக்குரிய தலைப்பாகத் தேர்வு செய்யப்பட்டுள்ளது.

## 0.3. கருதுகோள்

தனிமனித ஒழுக்க உணர்வுக்கும், செயல் திறனுக்கும் பாலமாக அமைவன சங்க இலக்கியங்கள் ஆகும். இவற்றுள் வாழ்வியல் அறங்கள் பலவற்றையும் வகைதொகை செய்து மனம், சொல், செயல் என்ற மூன்றின் அடிப்படையில் இங்கு ஒழுங்குபடுத்திப் பார்க்கப்படுகின்றது. தனிமனித ஒழுக்கம் என்பது சமுதாயப் பின்னணியுடன் இணைந்து அறவுணர்வாகச் சங்க இலக்கியங்களில் எவ்வாறு பரவிக் கிடக்கின்றது என்பதை விரிவாகக் காண்பதன் மூலம் சங்க காலத்தின் வாழ்வியல் நெறிகளில் அறம் குறித்த கருத்தாக்கங்கள் எந்நிலையில் இருந்தன என்பதைக் காண்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## 0.4. ஆய்வு எல்லை

சங்க இலக்கியத் தொகுப்புகளான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இரு தொகுப்புகள் மட்டும் இங்கு ஆய்வுக்குரிய எல்லையாகக் கொள்ளப்பட்டுள்ளது. இவற்றில் காணப்படும் தனிமனித ஒழுகலாறுகளைக் கண்டறிந்து அவற்றை மனம், சொல், செயல் என்னும் மூன்றன் நிலைகளில் ஆராயும் நோக்கில் இங்கு சங்க இலக்கியம் முழுவதும் ஆய்வுக்குரிய எல்லையாக வரையறை செய்து கொள்ளப்பட்டது. கருத்துகளின் முக்கியத்துவத்தின் அடிப்படையில் அறப்பாகுபாட்டில் இலக்கியப் பாக்கள் மீண்டும் மீண்டும் எடுத்தாளப்பட்டுள்ளன.

## 0.5. ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும் என்னும் இந்த ஆய்வு சங்க இலக்கியங்களில் காணப்படும் தனிமனித அறக்கோட்பாடுகளை விரிவான முறையில் ஆராயும் வகையில் விளக்கமுறை ஆய்வினையும், சமுதாயவியல் ஆய்வு அணுகுமுறையினையும் இவ்வாய்வு ஆய்வு அணுகுமுறையாகக் கொண்டிருக்கிறது.

## 0.6. ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும் என்னும் இவ்வாய்வு கீழ்வரும் நோக்கங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

- ❋ தனிமனித அறங்கள் எவை, எவை எனச் சங்க இலக்கியங்களின் துணைக் கொண்டு காணல்.
- ❋ மனம், சொல், செயல் என்னும் மூன்றன் அடிப்படையில் வாழ்வியல் அறங்களை வகைப்படுத்திக் காணுதல்.
- ❋ மனம் பண்பட அறங்கள் எப்படித் துணை நிற்கின்றன என்பதைக் கண்டறிதல்.

* சொல் பண்பட அறங்கள் துணையாக நிற்கும் நிலையை எடுத்துக்காட்டல்.
* செயல் பண்பட அறங்கள் துணையாக இருக்கும் நிலையைப் பகுத்தும் தொகுத்தும் காணுதல்.
* தனிமனித அறம் குடும்பம் நன்னிலை அடையக் காரணமாக இருப்பதை எடுத்துக்காட்டல்.
* தனிமனித ஒழுக்கம் என்பது குடும்பம் நன்னிலை அடையவும், சமுதாயம் நன்னிலை அடையவும், உலகம் நன்னிலை அடையவும் எவ்வாறு துணை நிற்கின்றது என்பதை எடுத்துக்காட்டல்.

## 0.7. ஆய்வு மூலம்

**'சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்'** என்னும் இவ்வாய்வுக்கான தரவுகள் இருநிலைகளில் சேகரிக்கப்பட்டுள்ளன. அவை,

- முதன்மை மூலங்கள்
- துணைமை மூலங்கள்

### 0.7.1. முதன்மை மூலங்கள்

சங்க இலக்கியத்தில் காணப்படும் தனிமனித ஒழுகலாறுகளைக் கண்டறிந்து அவற்றை இவ்வாய்வு முதன்மை மூலமாகக் கொள்கிறது. அவ்வகையில் சங்க இலக்கியம் முழுமையும் திரட்டப்பட்ட தனிமனித ஒழுகலாறுகள் குறித்த தரவுகள் முதன்மை மூலங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

### 0.7.2. துணைமை மூலங்கள்

சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுகள், கருத்தரங்கங்கள், ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள் முதலானவற்றில் இருந்து திரட்டப்பட்ட தரவுகள் இவ்வாய்வுக்குரிய துணைமை மூலங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## 0.8. ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியத்தில் அறங்கள் என்னும் பொருண்மையை அடிப்படையாகக் கொண்டு இதுவரை பல்வேறு ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. அவை,

☆ அற இலக்கியங்களில் ஆசிரிய மதிப்பீடுகள் – ரூபி.அலங்காரமேரி.

☆ அகநானூற்றில் வாழ்வியல் நீதிகள் – கு.ப.அழகம்மை.

☆ கலித்தொகை – ஓர் அகழ்வாய்வு – நா.ஆறுமுகம்.

☆ சங்க இலக்கியத்தில் அறக்கருத்துகள் – இரா.அனுராதா,

☆ புறநானூற்றில் மனித மேம்பாட்டுச் சிந்தனைகள் – பி.வெ.சுசிலா.

☆ பண்டைத்தமிழ் இலக்கியங்களில் நீதி – ப.தாமரைக்கண்ணன்.

☆ புறநானூற்றில் சமுதாய அரசியல் நீதிகள் – பா.மல்லிகா தேவி.

## 0.9. ஆய்வேட்டின் அமைப்பு முறை

சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும் என்னும் இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பாகுபாடு செய்து கொள்ளப்பட்டுள்ளது.

முன்னுரை

இயல் – 1 வாழ்வியல் அறங்கள் – ஒரு பார்வை

இயல் – 2 மனமேம்பாட்டில் தனிமனித அறம்

இயல் – 3 சொல் தூய்மையில் தனிமனித அறம்

இயல் – 4 செயல் தூய்மையில் தனிமனித அறம்

இயல் – 5 சமுதாய மேம்பாட்டில் தனிமனித அறம்

முடிவுரை

*முன்னுரை*

முன்னுரையில் தலைப்புத்தேர்வு, ஆய்வின் கருதுகோள், ஆய்வின் எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வின் நோக்கம், ஆய்வின் மூலங்கள், ஆய்வின் முன்னோடிகள், ஆய்வேட்டின் அமைப்புமுறை ஆகியவை குறித்துச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

***1. வாழ்வியல் அறங்கள் - ஒரு பார்வை***

வாழ்வியல் அறங்கள் – ஒரு பார்வை என்னும் முதல் இயல், அறம் என்ற சொல்லின் விளக்கம், அறத்தின் தன்மை, தனிமனித, சமுதாய, குடும்ப, உலகளாவிய அறங்கள், அறங்கள் வாழ்வில் செயல்படும் விதங்கள், நல்லறங்களின் தன்மை, அறங்களால் விளையும் நலங்கள், நல்லறங்கள் செய்ய வேண்டியதன் தேவை, இலக்கியங்களில் அறம் கூறும் முறைமை, தமிழ் இலக்கியங்கள் கூறும் அறங்கள் முதலானவற்றை ஆராய்ந்து செல்கிறது.

***2. மனவளமேம்பாட்டில் தனிமனித அறம்***

மனவளமேம்பாட்டில் தனிமனித அறம் என்னும் இரண்டாம் இயல் மனதின் தூய்மையை வலியுறுத்துகிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் மன மேம்பாட்டிற்கான கருத்தாக்கங்களைக் கண்டறிந்து அவை, வாழ்வில் செயலாற்றும் விதங்களையும் மனநல மேம்பாட்டால் விளையும் நன்மைகளையும் இவ்வியல் எடுத்துக்காட்டுகிறது.

***3. சொல் தூய்மையில் தனிமனித அறம்***

மனத்தில் தோன்றும் எண்ணங்களே சொல்வடிவம் பெறுகின்றன. சொல்வடிவம் நலம் தருவதாக இருந்தால்தான் நன்மைகள் விளையும். அதனால் சங்க இலக்கியங்களில் இருந்து திரட்டப்பட்ட தரவுகளின் அடிப்படையில் சொல் தூய்மையின் சிறப்புகளை எடுத்துக்காட்டுவதாக

இவ்வியல் அமைகிறது. சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு சொல் தூய்மை தனிமனித வாழ்வுக்கு எந்த அளவுக்கு முக்கியமானது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

### 4. செயல் தூய்மையில் தனிமனித அறம்

மனம், சொல் என்னும் இரண்டின் அடிப்படையில் நிகழும் செயல்களே பின்னர் செயல் தூய்மைக்கு வழிகாட்டுகின்றன. மனத்தூய்மையும், சொல் தூய்மையும் செயல் தூய்மைக்கு எவ்வாறு வழிகாட்டுகின்றன என்பதை இவ்வியல் ஆராய்கிறது.

### 5. சமுதாய மேம்பாட்டில் தனிமனித அறம்

சமுதாய மேம்பாட்டில் தனிமனித அறம் என்னும் ஐந்தாம் இயல் மனம், சொல், செயல் மூலமாக விளையும் அறங்கள் எவ்வாறு சமுதாய மேம்பாட்டிற்கு உதவுகின்றன என்பதை சங்க இலக்கியத் தரவுகளின் வழியாக ஆராய்ந்து கூறுகிறது.

### முடிவுரை

மேற்கண்ட ஐந்து இயல்களின் வழியாகக் கண்டறியப்பட்ட உண்மைகள் ஆய்வின் முடிவுகளாகத் தொகுத்துரைக்கப் பெறுகின்றன. அதன் பின் இப்பொருண்மைத் தொடர்பான மேலாய்வுக் களங்கள் குறிக்கப்பட்டுள்ளன. இதன் பின்பு ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலாக அகரவரிசைப்படுத்தப்பட்டுத் தரப்பட்டுள்ளன.

*****

# வாழ்வியல் அறங்கள் - ஒரு பார்வை

## 1.0. முன்னுரை

உலக இலக்கிய வரலாற்றில் தமிழ் இலக்கிய வரலாற்றுக்கு குறிப்பிடத்தக்க இடம் உள்ளது. என்று தோன்றியது என்று சரியாக ஆய்வாளர்களால் அறுதியிட்டுக் கூற இயலாத காலத்தொன்மை கொண்ட தமிழ் மொழியில் சங்ககாலம் தொட்டு இக்காலம் வரை எண்ணற்ற இலக்கிய வகைகள் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. இவை ஒவ்வொன்றும் பாக்களாலும் பாடுபொருள்களாலும் மாறுபட்ட தன்மையைக் கொண்ட இலக்கிய வகைகளாகக் காணப்படுகின்றன. தமிழ் மொழி காலமாற்றத்திற்கு ஏற்ப தக்க இலக்கியங்களைப் படைத்துத்தரும் பெருமை மிக்க மொழியாக விளங்கி வந்திருக்கிறது என்பதை இலக்கிய வரலாற்றைக் கற்பவர்கள் உணர முடியும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பொருள்கள் தமிழ் இலக்கியப் பாடுபொருள் களத்தில் தலையானவையாகவும் நூற்பயனாகவும் கொள்ளத்தக்க நிலை அன்று நிலவியிருந்தது.

சங்க காலம் தொட்டுச் சிற்றிலக்கியக் காலம்வரை அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள்களும் பன்னோக்கில் தமிழ் இலக்கியங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. சங்க இலக்கியக் காலத்தில் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருள்களும், சங்கம் மருவிய காலத்தில் அறமும், பக்தி இலக்கியக் காலத்தில் வீடுபேறும், காப்பியக் காலத்தில் நாற்பொருள்களும், சிற்றிலக்கியக் காலத்தில் நாற்பொருள்களும் தனித்தனியேயும் படைப்பிற்குரிய கருவாக விளங்கியமையினை அவ்வக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களால் அறிந்து கொள்ள முடிகிறது.

தமிழ் இலக்கியங்கள் பொதுவாக அறநோக்கம் கொண்டவை. சங்க இலக்கியப் பாக்களில் ஊடுபொருளாக அறம் பேசப்பட்டது. ஆனால் சங்க காலத்தின் இறுதியில் சங்ககால ஒழுக்கங்கள் பலவும் மாறுதல் பெற்று சமண, பௌத்த சமயக் கொள்கைகள் முன்னிறுத்தப்பட்டன. அறம் அல்லது நீதியைப் போதிக்கும் நோக்குடன் சங்கம் மருவிய காலத்தில் அற இலக்கியங்கள் பெரும்பான்மையும் படைக்கப்பட்டன.

சங்க இலக்கியத் தொகுப்புகளான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இரண்டிலும் அகம், புறம் என்னும் இரு பிரிவுகளில் நூல்கள் விரிவாகப் பாடப்பட்டுள்ளன எனினும் சங்க மருவிய கால இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் அறக்கருத்துகளுக்கு மூலவித்துப் போலத் தன்னில் நுட்பமான சில அறக்கருத்துக்களையும் சங்க இலக்கியங்கள் கொண்டுள்ளன. தனிமனிதனின் வாழ்வு பின் அதன் கூட்டமைப்பான சமுதாயம் அதன் பின்பு உலகம் என ஒவ்வொரு நிலையிலும் அது அதற்கெனத் தனி அறங்கள் சங்க இலக்கியங்களில் பேசப்பட்டுள்ளன.

### 1.1. அறம் – விளக்கம்

அறம், என்றால் நல்ல செயல்களின் தொகுதி என்று கொள்ளலாம். நல்லவையும், தீயவையும் கலந்து நடப்பது சமுதாயம். நலம் தருவன மட்டும் ஏற்றுக்கொண்டு தீயனவற்றை விலக்குவதன் மூலமாக வாழ்க்கை வளம்பெறும் என்னும் கருத்து காலந்தோறும் இலக்கியங்களின் வாயிலாக மக்களுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. “அறம், என்னும் சொல் அறு என்னும் முதனிலை வினை அடியாகப் பிறக்கிறது. தீவினையை அறுப்பதெனப் பொருள்படும். அம்மூலப்பொருளை உட்கொண்டே ஆசிரியர் ஈண்டு மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறம் என்றார். அறியாமையால் விளைவது தீவினை. அறியாமையாவது இருள், அவ்விருளை அகற்றுவதே அறத்தின் பயன்.”[1]

“அறம் என்றால் என்ன என்று விளக்க வந்த வள்ளுவர் மனத்தளவில் குற்றம் இல்லாமல் இருப்பதே அறம்”[2] என்று கூறுகிறார். மனமே நன்மைகள் விளைவதற்கும் தீமைகள் விளைவதற்கும் காரணமாக அமைவதால் வள்ளுவர் மனத்தை முதன்மைப்படுத்தியிருக்கின்றார். உலகில் நடைபெறும் செயல்கள் அனைத்திற்கும் மனமே மூலகாரணமாக அமைவதால் மனத்தைச் சீரமைத்தல் அவசியம் என்பது பெறப்படுகிறது.

அறம் என்பதற்குப் பேரகரமுதலி, “நல்வினை. ஐயம் (பிச்சை) ஏழைகட்கு இலவசமாகக் கொடுப்பது. நோயாளிகட்கு இலவசமாக மருந்தீகை, நலமானது, இன்பம் (சுகம்) தகுதியானது, கற்பு, நோன்பு, அறப்பயன் (புண்ணியம்), சமயம், ஓதி (ஞானம்) அறச்சாலை, அறத்தெய்வம் நடுநிலையறம்”[3] எனப் பதினைந்து பொருள்களைக் கூறுகிறது.

அறம் என்னும் சொல்லிற்குத் தமிழில் பல்வேறு பொருள்கள் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ற வகையில் கூறப்படினும், அவை அனைத்தும் நலம் விளைவதனை அடிப்படையாகக் கொண்டே கூறப்பட்டிருக்கின்றன என்பது விளங்கும். க.த. திருநாவுக்கரசு, “ஒழுக்கம், நீதி, கடமை, ஈகை, அறக்கடவுள், புண்ணியம், சமயம் போன்ற பொருள்களில் அறம் வழங்கி வருகிறது”[4] எனக் குறிப்பிடுகிறார்.

மனிதன் நல்வாழ்க்கை வாழ்வதற்கு அறங்கள் உதவுகின்றன. நல்லன எவை என்று தேர்ந்து அவற்றைக் கடைப்பிடித்து வாழத் தொடங்குகிற போதே அறத்தின் தோற்றம் நிகழ்ந்து விடுகிறது. குறிப்பாக இல்லத்தில் நடைபெறும் நற்செயல்கள் பலவற்றையும் இலக்காகக் கொண்டு வீரசோழியம், “இல்லறம் – கொடுத்தலு மறுத்தலும் கோடலும், இன்மையும் ஒழுக்கம், புணர்தல், புணர்ந்தோரைப் பேணர் மற்றையவுமாம், துறவறம் – துறவும் அடக்கமும் தூய்மையும், தவமும், அறவினையோம்பலும் மறவினை மறுத்தலும் பிறவுமாம்”[5] என்று குறிப்பிடுகிறது.

மக்கள் தங்களுக்காக உருவாக்கிக் கொண்ட சமுதாயம் நன்மை, தீமை என்னும் இரு கூறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. மக்கள் தங்கள் எண்ணப்படி வாழ்வதற்கேற்ற சூழலை உலகம் கொண்டிருக்கிறது. நிலத்தில் உழைப்பவர்களின் ஈடு இணையற்ற உழைப்பினால் உணவு உற்பத்தி தொடர்ந்து நிகழ்கிறது.

நெசவாளர்களால் உலக மக்களுக்குத் தேவையான ஆடை நெய்து தரப்படுகிறது. மேற்கண்டவற்றை வாழ்வில் நிறைவாகப் பெற்றவர்கள் தங்களைச் சார்ந்தோரையும் இவ்வசதிகள் இல்லாதோரையும் போற்றிக் காக்க முன்வர வேண்டும். அதனாலேயே மணிமேகலை அறம் எனப்படுவது உலகில் வாழக்கூடிய உயிர்களுக்கெல்லாம் உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் தருவது அறம் என்று குறிப்பிடுகிறது.

***“அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்***
***மறவா திதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்***
***உண்டியும் உடையும் உறையுமல்லது கண்டதில்”[6]***

வாழ்க்கையில் நல்ல செயல்களின் போக்கைக் கணித்து நற்செயல்களின் காரணமாகப் பிறக்கும் நற்சிந்தனைகளின் வழி இவை, இவை அறம் என தமிழகராதி அறத்திற்கு விளக்கம் தருகிறது. இதனை, “அறம் – சமயம், ஞானம், புண்ணியம், நோன்பு, ஒழுக்கம், தவம், தருமம், நீதி, நேர்மை, இல்லறம், துறவறம், கற்பு, தானம்.”[7] “கையறம் தருமம், நீர்மை, நூற்பயன் நான்கில் ஒன்று, பெரியார் இயல்பில் ஒன்று என்று அறத்திற்கும் அன்பு, அறம் இராசத குணத்துளொன்று இயல்பு – உபநிடதம், ஒப்பு, சுத்தம், தொழில் நல்லொழுக்கம், நியாயப்பிரமாணம், யாகாதிகருமம், வேதம், கடமை என்று தர்மத்திற்கும்”[8] தமிழ் அகராதி பொருள் விளக்கம் தருகிறது.

அபிதான சிந்தாமணி, ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க் குணவு, அறுசமயத்தோர்க்கு உண்டி, பகவற்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம்

நல்கல், அறவைச் சோறு மகப்பேறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடல், அறவைத் தூரியம், கண் நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர் களைதல், தண்ணீர்ப் பந்தல், மடம், தடம், கா.ஆவுறுஞ்சுதறி, விலங்கிற்கு உணவு, ஏறுவிடுதல், விலை கொடுத்து உயிர்காத்தல், கன்னிகாதானம் என அறத்திற்கு முப்பத்து இரண்டு பொருள்களைக் குறிப்பிடுகிறது.

திருவள்ளுவர், ‘‘இல்லத்திற்கு வந்தவர்களை இனிமையாக நோக்கி மனத்தால் உணர்ந்து அவர்களிடம் இனிமையான சொற்களைக் கூறுதல் அறம்’’[10] என்று குறிப்பிடுகிறார். திருக்குறள் நூலுக்கு விளக்கமான உரை வழங்கிய பரிமேலழகர் அறத்திற்கு நீண்ட விளக்கம் தந்திருக்கிறார்.

‘‘மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம், ஒழுக்கம் – அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசாரியம் முதலிய நிலைகளில் நின்று அவ்வற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகல், வழக்கு – ஒரு பொருளைத் தனித்தனியே எனது என்றிருப்பார். அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள் மேற்செல்வது, தண்டம் – அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழுவியவரை அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக. ‘ஒறுத்தல், கடன் வாங்குதல், அடைக்கலமாகப் பொருளை வைத்தல், உடையன் அல்லான் விற்றல், கூடியோம்பிடல், கொடுத்ததை மீண்டும் கொடாமை, கூலி கொடாமை, கட்டுப்பாடு கடத்தல், விற்றும் கொண்டும் உள்ளம் ஒப்பாமை, ஒவ்வாமை, ஒப்பியப்பணி செய்யாமை, எல்லை வழக்கு, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, திருடு, வன்செய்மை, மாதரைக் கவர்தல், மாதர் ஆடவர் தருமம், தாயபாகம், சூது எனப் பதினெட்டுப் பதத்து வழக்கு குலப்படி ஒழுக்கம், வழக்கம், தண்டம்

என்பனவற்றை வடநூலார் முறையே ஆசாரம் விவகாரம் பிராயச் சித்தம் என்பர்''[11] என, பரிமேலழகர் கூறியுள்ள கருத்துக்களில் அறங்களில் சிறந்ததாக ஒழுக்கத்தையே கூறியிருக்கின்றார் என்பது புலனாகின்றது.

அறச்செயல்கள் அனைவருக்கும் நன்மை தரும் என்னும் அடிப்படையில் அறச்செயல்கள் உயர்ந்தோர்களால் எப்போதும் வரவேற்கப்படுகின்றன. சான்றோர்களிடம் இயல்பாக உள்ள நற்குணம் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் பிறர்க்கும் நலம் விளைவிக்கும் இயல்புடையது.

''நற்செயல்கள் செய்வார்க்கும், அச்செயல்களால் விளையும் பயன் மற்றவர்களுக்கும் நல்ல பலன் நல்குகிறது. ஒன்றன் தொடர்ச்சியாக ஒன்று என்ற வகையில் பல நற்செயல்கள் அவற்றைச் செய்வார்க்கு மட்டுமின்றி அவற்றைப் பெறுவார்க்கும் தொடர்ந்து சமுதாய அளவில் பலன் தரும் ஒன்றாக விரிவடைகிறது. அறம் நீங்கினால் சமுதாயத்தில் தீயசெயல்கள் வளரும். அதனால் நற்செயல்களைப் போற்றிக் காப்பதன் வாயிலாக அறம் சிந்தனையில் மேலோங்கும் நிலை ஏற்படும்''[12] என்று இரா. அனுராதா குறிப்பிடுவார்.

அறச்செயல்கள் சமுதாயத்தில் நல்விளைவை ஏற்படுத்துகின்றன. அறமல்லாச் செயல்கள் சமுதாயத்தில் தீமைகளின் பெருக்கத்திற்கு வழிவகை ஏற்படுத்திக் கொடுக்கின்றன. அதனால் மக்கள் நேரிய வழி தேர்ந்து வாழ்தல் நலம். அதனையே தமிழ் இலக்கியங்களும் சான்றோர் வாக்குகளும் மக்களுக்கு உரிய அறிவுரைகளாக விளங்குகின்றன. நளவெண்பாவில் புகழேந்திப் புலவர் அறத்தின் தன்மைக்குப் புறனாகத் தீயசெயல்கள் செய்ய முற்படும்போது அறத்தை அறமல்லாச் செயல் எப்படி வேரோடு அழிக்கும் என்பதை எடுத்துக் காட்டியிருக்கின்றார். அறமல்லாச் செயல்கள் செய்வதால் அமைதி. நிம்மதி அனைத்தையும் இழந்து துன்பத்தில் தவிக்க நேரும் என்பதை நளவெண்பா தெளிவுபடுத்துகிறது.

***"அறத்தை வேர்கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும் - மறத்தையே
பூண்டுவிரோ தவஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து"***[13]

"தமிழகத்தில் கடைப்பிடிக்கப்பட்ட சமண, பௌத்த மதங்கள் தாங்கள் படைத்தளித்த இலக்கியப் படைப்புகளில் ஊடுபொருளாக மக்கள் வாழ்வாங்கு வாழ்தற்கான அறத்தைப் போதித்திருக்கின்றன. உயிர்களைக் கொல்லும் கொடிய கொலைச் செயலுக்கு எதிரான கருத்துக்களைக் கூறும் சமணம், தனக்கு துன்பம் தரும் ஒன்று, பிறருக்கும் துன்பம் தரும் என்பதை ஒவ்வொரு மனிதனும் உணர வேண்டும். மறந்தும் பிறருக்குத் தீமை விளைவிக்கும் செயல்களை எண்ணக்கூடாது. அவ்வாறு எண்ணியவனுக்கே கேடு விளையும் என்றார். எது உனக்கு இன்னல் புரியுமோ அதனால் அடுத்தவரைப் புண்படுத்தாதே"[14] என்று பௌத்த சமயம் கூறுவதை நினைவில் கொள்ள வேண்டும். நல்லறிவு மனத்தில் செயல்படும்போது நல்லறம் பிறக்கிறது. மனம் தீயனவற்றைச் சிந்திக்கும் போது தீயவிளைவுகள் ஏற்பட்டு அதனால் அடுத்தவர்களுக்குத் துன்பம் செய்ய மனம் எண்ணுகிறது.

"நல்லறம் வாழ்வாங்கு வாழ மனிதனுக்கு வழிகாட்டும் தன்மை கொண்டது. அறமே அறிவு, அறிவே அறம் எனக் கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானிகளாகிய சாக்ரடீசு, பிளேட்டோ போன்றவர்கள் அளித்த வரையறைகளுக்கேற்ப மனிதனுக்குச் செயற்பாட்டு அறிவைத் தந்து, அவ்னைச் செயலறம் பேணும் அறப்பேரறிஞர்களாக வாழத்துணை நிற்பது அறிவியல் என விளக்கம் கூறுவது மரபு என்பர்"[15]. இக்கருத்தின் வாயிலாக மனிதன் நல்வாழ்வு வாழ அறமே தலையாயது என்னும் கருத்து விளங்குகிறது. நல்லனவற்றை மனத்தில் எண்ணும் போதுதான் நல்லொழுக்கம் பிறக்கிறது.

மனிதச் சிந்தனை நல்ல நோக்கத்தில் இருக்கின்ற போதுதான் நற்செயல்கள் நடைபெறும். சிந்தனைகளே பின்னர் செயலாவதால் சிந்தனையில் கவனம் இருக்க வேண்டும். "அறம் என்பதை முப்பட்டைக் கண்ணாடியாகக் கொண்டால் அதன் மூன்று பக்கங்களாக எண்ணம், சொல், செயல் ஆகியன விளங்குகின்றன. எண்ணம் அறத்தின் நிலையாற்றலாகும். சொல் இயக்க ஆற்றலாகும், செயல் இயங்கும் ஆற்றலாகும். இம்மூவகை ஆற்றலும் செயல்படும்போது அதுவே ஒழுக்கமாகிறது. அவ்வொழுக்கம் அறமாகிறது".[16] எனவே செய்கின்ற செயல்களிலும் சிந்தனைகளிலும் தெளிவு வேண்டும் என்பது பெறப்படுகிறது.

பண்டைக்காலம் அறநெறிகள் தழைத்திருந்த காலம் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சிறந்த சான்றுகளாக நின்றிலங்குகின்றன. வாழ்க்கை, சமுதாயம், அரசியல், பண்பாடு, பழக்கவழக்கம் என அனைத்திலும் பண்டைய மக்கள் அறக்கோட்பாடுகளைக் கடைப்பிடித்து வந்தமையினைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்கும் நடக்கின்ற போரில் அறம் தலையாயதாக அன்று கடைப்பிடிக்கப்பட்டது.

***"ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்***
***மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்***
***குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்***
***வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன***
***நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்***
***செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என***
***அறம் பாடிற்றே"[17]***

என்னும் புறப்பாடல் கூறும் கருத்து இங்கு நோக்கத்தக்கது. கொடுமையான பாவச்செயல்களைச் செய்தவர்களுக்குக் கூட விடிவு உண்டு. ஆனால் செய்நன்றி கொன்றவர்களுக்கு எந்நாளும் உய்வு இல்லை என்பதை இதன்வழி அறிய முடிகிறது.

தனிமனிதன் சமுதாயத்தின் அங்கம். அவனை அடிப்படையாகக் கொண்டே அறங்கள் செயல்படுகின்றன. தனிமனிதன் ஒருவன் செய்யும் நற்செயல் அவனைத் தொடர்ந்து அது அவனுடைய குடும்ப அறமாக உயர்வு பெற்று நிலைக்கின்றது. அதனால் ஒவ்வொரு தனிமனிதனும் தன் சிந்தனைகளைச் சீரமைத்து அதன்வழி நல்விளைவை ஏற்படுத்துவது அவசியமாகின்றது. அறம் தனிமனிதனோடும் சமுதாயத்தோடும் நெருங்கிய தொடர்புடையது. ஆதலின் மனிதச் செயல்பாடுகளில் மிகுந்த கவனம் தேவைப்படுகிறது. "மனிதனின் சமுதாய, சமய, பொருளாதார, பண்பாடு நிலைகளில் அறம் முக்கியமான பங்களிப்பைப் பெறுகிறது. அதனால் ஆசைகளும் உணர்ச்சிகளும் அறிவுக்குக் கட்டுப்பட்டிருப்பதால் அதுவே அறமாகும். அறத்தின் குறிக்கோள் மனிதனை முழுமையடையச் செய்ய வேண்டும் என்று பிராட்லி கூறுகிறார்".[18]

பிறருக்கு எவ்வகையிலும் நல்லறம் செய்யாத ஒருவன் தனக்கு மட்டும் நல்விளைவுகள் பெருக வேண்டும் என்று நினைப்பது எவ்வகையிலும் பொருத்தம் இல்லாத ஒன்றாகும். அதனால் ஒருவன் நல்லனவற்றைப் பிறருக்குச் செய்து அதன்வழித் தனக்கு நன்மைகளை எதிர்நோக்க வேண்டும்.

வேதாகமம், "உனக்குப் பிறர் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறாயோ அதனைப் பிறருக்குச் செய்வாயாக"[19] என்று கூறுகிறது. மேற்கண்ட வரையறைகளின் அடிப்படையில் அறம் என்பதற்கு, தருமம், புண்ணியம், வாய்மை, ஈகை, சொற்காத்தல், பெரியவர்களை மதித்தல், கற்பு, அன்பு, ஊழ், தகுதி, சமயம், ஞானம், துறவு, தியாகம், கொடை எனப்பல பொருள்கள் இருப்பதை அறிய முடிகிறது. இவற்றின் அடிப்படையில் அறம் என்றால் நல்ல செயல்களின் தொகுதி என்ற கருத்து பெறப்படுகிறது.

### 1.1.2. அறத்தின் தன்மை

மனித வாழ்க்கை ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் தன்மையது. ஒருவருக்கொருவர் அன்புடனும் நட்புடனும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடனும் நடந்துகொண்டால்தான் சமுதாய இயக்கம் நலம்பெறும். அவ்வாறின்றி ஒருவருக்கொருவர் முரண்பாடு கொண்டு நல்லுறவு பேணவில்லை என்றால் தனிமனிதன் தொடங்கி உலகளாவிய நிலையில் பல்வேறு சிக்கல்கள் தோன்றும். அதனால் சமுதாயத்தில் எது நன்மை விளையக் காரணமாய் அமைவது, எது தீமை விளையக் காரணமாய் அமைவது என்பதை ஒவ்வொருவரும் மனத்தால் உணர்ந்தறிய வேண்டும். பின்னர் நல்லவற்றின் வழி நடத்தல் வேண்டும். ஆன்றோர்கள் சான்றோர்கள் வகுத்துக் கூறிய வாழ்வியல் நெறிகள் அனைத்தும் மனித இனம் பூவுலகில் துன்பமின்றி வாழ்வதற்கு வழிகாட்டுவனவாகும். அவ்வடிப்படையில் நல்லறங்களைப் போற்றும் மாண்பினராக வாழ்வதற்கு ஒவ்வொருவரும் தம்மைத் தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

கம்பராமாயணம் தனிமனித ஒழுக்கத்தின் அருமைத் தன்மையினையும் பிறன்மனை நோக்கப் பேராண்மையினையும் வலியுறுத்துகிறது. சிலப்பதிகாரம் பரத்தமைத் தொடர்பினால் விளையும் வாழ்வின் அழிவை வலியுறுத்துகிறது. நளவெண்பா சூதாடுவதால் விளையும் தீமையைக் கூறுகிறது. மகாபாரதம் மண்ணாசை கூடாது என்பதை வலியுறுத்துகிறது. மேற்கண்ட இலக்கியங்கள் எல்லாம் ஒருவன் எவ்வெவற்றைச் செய்யக் கூடாது என்பதைத் தெளிவாக உணர்த்துகின்றன. அவ்விலக்கியங்களைக் கற்பவர்கள் தங்களிடம் இத்தீய பழக்க வழக்கங்கள் எவையேனும் இருப்பின் அவற்றை அடியோடு விட்டுவிட வேண்டும் என்பதையே உணர்த்துகின்றன எனலாம்.

ஒழுக்கம் உள்ளவர்கள் எந்நாளும் வாழ்வில் தவறான வழியில் செல்வதில்லை என்று உறுதிபூண வேண்டும். அவ்வாறு பூணும் மனவுறுதி என்பது ஒருவனுக்கு வாழ்வில் பெருமை, புகழ், நிறைந்த செல்வம் அத்தனையினையும் தரும். ஒருவன் வாழ்வில் பொருட்செல்வம் பெற்றுவிட்டால் மட்டும் போதாது. அதற்கேற்ற கொடை மனமும் எளிமையான வாழ்க்கையும் அவனிடம் இருக்க வேண்டும். அப்போதுதான் அவனுக்குப் புகழும் பெருமையும் கிடைக்கும். கருமியாக இருப்பின் கஞ்சன் என்னும் பழியே அவனுக்கு எஞ்சி நிற்கும்.

ஒருவன் எச்சூழ்நிலையிலும் தன்னைச் சார்ந்தவர்களுக்கு நன்மை செய்வதையே நோக்கமாகக் கொள்ள வேண்டும். நல்லறங்கள் என்றும் நன்மை விளைவிக்கும் தன்மையன. அவற்றையே தமிழ் இலக்கியங்கள் குறிப்பாகச் சங்க இலக்கியங்களும் சங்க மருவிய கால இலக்கியங்களும் குறிப்பாக உணர்த்தியிருக்கின்றன.

மனித சமுதாயம் நீண்ட நெடிய வரலாற்றை உடையது. காட்டுமிராண்டி நிலையில் இருந்த மனிதன் பின் நாகரிகமடைந்து ஒருவருக்கொருவர் ஒத்துழைக்கத் தொடங்கிச் சமுதாயமாக வாழ முற்பட்ட போதே, அறம் தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

மனிதன் கூட்டமாகச் சேர்ந்து வாழத் தலைப்பட்ட ஆற்றங்கரை நாகரிகங்கள் சிறப்பான அறங்களின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உரியதாகத் திகழ்ந்திருக்க வேண்டும். கி.மு.வின் சில நூற்றாண்டுகளில் மிகச்சிறந்து விளங்கிய சிந்து சமவெளி, ஹரப்பா நாகரிக நகரங்கள் நல்ல கட்டமைப்போடு கூடியனவாய் விளங்கியவை. இவ்வளவு வளர்ச்சி பெற்ற நகரங்களில் அறிவார்ந்த அறம் நிறைந்த மக்கள் கூட்டமும் வாழ்ந்திருத்தல் கூடும். தொல்பொருள் ஆய்வில் கண்டெடுக்கப்பட்ட பல்வேறு தெய்வ

உருவங்கள் வழிபாட்டுத் தன்மையிலான அறங்களையும் நகர அமைப்புகளால் கடைப்பிடிக்கப்பட்ட வாழ்வியல் அறங்களையும் ஊகிக்கச் சான்றாக அமைகின்றன என்பர்.

காலம் காலமாகக் கடந்து வந்த சமூகத்தில் பண்டைக்கால மக்கள் போற்றிப் பாதுகாத்து வந்த சமுதாய அறங்கள் எக்காலச் சமுதாய மக்களும் போற்றிக்காக்கத் தக்கனவாக இன்று வரை விளங்கிக் கொண்டிருக்கின்றன.

வாழ்க்கையில் ஒருவன் பல்வேறு அறங்களை மேற்கொள்வதற்கான சூழலும் களமும் இயல்பாகவே உண்டு. தனிமனித வாழ்வில் ஒருவன் மேற்கொள்ளும் எல்லாச் செயல்களுக்கும் முழுமுதற்காரணமாய் நின்று மனித வாழ்க்கை சிறக்க உதவுபவை நல்லறங்களாகும்.

“பழங்கால மக்கள் பசி, பிணி, பகை, வறுமை ஆகிய வாழ்க்கைப் போராட்டங்களுக்கிடையே இன்பமும் பொருளும் பெறப் பல்வேறு நெறிகளைப் பின்பற்றியிருப்பர். இந்நெறிகளில் பிறருக்குத் தீங்கு பயவாத நல்ல நெறிகளிலேயே ஒழுக வேண்டும் என்ற ஒழுகலாறு கட்டுப்பாடாக – கடமை உணர்வாக மக்களிடையே வளர்ந்து பின் அது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும். மரபொழுக்க நிலையில் இவ்வாறு ஏற்றுக் கொள்ளப்பெற்ற நெறிகளையே அறங்கள் என இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. அறநெறியில் ஈட்டப்பெறாத செல்வமும் இன்பமும் நிலையற்றவை என்னும் நிலை ஏற்பட்டது. வஞ்சனையால் ஈட்டப்பெறும் செல்வமும் இன்பமும் பழியென்றும் கருதப்பட்டன. அறநெறி வாழ்தலே சிறப்பு என்றும் பண்டைத் தமிழர் கருதினர்”[20] என்று பண்டைத் தமிழர்கள் காலம் காலமாகக் கடைப்பிடித்து வந்த அறத்தின் தன்மையினைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

நல்ல செயல்களே நன்மை விளையக் களமாக அமையும் என்பதைக் கூற, “சான்றோருடன் பழகு, உயிர்கொலை தவிர், புலால் உணவைக் கைவிடு, அறிவு பெரியது, கல்வி எல்லையற்றது, ஒருவர் தம் வாழ்நாளில் கற்பது மிகச்சிறிதே. எனவே கல்வியால் செருக்குக்கூடாது. கல்வியிலும் மேன்மையானது ஒழுக்கமே. உள்ளதைக் கொண்டு உள்ளம் மகிழ வேண்டும். கிடைக்காத பொருளுக்கு ஏங்கக் கூடாது. ஊழ்வினைப்படி யாவும் நடக்கும். அதை எவராலும் மாற்ற முடியாது. மக்களின் வாழ்நாள் வரையறுக்கப்பட்டது. மாண்டவர் மீளார், எல்லாம் ஈசன் செயல், செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமையினை இவ்வுலகில் கண்டு உடனே இவ்வுலகத் துறவாமல் தாமரை இலை நீர்போல் ஒட்டியும் ஒட்டாமலும் இவ்வுலக வாழ்க்கையை நடத்த வேண்டும்”[21] என்று ஔவையார் குறிப்பிடுகிறார்.

ஔவையாரின் நோக்கம் அல்லனவற்றை விளக்கி நல்லனவற்றைப் போற்றும் பான்மையில் அமைகிறது. எனவே சான்றோர் கூறிய நல்ல வழியில் நின்று அறத்தின் நன்மையை உணர்ந்து நலம் பல செய்வதை வாழ்க்கையின் முக்கிய நோக்கமாகக் கொள்ள வேண்டும் என்பதை இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

## 1.2. தனிமனித அறம்

சமுதாயம் தனிமனிதர்கள் பலரின் தொகுப்பால் ஆன அமைப்பு, தனிமனிதன் தனக்கான தேவைகள் அனைத்தையும் தானே நிறைவேற்றிக் கொள்ளல் இயலாது. பிறர் துணையுடனோ அல்லது உதவியுடனோ தான் நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். எனவே தனிமனிதன் தன் மனம், சொல், செயல் ஆகிய நிலையில் தூய்மையுடனும் அறக்கோட்பாட்டுடனும் நடந்துக்கொள்ள வேண்டும். தனிமனிதச் சிந்தனை உலகில் நல்ல பல ஆக்கத்திற்குக் காரணமாக அமைவதைப் போலவே பெரும் அழிவிற்கும்

காரணமாக அமைகிறது. எதை விதைத்தாலும் விதைத்ததுதான் அதன் பயனாக விளைந்து வரும் என்பது சொல்லாமலேயே விளங்கும்.

மனிதன் தனித்து நின்று எதனையும் சாதிக்க இயலாது. சமூகத்தோடு சார்ந்து செயல்பட வேண்டும். தனிமனிதன் நினைக்கிற அறம் நல்லதாக இருக்கும்பொழுது சமூகம் முழுமைக்கும் பயன்தரும் அறநிகழ்வுகள் காலந்தோறும் கடைப்பிடிக்கப்பட்டு வருபவை. சொல், செயல், சிந்தனை என அனைத்திலும் அறம் போற்றப்பட்டு வந்த நிலையைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிய முடிகிறது. தனிமனிதனின் வாழ்வு சார்ந்த அனைத்து நிகழ்வுகளிலும் அறம் ஊடுருவி நிற்பதைச் சங்க · இலக்கியங்கள் மெய்ப்பிக்கின்றன.

“பிற உயிர்களிடம் அன்பு செலுத்துவதில் இருந்து வாழ்வின் ஒவ்வொரு நிகழ்விலும் அறம் போதிப்பனவாகச் சங்கப்பாக்கள் திகழ்கின்றன”[22] என்று இரா. அனுராதா தனிமனித அறங்களின் வளர்ச்சிக்குச் சங்க இலக்கியங்கள் ஆற்றிய பணி குறித்து விளக்குகின்றார்.

பண்டைத் தமிழ் இலக்கியங்களுள் ஒன்றான புறநானூறு தனிமனிதன் ஏற்றுப் பயன் கொள்ளத்தக்க நல்ல பல கருத்தாக்கங்களைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது. குறிப்பாகக் கணியன் பூங்குன்றனார் தனிமனித ஒழுக்கத்தின் சிறப்புக் குறித்து எடுத்துரைக்கும் பாடல் உலக சமுதாயத்தை நெறிப்படுத்தும் தன்மை கொண்டதாகத் திகழ்கிறது.

***“யாதும் ஊரே யாவரும் கேளிர்***
***தீதும் நன்றும் பிறர்தர வாரா***
***நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன***
***சாதலும் புதுவ தன்றே வாழ்தல்***
***இனிதுஎன மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்***

*இன்னா தென்றலும் இலமே மின்னோடு*
*வானம் தண்துளி தலைஇ ஆனாது*
*கல்பொரு திரங்கும் மல்லற் பேர்யாற்று*
*நீர்வழிப் படூஉம் புனைபோ லாருயிர்*
*முறைவழிப் படூஉ மென்பது திறவோர்*
*காட்சியின் தெளிந்தன மாகலின் மாட்சியின்*
*பெரியோரை வியத்தலும் இலமே*
*சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"*[23]

எல்லா ஊரும் நம் ஊர்தான். எல்லா மக்களும் நம் மக்கள்தான். தீமையும் நன்மையும் பிறரால் வருவன அல்ல. தாம் செய்கின்ற செயல்களால் தான் அவை வருகின்றன. துன்பம் வருவதும் விலகிச் செல்வதும் இயற்கை. இறப்பும் புதியதல்ல. அது தாயின் வயிற்றில் கருவாக இருக்கும்போதே நிச்சயிக்கப்பட்டுவிடுகிறது. அதனால் வாழ்க்கை இனிதானதென்று மகிழ்வதோ துன்பமானதென்று கலங்குவதோ வேண்டியது இல்லை. வானில் மின்னல் மின்னி, இடி இடித்து, மழை பெய்து காட்டாற்றில் பெருக்கெடுக்கும் வெள்ளத்தில் இடப்பட்ட தெப்பம்போல வாழ்க்கையானது ஊழ்வினை வழியாக அதன் போக்கில் செல்லும். அதனால் பெரியோரைப் பெரியோர் என்று போற்றுவதும், சிறியோரைச் சிறியோர் எனத் தாழ்த்தியுரைப்பதும் வேண்டியது இல்லை என்று குறிப்பிடுகிறார் கணியன் பூங்குன்றனார். தனிமனிதன் தன் செயல்களைச் செம்மைப்படுத்திக் கொண்டாலே போதும். சமுதாயம் நலம்பெறும் என்னும் சிந்தனை இவருடைய பாடலில் ஆழமாக எடுத்துரைக்கப்படுகிறது.

சங்க இலக்கியங்கள் தனிமனித அறத்தை விரிவான நிலையில் எடுத்துரைக்கின்றன. தனிமனிதனே அன்பு, அருள் முதலாகிய அறச்செயல்களின் தோற்றத்திற்கான காரணியாகிறான். அவை அவனிடமிருந்தே தொடங்குகின்றன. அவ்வடிப்படையில் தனிமனிதன் உருவாக்கிக் கொடுக்கும் சமுதாய அறங்களே உலகளாவிய நிலைக்கு மனித

சமூகம் முழுமைக்குமான ஒன்றாக உயர்கின்றது. அதற்கு இயற்கையாக மனித மனதில் அன்பும் அருளும் தேவை. அதன் அடிப்படையிலேயே வள்ளுவர்,

> **"அருள்சேர்ந்த நெஞ்சினோர்க் கில்லை இருள்சேர்ந்த**
> ***இன்னா உலகம் புகல்"*[24]**

என்று குறிப்பிடுகிறார். மனதில் அருள்நிறைந்த குணத்தை உடையவர்கள் நரகம் என்னும் கொடிய உலகத்துக்கு இறப்பின்பின் செல்வதில்லை என்பது இதன் பொருளாகும். தனிமனித அறங்கள் சமுதாய அறங்களாக விரிவடையும் தன்மைமிக்கன. தனிமனிதர்களால் கடைப்பிடிக்கப்பட்டு ஒழுகப்பெறும் பல்வேறு அறங்கள் காலப்போக்கில் பலராலும் கடைப்பிடிக்கப்படும்போது அவை பொது அறங்களாகத் தோற்றம் பெற்று அது பண்பட்ட அறநிலையாக இடம்பெற்று விடுகிறது. "பிற உயிர்க்குத் தீங்கு செய்யாத அறங்கள் நல்லனவற்றையே நினைக்கவும் பேசவும் செயல்படுத்தவும் உருவாகி வளர்ந்து நிற்கும் அறங்கள் எல்லாம் இம்முறையின் வாயிலாக உருவானவையே"[25] என்று இரா. அனுராதா குறிப்பிடுகிறார். ஆகத் தனிமனித அறங்களே குடும்ப, சமுதாய உலகளாவிய அறங்களாக மாற்றம் பெறுகின்றன என்பது புலனாகிறது.

## 1.3. குடும்ப அறம்

தனிமனித ஒழுக்கம் சிறப்புப் பெறும் போது அத்தனிமனிதன் வாழும் குடும்பம் அறநிலையமாக மாற்றம் பெறுகிறது. குடும்பமே பல்வேறு அறங்களும் அடிப்படையாய் பின் அவை சமுதாய உலகளாவிய அறமாக மாறுவதற்குத் துணை நிற்கின்றது. அதனாலேயே மனித சமுதாயத்தின் உயிர் நாடியான குடும்பம் என்னும் அமைப்பு மிகமிகப் பண்பட்டதாகும். மனிதர்கள் நாடோடி நிலையில் இருந்து நாகரிக வளர்ச்சிக்கு மாற வித்திட்டதே குடும்பமுறை அமைப்பு ஆகும். ஆற்றங்கரைகளில் மனிதன் தங்கி வாழத் தலைப்பட்டபோது கூட்டுக்குடும்ப அமைப்பு தோற்றம் பெற்றது. இன்றைய நிலையில்

பெரும்பான்மையான நிலையில் கூட்டுக்குடும்ப முறை கைவிடப்பட்டுத் தன்பிள்ளை, தன்பெண்டு, சோறு, வீடு என்னும் நிலைகளைத் தனித்தனியே காணும் நிலை உருவாகிவிட்டது. ஒருவருக்கொருவர் புரிந்து கொள்ளும், பிறர்க்கு நிலையும் உதவும் மனப்பான்மையும், விட்டுக்கொடுக்கும் மனநிலையும் கூட்டுக்குடும்ப அமைப்பில் தோற்றம் பெற்றவை. "கூட்டுக்குடும்ப அமைப்பை நாம் புறக்கணித்தாலும் அப்பாதையில் இன்னும் வாழும் பழங்குடியினர் மலைவாழ் மக்கள் ஆகியோர் இம்முறையை இன்னும் கடைப்பிடித்து வருகின்றனர். உயரிய அறங்கள் எல்லாம் பிறக்கும் இடமாகக் குடும்பங்கள் திகழ்கின்றன"[26] என்பர்.

கணவனும் மனைவியும் இணைந்து நடத்தும் குடும்பம் இருவரின் ஒற்றுமையைப் பொறுத்தே நலம்பெறும். சங்க இலக்கியங்கள் கணவன் மனைவியின் உறவைப் பலகாலும் சிறப்பித்துப் பேசியிருக்கின்றன.

***"இம்மை மாறி மறுமை யாயினும்***
***நீயா கியரென் கணவனை***
***யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே"[27]***

என்றும்,

***"சாதல் அஞ்சேன் அஞ்சுவன் சாவிற்***
***பிறப்பு பிறி தாகுவ தாயின்***
***மறக்குவென் கொல் என் காதல னெனவே"[28]***

என்றும் சங்கத்தலைவி தன் கணவனைப் போற்றும் தன்மையை அறிய முடிகிறது. வறுமைப்பட்ட வாழ்க்கை எனினும் தலைவன் தலைவியுடன் இணைந்து வாழும் இல்லறமாகிய குடும்ப வாழ்க்கையை நலம் பொருந்தியது என இலக்கியங்கள் பகர்கின்றன. இதனை,

***"உள்ளினென் அல்லனோ யானே உள்ளி***
***நினைத்தனன் அல்லனோ பெரிதே நினைத்து***
***மருண்டினன் அல்லனோ உலகத்துப் பண்பு"[29]***

என்றும்

***"புணரின் புணராது பொருளே பொருள்வயிற்***
***பிரியின் புணராது புணர்வே"[30]***

எனவும்

***"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்***
***வல்வரவு வாழ்வார்க்கு உரை"[31]***

என்பதாகவும்

***"மனங்கமழ் கானல் இயைந்தநம் கேண்மை***
***ஒருநாள் பிரியினும் உய்வரிது"[32]***

என்றும்

***"ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்***
***ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"[33]***

என்ற நிலையிலும்

***"விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்***
***அருநெறி ஆயர் மகளிர்க்கு இருமணம் கூடுதல் இல்இயல் பன்றே"[34]***

என்றும் சங்கப் புலவர்கள் தங்கள் படைப்பின்வழி வலியுறுத்துவதைக் காண முடிகிறது. கணவனும் மனைவியும் தங்களுக்குள் பிணக்கின்றி இணைந்து வாழ்வதே இல்லறம். வாழ்க்கையில் பொருளே முக்கியம் என்றிருந்தால் இல்வாழ்க்கையில் இன்பம் தப்பிப்போகும். ஒரே ஆடையை இரண்டாகக் கிழித்து உடுத்திக் கொள்ளும் வறுமையான வாழ்க்கை வந்தாலும் அதிலும்கூட அன்புடைய வாழ்க்கை வாழ்வதே சிறந்தது என்னும் அறங்களை மேற்கண்ட பாடலடிகள் கற்பிக்கின்றன.

குடும்பங்கள் உலக சமுதாயத்திற்குத் தேவையான பிள்ளைகளைக் கொடுக்கின்றன. அக்குழந்தைகளே காலப்போக்கில் பெரியவர்களாக வளர்ந்து சமூகத்தைக் கட்டிக்காக்கும் திறமுடையவர்களாக மாறுகின்றனர். குழந்தைகள் நல்லவர்களாக வளர்ந்தால்தான் சமூகம் வளம்பெறும். குடும்பம் நற்பேறு பெறும். இதனையே,

***"இம்மை யுலகத் திசையொடு விளங்கி***
***மறுமை யுலகமும் மறுவின் றெய்துப***
***செறுநரும் விழையுந் செயிர்தீர் காட்சி***
***சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்***
***பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்***
***வாயே யாகுதல் வாய்த்தனம்"***[34]

என்றவாறு சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. தனிமனித அறத்தின் ஊற்றாக அமையும் குடும்ப வாழ்க்கை உலகளாவிய நிலையிலான அறக்கோட்பாடுகளுக்கு வித்திடுகிறது. குடும்ப அறமே உலகளாவிய நிலையில் சிறப்படையும் என்பதனைப் புறநானூற்றுப் பாடல் ஒன்று விளக்குகிறது. குழந்தையைப் பெற்றெடுப்பது தாய்க்குரிய கடமை. அவனை கல்வியறிவு தந்து அறிவுடையவனாக ஆக்குதல் தந்தையின் கடமை. தன் அரசாட்சியின் கீழ் வாழும் குடிமகனுக்கு நல்ல ஒழுக்கத்தைக் கற்பித்தல் அரசனின் கடமை, போர்புரியப் படைக்கலன்களை உருவாக்கிக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடமை. இளமை வாய்ந்த இளைஞனின் கடமை என்னவெனின் பரந்த போர்க்களத்தில் யானையைக் கொன்று போரில் வெற்றி பெறுதல் என்றவாறு பாடற்கருத்து அமைகிறது.

***"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே***
***சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே***
***வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடனே***
***நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே***

*ஒளிறுவாள் அருஞ்சம முருக்கிக்*
*களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே”*[35]

குடும்பம் பல்வேறு அறங்களைப் பெற்றுக் கொடுத்து அவற்றின்வழி சமுதாய மேம்பாட்டுக்கு வழிகோலுகிறது. சங்கப்புலவர்கள் கூறிய அறங்கள் எக்கால மக்களுக்கும் சிறந்த வழிகாட்டியாகத் திகழும் தன்மையன.

*“நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின்”*[36]
*“மனைக்கு விளக்காகிய வாள்நுதல் கணவன்”*[37]
*“தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்”*[38]
*“பொழுது அளந்தறியும் பொய்யா மாக்கள்”*[39]
*“இருந்து ஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி*
*வேளாண்மை செய்தற் பொருட்டு”*[40]
*“அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்*
*துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்”*[41]
*“அல்லி லாயினும் விருந்துவரி னுவக்கும்*
*முல்லை சான்ற கற்பின் மெல்லியல்*
*நலமனை நனிவிருந்தயரும்*
*கைது இன்மையின் எய்தாம் மாறே”*[42]

என்ற பாடல்களின் மூலம் நல்லது செய்ய இயலாவிட்டாலும், கெட்டனவற்றைச் செய்யாதிருங்கள் என்பதையும் கணவனே மனைவிக்கு விளக்கு, கணவன் கொடைப்பண்பின்வழி இல்லறத்தில் அறவோரையும், இரவலரையும், அந்தணரையும் போற்றுவதற்கு உரிய வகையில் அமைகிறது என்பதையும் சங்கப்பாக்கள் கற்பிக்கின்றன.

## 1.4. சமுதாய அறம்

சமுதாயம் என்பது பல்வேறு மதம், மொழி, இனத்தால் வேறுபட்ட மக்கள் கூடி வாழும் ஓர் அமைப்பு. நாகரிகம் அடைந்த மக்கள் தங்கள் வசதிக்காகப்

புதியன பலவற்றைப் படைத்து அமைத்துக்கொண்டதின் வழியாகச் சமுதாயம் மேம்பட்டு விளங்குகிறது.

தனித்தனியாக இருக்கும் பல்வேறு மலர்களும் ஒன்றிணைந்து ஒரு மாலையாதல் போலப் பல்வேறு திறப்பட்ட மக்களும் ஒன்றுபட்டுக் கூடி வாழும் தன்மையது சமுதாயம். உலக நாகரிகத் தோற்றத்தின் உயிர் நாடியாக விளங்குவது சமுதாய அமைப்பாகும். இது தனிமனித நிலையில் இருந்து படிப்படியாக மன அளவில் வளர்ச்சி பெற்று ஆண், பெண் இணைந்து சந்ததிகளை உருவாக்கிக் குடும்ப அமைப்பாக மலர்ந்து இதுவே பின்னாளில் முந்தைய தலைமுறைகளோடு இணைந்த ஓர் கூட்டுக்குடும்ப அமைப்பாகப் பரிணமித்து இன்றைய வளர்ச்சியடைந்த சமுதாயமாக மாற்றம் பெற்றிருக்கிறது.

சமுதாய வாழ்க்கைமுறை ஒன்றுடன் ஒன்று இணைந்தும் வேறுபட்டு அவை தமக்குள் ஒன்றுடன் ஒன்று முரண்பட்டு உராயும் தன்மை உடைய நிகழ்வுகளால் கட்டமைக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள் ஒருமுன் மாதிரிச் சமுதாயம் எப்படி இருக்க வேண்டும். அதன் தன்மைகள் எத்தகையன என்பதை விரிவான நிலையில் எடுத்துக் கூறியிருக்கின்றது. சங்க இலக்கிய நூல்களான ஐங்குறுநூறு சமுதாய அறத்தை எடுத்துக் கூறுவதில் தனிச்சிறப்புப் பெற்றதாகத் திகழ்கிறது.

தலைவி, தலைவன் பரத்தையின் பொருட்டாகப் பிரிந்து சென்று மீண்டும் இல்லத்திற்கு வருகிறான். தோழியிடம் இத்தனை காலமும் என்னைப் பிரிந்து நீங்கள் எவ்வாறு ஆற்றியிருந்தீர்கள் என்று அவன் கேட்க, அவர்களோ, நாங்கள் சமுதாயம் நாடு நலம்பெற வாழ்த்திக் கொண்டிருந்தோம் எனக் கூறுகின்றனர். இதனால் அவர்கள் தங்களின் நலனைவிடத் தம்மைச் சார்ந்த சமுதாயம் நலம்பெற வேண்டும் என்ற அவர்களின் நோக்கம் தெளிவாக வெளிப்படுகிறது.

நாட்டில் நெல்வளமும் பொன்வளமும் பெருக வேண்டும். வயல்கள் நிறைந்த விளைவைத் தொடர்ந்து தரவேண்டும். அவற்றைப் பெறுவதற்கு இரவலர்கள் தொடர்ந்து வர வேண்டும். பால் வளம் பெருக வேண்டும். காளைகள் பெருக வேண்டும். நாட்டில் எங்கும் பசி இல்லாத சூழல் வேண்டும். பிணிகள் நீங்க வேண்டும். பகை இருக்கக்கூடாது. நாட்டில் அந்தணர்கள் வேதம் ஓத வேண்டும். அரசு சிறக்க வேண்டும். நல்லறம் நிலைபெற வேண்டும். நல்லவை சிறக்க வேண்டும். தீயவை அழிய வேண்டும் என்று ஒரு சமுதாயம் மேம்பட வேண்டிய செயல்பாடுகளைச் சுட்டி அச்சமுதாய நலனுக்காக வேண்டும் தன்மையினை ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் தெளிவாக விளங்குகின்றன.

*"நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க"*[44]

*"விளைக வயலே வருக விரவலர்"*[45]

*"பால்பல ஊறுக பகடுபல சிறக்க"*[46]

*"பசியில் லாகுக பிணிசே ணீங்குக"*[47]

*"பகைவர் புல்லார்க பார்ப்பா ரோதுக"*[48]

*"அறநனி சிறக்க அல்லது கெடுக"*[49]

*"அரசுமுறை செய்க களவில் லாகுக"*[50]

*"நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக"*[51]

எனச் சமுதாயம் நலம்பெறும் வண்ணம் அந்தணர்கள் வேதம் ஓதி அறம் நிறைந்த மனத்தினராய் இருந்தமையினை,

*"அறம்புரி யருமறை நவின்ற நாவின்*
*திறம்புரி கொள்கை யந்தணிர்"*[52]

என்னும் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. அந்தணர்களின் வாழ்க்கை சமுதாயத்தினருக்கு அறவழியைக் கற்றுக் கொடுக்கும் தன்மையனவாக விளங்கியதைச் சங்கப்பாக்கள் தெளிவுப்படுத்தியிருக்கின்றன.

*"சிறந்த வேதம் விளங்கப் பாடி*
*விழுச்சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து*
*நிலமமர் வையத்து ஒருதா மாகி*
*உயர்நிலை உலகம் இவநின்று எய்தும்*
*அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின்*
*பெரியோர் மேஎய் இனிதி னுறையும்"*[53]

எனவும்,

*"செம்பூ முருக்கி னன்னார் களைந்து*
*தண்டொடு பிறந்த தாழ்கமண் டலத்துப்*
*படிவ உண்டில் பார்ப்பன மகனே*
*எழுதாக் கற்பி னின்சொல் உள்ளும்"*[54]

என்றவாறும்,

*"ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்தல்*
*ஈத லேற்புதலன் றானுபுரிந் தொழுகும்"*[55]

என்றும் சங்கப்பாடல்கள் அறத்தின் மேன்மையைச் சுட்டுகின்றன.

அறம்புரியந்தணர்களும் வணிகர்களும் உழவர்களும் மருத்துவர்களும் அறநிலையங்களும் நன்மக்களும் சமத்துவக் கொள்கையாளர்களும் சமுதாயம் வாழ்வாங்கு வாழ்வதற்கான நிறைவான அறங்களைக் கொண்டிருந்தன. இவை தமிழகத்துக்கு மட்டுமன்றி உலகிற்கே வழிகாட்டியாக விளங்கின. இத்தகைய அறக்கோட்பாடுகளால் சங்க சமுதாயம் திறம் மிக்கதாய் பலர் பாராட்டும் நிலையினதாக விளங்கியது.

## 1.5. உலகளாவிய அறம்

அறங்களுள் தனிமனித, சமுதாய, குடும்ப அறங்கள் காலப்போக்கில் பக்குவடைந்து உலகப் பொதுமை அறங்களாக மாற்றமடையும் தன்மையன. தனிமனிதன் வாழ்நாளில் கடைப்பிடிக்கும் நல்லறங்களான நல்லனவற்றையே

பேசுதல், நல்லனவற்றையே சிந்தித்தல், நல்ல செயல்களையே செய்தல் ஆகியவற்றைத் தவறாமல் கடைப்பிடித்து வரும்போது அவன் ஏற்றுக்கொள்ளும் இல்லறத்திலும் அவ்வறங்கள் தொடரும். இல்லறத்தில் மனைவியுடன் இணைந்து இன்சொல் பேசுதல், விருந்து உபசரித்தல், அறவோர்களையும் இரவலர்களையும் போற்றல், அவ்வாறாகக் குடும்பத்தில் இருந்து மேற்கொள்ளும் அறங்கள் சமுதாயத்தைக் கவனிக்கச் செய்கின்றன. சமுதாய மக்கள் அவற்றைக் கடைப்பிடித்துப் பொதுமைப்படுத்தும்போது தனிமனித அறம் குடும்பம், சமுதாயம் என்ற நிலைகளை எல்லாம் தாண்டி உலகப்பொதுமை பெற்ற அறமாக நிலைபெறுகிறது. சங்கப்பனுவல்களில் இவ்வாறான பொதுமை அறங்கள் உலக சமுதாயத்திற்கு வழிகாட்டும் வகையில் நிறைந்திருக்கின்றன.

சங்கப் பனுவல்களில், குறிப்பாக புறநானூற்றில் உலகளாவிய அறங்கள் பலவற்றைக் காணமுடிகிறது. நாடாளும் மன்னன் நல்லவனாக இருந்தால்தான் நாடு நலமும் வளமும் அடையும். மன்னன் நல்லவனாக ஆட்சித்திறம் மிக்கவனாக இல்லாவிட்டால் அதைவிடப் பெரியகேடு அந்நாட்டுக்கு வேறு ஒன்றும் இல்லை. அதனால் சங்க இலக்கிய நூலான புறநானூறு பல்லாற்றானும் மன்னனுக்குரிய தகுதிகளை விரிவான களத்தில் வரையறுத்திருக்கிறது.

மோசிகீரனார், நாடு எவ்வளவு வளம் நிறைந்ததாக இருந்தாலும் அதனால் பயன் இல்லை. நாட்டை நல்வழியில் நடத்திச் செல்ல நல்ல தலைமையுடைய அரசன் வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

***“நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே***
***மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்***
***அதனால் யானுயிர் என்பது அறிகை***
***வேன்மிகு தானை வேந்தர்க்குக் கடனே”***[55]

நாட்டு மக்களின் உயிரைக் காப்பது நெல்லும் நீரும் அல்ல. நாடாளும் நல்ல திறமுடைய மன்னனே என்பது மேற்கண்ட பாடலடிகளின் சாரமாகும்.

நாடாள்பவர்கள் நடுவு நிலைமையோடு இருந்து சோம்பல் இல்லாமல் கடமையாற்ற வேண்டும் என்பதனை,

*"முறை வேண்டுநர்க்கும் குறைவேண் டுநர்க்கும்*
*வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி*
*இடைத் தெரிந்து உணரும் இருள்தீர் காட்சி.*
*கொடைக் கடன் இறுத்த கூம்பா உள்ளத்து*
*உரும்பில் சுற்றமொடு இருந்தோன்"*[56]

என்னும் பாடலடிகள் இதனை எடுத்துக்காட்டுகின்றன.

*"மூத்தோர் மூத்தோர் கூற்றம் உய்த்தெனப்*
*பால்தர வந்த பழவிறல் தாயம்*
*எய்தினம் ஆயின் எய்தினம் சிறப்பெனக்*
*குடிபுரவு இரக்கும் கூறில் ஆண்மைச்*
*சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே*
*மண்டமர்ப் பரிக்கும் மதனுடை நோன்தாள்*
*விழுமியோன் பெருகுவேன் ஆயின் தாழ்நீர்*
*அறுகய மருங்கின் சிறுகோல் வெண்கிடை*
*என்நூழ் வாடுவறல் போல நன்றும்*
*நொய்தால் அம்ம தானேமையற்று*
*விசிம்புற ஓங்கிய வெண்குடை*
*முரசுகெழு வேந்தர் அரசுகெழு திருவே"*[57]

என்னும் பாடலில் முதியோர் இறந்ததும் அரசுப்பொறுப்பேற்கும் மன்னவனின் மனநிலை ஆட்சி நடத்தும் நிலை என இருமன இயல்புகளில் அடங்குமெனக் கூறுகிறது இப்பாடல்.

குடிமக்களின் வரிப்பணத்தைப் பிரித்து நல்வழிகளில் செலவிட்டுக் குடிகளைக் காத்தல் என்பது அரசியல் திறமற்ற மன்னனுக்கும் பாரமாக இருக்கும். மனத்திண்மையும் பேராற்றலும் நிறைந்த மன்னனுக்கு அது பாரமாக

இல்லாமல் பாரமற்ற தக்கையாகவே இருக்கும் என்று கூறப்படுகிறது. மன்னன் சிறந்த ஆளுமைப் பண்பு உள்ளவனாக இருந்தால் மட்டுமே அவன் எதிர்வரும் சிக்கல்களைக் கண்டு அச்சம் கொள்ளாதவனாக இருப்பான் என்பதைப் பாடல் எடுத்துக்காட்டுகிறது.

மன்னன் நாடாளும் மக்களின் நிலையை அறிய வேண்டும். அவர்களின் நிலைக்கேற்ப வரி வாங்க வேண்டும். இன்றேல் அவனோடு நாடும் கெட்டழியும் என்று பிசிராந்தையார் அறிவுரை கூறியிருக்கிறார். பாண்டியன் அறிவுடை நம்பிக்கு அறம் உணர்த்தப்பட்டிருப்பினும் பாடலில் அடங்கியிருக்கும் அறக்கருத்து உலகாள்பவர்களுக்குச் சிறந்த அறச் சிந்தனையைப் போதிப்பதாக அமைகிறது.

***"காய்நெல் அறுத்தக் கவளங் கொளினே***
***மாநிறை வில்லதும் பன்நாட் காகும்***
***நூறு செறு வாயினும் தமித்துப்புக் குனினே***
***வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்***
***அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே***
***கோடி யாத்து நாடுபெரிது தந்தும்***
***மெல்லியன் கிழவனாகி வைகலும்***
***வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு***
***பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்***
***யானை புக்க புலம்போலத்***
***தானு முண்ணான் உலகமுங் கெடுமே"[58]***

நாட்டின் நிலையினை அறியாமல் மக்களிடம் அதிகமான வரி வசூலித்த பாண்டிய மன்னனுக்காகப் பிசிராந்தையார் மேற்கண்ட பாடலை இயற்றியிருக்கிறார். யானை படுக்கின்ற அளவு சிறிய இடத்தில் விளைந்த நெல்லை அறுத்து அரிசியாக்கி உணவு சமைத்துக் கவளமாக யானைக்குக் கொடுத்தால் அது பல நாட்களுக்கு உணவாகும். அதனை விடுத்து யானை

தானே வயலில் சென்று உண்ணப்புகுந்தால் அதன் வாயில் செல்வதைவிடக் காலில் மிதிபட்டு அழிவது அதிகமாக இருக்கும். மன்னன் அளவறிந்து வரி வாங்கினால் நாடும் நன்றாக இருக்கும். மன்னனும் நன்றாக இருப்பான். அளவின்றி வரி வாங்கினால் நாடும் மன்னனும் கெட்டழிய நேரிடும் என்ற கருத்தை மன்னனுக்கு ஓர் அறிவுரை போலவே கூறுகிறார்.

நாடு மன்னனைச் சார்ந்திருக்கிறது. அவன் நல்லறங்களைச் செய்தால் தான் நாடு நலம் பெறும். இன்றேல் பழியும் பாவமும் அவனை வந்தடையும் என்னும் சிந்தனையைக் கூறும் முகமாக உலகமெங்கும் உள்ள ஆட்சியாளர்கள் அனைவரும் அறக்கோட்பாட்டுடன் நடக்க வேண்டியதன் முக்கியத்துவத்தை உணர்த்தியிருக்கிறார்.

மனத்தின் தூய்மை, கொடை, அன்பு, அருள், வீரம் முதலான நிலைகளில் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் அறச்சிந்தனைகள் அனைத்தும் தனிப்பட்ட முறையில் என்றல்லாமல் உலகளாவிய நிலையில் அனைவரும் ஏற்றுக் கடைப்பிடிக்கும் தன்மையனவாக விளங்குகின்றன. எளிமையும், நுட்பமும், மிக்க கருத்துக்கள் மக்கள் மனத்தைச் செம்மைப்படுத்தி உலகளாவிய அறங்களாகத் தோற்றம் பெறுவதற்கு உதவியிருக்கின்றன. இவ்வாறாகச் சங்க இலக்கியங்களில் அரசியல், வாழ்க்கை சார்ந்த நிலைகளில் உலகளாவிய அறங்கள் சிறந்து விளங்குகின்றன.

## 1.6. அறங்கள் வாழ்வில் இடம்பெறல்

அறங்கள் நல்ல செயல்களின் தொகுதிகளாக அமைகின்றன. அவ்வாறான அறங்கள் நன்மைகளைச் செய்பவர்களுக்கு நல்விளைவை வாழ்க்கையில் ஏற்படுத்துகின்றன. சங்க இலக்கியங்கள் அறங்கள் செயல்படும் விதத்தை விரிவான களத்தில் எடுத்துக் கூறியிருக்கின்றன. பொதுவான நிலையில் பேசப்பட்டிருக்கும் அறங்கள் அனைவரும் ஏற்றுப் போற்றத்தக்க

நிலையினவாக விளங்குகின்றன. நல்லவர்களால் இவ்வுலகம் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறது என்று குறிப்பிடுகிறார் சங்கப்புலவர். நற்குணம் உடையவர்கள் உலகில் இருப்பதனால் நல்லறம் நிறைந்திருக்கிறது. நல்லறம் செய்பவர்கள் இல்லாவிட்டால் இந்த உலகமானது மண்ணுக்குள் என்றோ அழிந்துவிட்டிருக்கும் என்கிறது சங்கப்பாடல் ஒன்று.

***"பண்புடையார்ப் பட்டுண்டுலக மதுஇன்றேல்***
***மண்புக்கு மாய்வது மன்"***[59]

இப்பாடல் உலக நிலைபேற்றுக்கு நல்லறம் தேவை என்பதை வலியுறுத்துகின்றது. நல்லறிவு உடையவர்கள் சமூகத்திற்கு நலம் பயக்கும் செயல்கள் செய்வதையே முழுமுதல் நோக்கமாகக் கொண்டவர்களாவர். அவர்களின் சிந்தனை சமூகத்திற்கு நல்ல செயல்களை மேற்கொள்வதையே முதன்மையாகக் கொண்டிருக்கும்.

***"மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்***
***உரஞ்சா செய்யார் உயர்தவம் வளம்கெடப்***
***பொன்னும் கொள்ளார் மன்னர்"***[60]

என்னும் பாடல் மருந்துப் பொருட்களைத் தரும் மரமேயாயினும், அறிவுடையவர்கள் மரம் பட்டுப் போகும் அளவு மரத்தைத் துன்புறுத்தி மருந்தை எடுக்க மாட்டார்கள் என்று குறிப்பிடுகிறது. இக்கருத்தைக் கொண்டு அறிவுடையவர்களின் தெளிவான மனநிலையை நாம் அறிந்துகொள்ள முடியும்.

கணியன் பூங்குன்றனார்,

***"தீதும் நன்றும் பிறர்தர வாரா"***[61]

என்று குறிப்பிடுகின்றார். நன்மையும் தீமையும் பிறரால் வருவன அல்ல. நாம் செய்யும் செயல்களாலேதான் வருகின்றன என்பது இதன் பொருள். ஆக நன்மை செய்தால் நல்விளைவும், தீமை செய்தால் தீயவிளைவும் ஏற்படும் என்பது இதன் மையப் பொருளாகும்.

***"நல்லது செய்தல் ஆற்றீராயினும்***
***அல்லது செய்த லோம்புமின்"[62]***

என்னும் சங்கப்பாடல் நல்லனவற்றைச் செய்ய இயலாவிட்டாலும் கூடத் தீயசெயல்களைச் செய்யாமல் இருங்கள் அதுவே ஒரு நல்லறமாகும் என்று குறிப்பிடுகிறது.

***"ஆன்முலை அறுத்த அறனில் லோர்க்கும்***
***மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்***
***குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்***
***வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன***
***நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்***
***செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென***
***அறம்பா டிற்றே ஆயிழை கணவ"[63]***

இப்பாடலில் எத்தகைய கொடுமை செய்தவர்களுக்கும் விடிவு உண்டு. ஆனால் ஒருவர் செய்த நன்றியைக் கொன்றவர்களுக்கு எவ்வகையிலும் விடிவு என்பது இல்லை என்னும் செய்தி தெளிவுப்படுத்தப்படுகிறது. நல்லன செய்தால் நன்மை வந்து சேரும் எனச் சங்க இலக்கியங்களில் இடம் பெறும் பாக்கள் தெளிவுபடுத்தியுள்ளன. சமுதாயத்திற்குப் பயன் வழங்கும் அடிப்படையில் தொழிலாற்றுபவர்களின் வாழ்க்கை அறம் சார்ந்ததாகவே இருக்கும் என்பதை,

***"ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்***
***கோவலர் வாழ்விலோர் கொடும்பா டில்லை"[64]***

என்னும் சங்கப்பாடல் அறமுறைப்பட்ட வாழ்க்கை வாழும் கோவலர்களின் இயற்கையோடியைந்த வாழ்க்கை முறையைத் தெளிவாக்குகின்றது. அறங்கள் எல்லோரும் நல்லனவற்றையே தனதாகக் கொண்டிருப்பவை. தீய செயல்களை மேற்கொள்ளும் போது தீய செயல்கள் அறமல்லாதனவாகின்றன. அறமல்லாச் செயல்கள் மனிதவாழ்வில் தீமையை ஏற்படுத்தக் கூடியவை. எனவே, நன்மை

செய்தால் வாழ்வில் நன்மைகள் கூடிவரும் என்பதையும் தீமைகள் செய்தால் தீயவிளைவுகள் கூடிவரும் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும் என்பதைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.

### 1.6.1. அறங்கள் வாழ்வில் செயல்படும் முறை

சங்க இலக்கியங்கள் அறங்களை வாழ்வியல் நோக்கில் தெளிவுபடுத்தியிருக்கின்றன. மனிதன் செய்யும் நல்லறங்களும் தீய செயல்களும் வாழ்வில் நன்மைக்கும் தீமைக்கும் காரணமாக அமைகின்றன. தீய செயல்கள் செய்தால் அதற்கான தண்டனை உண்டு என்பதை இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன. பண்டைக் காலத்தில் குற்றம் புரிந்தவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட்டன. மன்னனின் ஆட்சியின் கீழ் கடுமையான விதிமுறைகள் குற்றத்திற்கு எதிராக வகுக்கப்பட்டு அவை செயல்படுத்தப்பட்டன.

> ***“கடும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்***
> ***திருநுதற் குறுமகள் அணிநலம் வௌவிய***
> ***வறனிலாளன் அறியேன் என்ற***
> ***திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்***
> ***முறியாப் பெருங்கிளை செறியப் பற்றி***
> ***நீறுதலைப் பெய்த ஞான்றை”[65]***

என்னும் அகநானூற்றுப் பாடலில் ஏமாற்றியவனை மரத்தில் கட்டி வைத்து அவன் மீது சுண்ணாம்பு நீரை ஊற்றிய செய்தி பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆகக் குற்றம் செய்தல் அறம் கடவுளாக நின்று தண்டிக்கும் என்பது பெறப்படுகிறது. குற்றம் செய்தவரைத் தண்டிக்கும் உரிமை இறைவனுக்கும் மன்னனுக்கும் உண்டு என்னும் பான்மையில் குற்றம் செய்தவர்களை மன்னன் தண்டிக்கும் தன்மையினை,

> **“குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்**
> **வடுவன்று வேந்தன் தொழில்”[66]**

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. சங்க இலக்கியங்கள் நல்லறம் செய்தால் நன்மை விளையும் என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கின்றன. அவ்வடிப்படையிலேயே ஒவ்வொரு அறத்தையும் மக்கள் மனம் கொள்ளும் வண்ணம் எடுத்துரைக்கின்றன. தான் பிறருக்குக் கொடுத்து வாழ்வது நல்லறம். ஈகைக்குணம் உடையவன் எந்நாளும் புகழோடு வாழும் பெருமை உடையவன் என்பதை அறிய முடிகிறது.

***"ஈதல் இசைபட வாழ்த லல்லது***
***ஊதிய மில்லை உயிர்க்கு"[67]***

என்னும் பாடலடிகள் ஈகையின் சிறப்பைத் தெளிவாக வலியுறுத்துகின்றன. இல்லை என வந்தவருக்குக் காலத்தால் உதவுதல், உணவிடல், இயன்ற உதவிகள் செய்தல் முதலிய அறச்செயல்கள் செய்தவருக்குத் தக்க காலத்தில் நல்ல பயன் கிடைக்கும். எனவே வாழ்வில் நல்லறங்களை முயன்று செய்தல் நலம்.

## 1.7. நல்லறங்கள் செய்ய வேண்டியதன் தேவை

நல்லறங்கள் மக்களினத்திற்கு நல்விளைவைத் தரும் இயல்புடையன. பண்டைத் தமிழ் இலக்கியங்கள் சிறிதளவும் பிறருக்குத் துன்பம் செய்யக்கூடாது என்பதைத் தெளிவாக வலியுறுத்துகின்றன. நல்லறங்களால் தான் நாட்டைச் செம்மைப்படுத்த இயலும் நல்லறங்கள் நல்லன விளையும் களமாக இயலும் என்பது பட்டினப்பாலையில்,

***"காடு கொன்று நாடு ஆக்கி***
***குளம் தொட்டு வளம் பெருக்கி***
***பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி***
***கோயிலொடு குடி நீரீஇ***
***வாயிலோடு புழை அமைத்து***
***ஞாயில் தொறும் புதை நிறீஇ"[68]***

என்றவாறாக வரும் அடிகளில் கரிகாலன் செய்த அறச்செயல்கள், கட்டமைப்புச் செயல்கள் விளக்கப்படுகின்றன. இவை கரிகாலனின் ஆளுமைப் பண்பை வெளிக்காட்டுவனவாகும். கரிகாலன் செய்த அறப்பணிகள் மக்கள் வாழ்க்கையை உயர்த்தும் தன்மையனவாக அமைந்து அறச்செயல்கள் விளையும் களமாயின. நல்லறங்கள் நல்விளைவை ஏற்படுத்தும் தன்மையவை. ஆதலால் சங்கப் புலவர்களால் அறமல்லாச் செயல்கள் கடிந்துரைக்கப்பட்டன.

பெரும்பாணாற்றுப்படையில் தொண்டைமான் இளந்திரையன் செய்த அறச்செயலால் அனைவரும் மகிழ்ந்திருந்த தன்மையும் மன்னன் நிலையும் நல்லறங்கள் செய்ய வேண்டியதன் அருமையை உணர்த்துகிறது. பெற்றவர்களின் மகிழ்ச்சியே வழங்குவோனுக்குச் சிறந்த செல்வம் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை பறைசாற்றுகிறது.

***"முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும்***
***வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி***
***இடைத் தெரிந்து உணரும் இருள்தீர் காட்சி***
***கொடைக்கடன் இறுத்த கூம்பா உள்ளத்து***
***உரும்புஇல் சுற்றமொடு இருந்தோன்"***[69]

மனிதன் தான் பெற்ற செல்வத்தாலும், கொண்டிருக்கும் நல்ல மனத்தாலும் தன்னைச் சார்ந்தவர்களுக்குச் செய்யும் நல்லறம் அறங்கள் வாழ்வதற்கான வழிகாட்டியாய் அமைகிறது.

## 1.8. இலக்கியங்களில் அறம் காணும் முறைமை

சங்க இலக்கியங்கள் மனிதன் வாழ்வாங்கு வாழ்வதற்கான வழிகாட்டிகளாயிருக்கின்றன. சங்கப் புலவர்கள் அறங்களைப் பிறர் உணர்ந்து கொள்ளுமாறு எவ்வாறு கூறுவது என்பதில் திறம் உடையவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

- அறத்தின் தன்மை
- தீய செயல்களின் விளைவு
- உவமித்தல்

என்னும் மூன்றன் அடிப்படையில் ஆழமான சிந்தனைகளை உடையவர்களாய்ப் புலவர்கள் அறச்சிந்தனைகளை முன் வைத்திருக்கின்றனர்.

உலகில் வாழும் மக்களில் சிலர் அறக்கோட்பாடு உடையவர்களாகவும் சிலர் அறக்கோட்பாடு இல்லாதவர்களாக இருக்கிறார்கள். அறம் புரியும் மனத்தை உடையவர்கள் பிறருக்கு நன்மை செய்வதையே நோக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

ஆனால் தீய குணமுடையோர் தீமை செய்வதையே நோக்கமாகக் கொண்டிருப்பர். புறநானூறு நன்மை செய்ய இயலாவிட்டாலும் பரவாயில்லை, தீமைசெய்யாமல் இருங்கள் என்பதை வலியுறுத்துகிறது.

***"நல்லது செய்த லாற்றீ ராயினும்***
***அல்லது செய்தல் ஓம்புமின்"***[70]

வாழ்க்கை இன்பமும் துன்பமும் மிக்கது அதில் நல்லனவற்றைத் தேர்வது தான் மகிழ்ச்சி தரும் வாழ்க்கையாக அமையும் என்பதனை பக்குடுக்கை நன்கணியார் உணர்த்தியிருக்கிறார்.

***"ஓரில் நெய்தல் கறங்க ஓரில்***
***ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்***
***புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்***
***பைத லுண்கண் பனிவார்பு உறைப்பப்***
***படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்***
***இன்னா தம்ம இவ்வுலகம்***
***இனிய காண்க இதன் இயல்புணர்ந் தோரே"***[71]

வாழ்வியல் சிந்தனைகளையும் உலகத்தின் இயல்பினையும் மக்களின் மனநிலையினையும் களமாகக் கொண்டு சங்க இலக்கியங்கள் மனித வாழ்வின் மேம்பாட்டுக்கான அறங்களை உணர்த்தியிருக்கின்றன.

## 1.9. தொகுப்புரை

அறம் என்றால் அது நல்ல செயல்களின் தொகுதி என்பது பொருள். அறம் என்னும் சொல் அறு என்னும் வினை அடியை முதலாகக் கொண்டு தோற்றம் பெற்றிருக்க வேண்டும். ஒரு மனிதன் செய்யும் செயல்களின் அடிப்படையில் அவற்றை நல்லனவாகவும், தீயனவாகவும் பகுத்துப் பார்க்க முடியும்.

அறம் எப்பொழுதும் நன்மையை அடிப்படையாகக் கொண்டது. தனிமனித ஒழுக்கம் ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாததாக வலியுறுத்தப்படுகிறது. தனிமனித ஒழுக்கமே உலகளாவிய ஒழுக்கத்தை நிலைநாட்டும் தன்மை கொண்டதால் தனிமனிதன் செம்மைப்பட வேண்டியதன் முக்கியத்துவம் சங்கப்பாடல்கள் வலியுறுத்துகின்றன. குடும்ப அறமே உலகத்தில் நிகழும் பல நல்லறங்களுக்குக் காரணமாக இருக்கிறது. இவையிரண்டின் அடிப்படையிலேயே சமுதாய அறம் அமைகிறது. பல குடும்பங்கள் சேர்ந்த சமூக அமைப்பு சிக்கலின்றி அமைய வேண்டுமானால் உலகளாவிய அறம் பேணப்பட வேண்டும். நல்லறங்களே மனித வாழ்க்கைக்கு நன்மை பயக்கும் தன்மையன என்னும் சிந்தனை சங்கப் பாடல்களின் மூலம் முன் வைக்கப்படுகிறது. தனிமனிதன் மனம், சொல், செயல் ஆகிய நிலைகளில் தூய்மையாக இருக்க வேண்டியதன் அவசியம் முன் வைக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. இரா.அனுராதா, சங்க இலக்கியத்தில் அறக்கருத்துகள், ப.14.
2. குறள். 34.
3. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி, ப.523.
4. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.24.
5. ஏ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.108.
6. மணிமேகலை, ஆபுத்திரனோடு மணிபல்லவ மடைந்த காதை, பா.228–231.
7. தமிழகராதி, ப.48.
8. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப.684.
9. ஏ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.108.
10. குறள். 93.
11. திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், ப.11.
12. இரா. அனுராதா, மு.நூல், ப.16.
13. புகழேந்தி, நளவெண்பா, ப.108.
14. ஆ.பூமா, பாரதத்தில் அறச்சிக்கல்கள், ப.138.
15. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி – 2) தமிழ்ப்பல்கலைக்கழகம், பக்.45–46.

16. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.23.

17. புறம், 34:1–7.

18. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி – 2), ப.38.

19. இரா. அனுராதா, மு.நூல், ப.32.

20. இரா. அனுராதா, மு.நூல், ப.22.

21. அமுத சுரபி, தீபாவளி மலர், ப.51.

22. இரா. அனுராதா, மு.நூல், ப.39.

23. புறம். 192.

24. குறள். 243.

25. இரா. அனுராதா, மு.நூல், ப.41.

26. மேலது.

27. குறுந். 49.

28. நற்றி. 397:7–9.

29. குறுந். 99.

30. நற். 16.

31. குறள். 11, 51.

32. நற்றி. 203.

33. கலி. 17.

34. அகம். 66.

35. புறம். 191.

36. புறம். 195.

37. அகம். 54.

38. அகம். 54.

39. முல்லை. 55.

40. குறள். 81.

41. சிலம்பு, மதுரை, கொலைக். 71–73.

42. நற். 142.

43. நற். 280.

44. ஐங். 1.

45. மேலது. 2.

46. மேலது. 3.

47. மணி. பாத்திரம் பெற்ற காதை, 76–77.

48. ஐங். 4.

49. ஐங். 7.

50. ஐங். 8.

51. ஐங். 9.

52. ஐங். 387.

53. மதுரை. 468–473.

54. குறு. 156.

55. புறம். 186.

56. பெரும். 443–447.

57. புறம். 75.

58. புறம். 184.

59. புறம். 179. 6–9.

60. புறம். 165 : 10–11.

61. புறம். 192.

62. புறம். 194.

63. புறம். 45.

64. புறம் 70:7.

65. அகம். 256.

66. குறள். 549.

67. குறள். 231.

68. பட்டின. 283–288.

69. பெரும். 443–447.

70. புறம். 195.

71. புறம். 194.

*****

# மன மேம்பாட்டில் தனிமனித அறம்

## 2.0. முன்னுரை

'மனம்' என்பது மனிதனின் சக்திவாய்ந்த சாதனம் என்று கூறலாம். மனித வாழ்க்கையில் நடைபெறுகின்ற நிகழ்வுகள் எல்லாம் மனத்தின் கோணத்தாலும் கோலத்தாலும் கட்டமைக்கப்பட்டவை. மனமே, நன்மை தீமை என்னும் இரண்டு நிகழ்வுகளுக்கும் காரணமாகின்றது. சங்க இலக்கியங்களில் மனிதனின் மனத்தூய்மை குறித்த சிந்தனைகள் பரந்த அளவில் பேசப்பட்டிருக்கின்றன. தனிமனிதன் உலக சமுதாயத்தின் ஒரு துளி ஆவான். இருப்பினும் தனிமனிதனின் சிந்தனைதான் உலக சமுதாயத்தின் வளமார்ந்த வாழ்வுக்கு அடித்தளம் அமைத்துக் கொடுக்கின்றது என்கிறது கலைக்களஞ்சியம்.

"ஆதி மக்களுடைய வாழ்க்கையில் துல்லியமான அறப்பண்பைக் காணுதல் இயலாது. ஆயினும் அறத்தின் கூறுகள் சில காணப்படுகின்றன. அவை இயற்கை விருப்பத்தின் தூண்டல்களாகவும், சமுதாயக் கட்டுப்பாட்டின் விளைவுகளாகவும் அமைந்தவை. நல்லது, கெட்டது ஆராய்ந்து பார்க்கும் பகுத்தறிவினால் ஏற்பட்ட பண்புகளல்ல அவை. ஆயினும், அவை மனிதனிடத்தில் தோன்றியிராவிடில் அவன் விலங்கு நிலையிலேயே இருந்திருப்பான். எனவே, மனித குலத்திற்குச் சிறப்புக் குணமாக விளங்குவது அறம் என்பதும், அதன் மூலத் தத்துவங்கள் மனித வரலாற்றின் முதல் நிலையிலேயே தோன்றின என்பதும் கருத்திற் கொள்ளத் தக்கன"[1] என்று அறத்தின் தோற்றம் குறித்துக் குறிப்பிடுகின்றது.

மானிட சமுதாயம் பல்கிப் பெருகாத ஒரு காலகட்டத்தில் வாழ்ந்த மக்கள் பின் காலப்போக்கில் ஒருவருடன் ஒருவர் நல்லுறவு கொண்டு வாழ்கின்ற நிலையில் நல்லறங்கள் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு தோற்றம் பெற்ற அறங்கள் காலப்போக்கில் மக்களால் கடைப்பிடிக்கப்பட்டுப் பின் பெருவழக்குப் பெற்றிருக்க வேண்டும். நாடோடியாக வாழ்ந்த மனிதர்களின் வாழ்க்கை தங்களின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளும் போக்கில் அறங்கள் பொதுமை அடையத் தொடங்கிய நிலையில் மனித மனம் நன்மை தரத்தக்க செயல்களை அனைவருக்குமாகச் சிந்திக்கத் தொடங்கியது.

முத்துலக்குமி, “தொடக்கத்தில், தங்கள் விருப்பத்திற்கேற்ப வாழ்ந்த மக்கட் கூட்டம் பின்னர் எல்லாரும் ஏற்கக் கூடிய நன்மை பயக்கத்தக்க செயல்களைப் பொதுவானவையாக ஏற்றுப் பின்பற்றத் தொடங்கியது. இப்பின்பற்றலே மரபுநிலை எனப்பெறும். இவ்வாறு பின்பற்றும்போது, அறிவானும் பண்பானும் உயர்ந்தோராக உள்ளோர் தம் கூற்றும் செயலும் பின்பற்றப்பட்டன”[2] என்று அறம் பொதுமைப்பட்ட தன்மையினை எடுத்துக் கூறியிருக்கின்றார். நல்லதைச் செய்கின்ற குணம் மன அடிப்படையில் பிறக்கின்ற ஒன்றாகும்.

வில்லியம் லில்லி, “நல்ல நடத்தை என்பது நம் அடிப்படை இயல்பூக்கங்களாலும் தேவைகளாலும் தீர்மானிக்கப் பெற்ற நடத்தையேயாம்”[3] என்பர். மனிதன் தம் வாழ்வியல் சூழல்களை உணர்ந்து நாடோடி வாழ்க்கையைக் கைவிட்டு வாழத்தொடங்கிய நிலையில் அறங்களின் தோற்றத்திற்கான களம் அமைந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. மனிதன் தான் வாழும் சூழ்நிலைக்கேற்றவாறு தம் வாழ்க்கைச் சூழலைச் செம்மைப்படுத்திக் கொள்ளத் தொடங்கினான். அதன் விளைவுகள் பன்முகமான செயல்களும் விளைவுகளும் ஏற்பட்டன. அறவுணர்வு வாழ்வின் அடிப்படையாக அமைந்தது.

“காட்டு மிராண்டியாக வாழ்ந்த மனிதன் தன் முரட்டுத்தனத்தை அடக்கி மற்றவர்களின் பழக்க வழக்கங்களைப் பின்பற்றிச் சமூகத்திற்கேற்பத் தனது வாழ்வை அமைத்துக் கொண்டான். இவ்வாறு தன் வாழ்வை ஒழுங்குபடுத்திக் கொண்ட நிலையே மனித முன்னேற்றத்தின் முதற்படி. இது மனிதனுடைய அறிவையும் துணிவையும் குறிக்கோளையும் உயர்த்தியதோடு அறவாழ்க்கையின் உயிர் நிலையான சமூக அமைப்பிற்கு அடிப்படையாகவும் அமைந்தது. இந்நிலையில் அறத்தின் கூறுகள் இயற்கை இச்சைகளின் தூண்டுதல்களாகவோ புறக்கட்டுப்பாட்டின் விளைவுகளாகவோ அமைந்தன. இயல்பூக்க நிலையில் அறவுணர்வு, கட்டுப்பாட்டின் கீழ் அமைந்த அறக்கூறாகவே இருந்தது”[4] என்று வாழ்வியல் சூழலில் அறம் நிலை கொள்வதைக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது.

## 2.1. மனம் - மனச்சாட்சி

சமுதாயத்தில் வாழ்கின்ற மனிதனுக்கு மனத்தூய்மை இன்றியமையாதது. மனிதன் சமுதாயத்தில் பலரோடு கலந்து வாழக் கடமைப்பட்டவனாக இருக்கிறான். அவ்வாறு வாழும் காலத்தில் எண்ணற்றவர்களைச் சந்திக்கவும் பழகவும் வாய்ப்பு ஏற்படுகின்றது. மனிதன் பிறருடன் கலந்து பழகுகின்ற சூழ்நிலையில் சில முரண்பாடுகள் தோன்றுவது இயற்கை. அவ்வாறான சூழல்களில் யாருக்கும் பாதகம் இல்லாத வகையில் நேரிய முறையில் நடந்து கொள்ள வேண்டிய பொறுப்புணர்ச்சி மனிதனுக்கு இருக்கிறது.

“ஒரு மனிதன், தன் மனச் சான்று கூறும் நல்லது கெட்டது என்ற முடிவுகளை ஒப்புக் கொள்வதால் ஏற்படும் நடத்தையே நன்னடத்தை எனக் கூறப்படுகிறது”[5] என்பர் வில்லியம்ஸ் லில்லி. மனிதன் தன் மனச்சாட்சியின்படி நடந்து கொள்வதால் அறம் காக்கப்படுகின்றது எனலாம்.

மனிதன் மனச்சாட்சியின்படி நடத்தல் அல்லது நடந்து கொள்ளுதல் அனைவர்க்கும் நலம் பயப்பதாகும். சிறந்த குடிப்பிறப்பு கல்வி, பக்குவம் ஆகிய சூழல் கடந்த மனிதன் தன் மனச்சாட்சியை உணரத் தொடங்குகிறான். அதன்பின் அது கூறும் தீர்ப்பின்படி நடக்கின்றவன் சான்றோனாக மதிக்கப்படுகிறான்.

வே. முத்துலட்சுமி, "அறக்கொள்கைகளை முழுமையாகப் பேணியவர்கள் சான்றோர் எனப்பட்டனர். அறத்தின் முழுமை சால்பு எனப்பெற்றது. சால்பு என்பதைத் தம்மனத்தே நிறுத்தி அதனை ஆளும் தகுதிபெற்ற உயர்ந்தோர் சான்றோர் எனப்பெற்றனர். இச்சான்றோரை மையறு சிறப்பின் உயர்ந்தோர் என்பர் தொல்காப்பியர். இவர்கள் அல்லவை கடிந்து, நல்லவையுரைத்து மக்களை நன்னெறிப்படுத்தும் அறவாணர்களாக விளங்கினர். இச்சான்றோரால் உருவாக்கப் பெற்ற விதிமுறைகளே அறங்கள் எனவும், அவர்கள் வாழ்ந்து காட்டிய நன்னெறிகளே அறநெறிகள் எனவும் போற்றப் பெற்றன. அறம் என்பது மறுமைப் பயன் நோக்காது செய்யப் பெறுவது என்று கூறுகிறது புறநானூறு"[6] என்று மனம் சார்ந்த அறத்தை முன்னிலைப்படுத்துகின்றார்.

வள்ளுவர், அறத்தின் தூய்மைப் பற்றிக் கூறுமிடத்து

***"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்***
***ஆகுல நீர பிற"[7]***

என்ற குறட்பாவின் மூலம் தூய்மையான மனத்தில்தான் நல்லறம் உருவாகும் என்பது வள்ளுவரின் கருத்தாகும். நாற்பொருள்களுள் ஒன்றாகும் சிறப்பு மிக்க அறக்கோட்பாட்டின் உருவாக்கத்திற்குக் காரணமாக அமைவது மனமாகும். அதனாலேயே மனம் குறித்தான கருத்து நிலைகள் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் சுட்டிக்காட்டப்பட்டிருக்கின்றன.

### 2.1.1. சங்க இலக்கியங்களில் மனத்தூய்மை வெளிப்படும் விதம்

சங்க இலக்கியங்கள் அகம், புறம் என்னும் இரண்டு களங்களில் பாடப்பட்டிருக்கின்றன. அகம், புறம் என்னும் இரண்டு பொருள்களிலும் புலவர்கள் அறச்சிந்தனைகளைப் பாடியுள்ளனர். அறம் மனத்தில் தோன்றிச் சமூகத்தில் வெளிப்பட்டு உலகளாவிய நிலைக்குப் பயனுள்ளதாக மாற்றம் பெற்றிருப்பதனை அவ்வறங்கள் பயன்பாட்டில் உள்ளமையின் மூலமாக அறிய முடிகின்றது. அறங்கள் மனிதனின் மனத்தில் உதித்துப் பின்பே செயல்களாக வெளிப்படுகின்றன. அவற்றைச் சங்க இலக்கியச் சான்றுகளின் வாயிலாக நோக்குவதனால் அவை குறித்த ஒரு தெளிவினைப் பெற முடியும்.

## 2.2. அன்புடைய வாழ்க்கை

தலைவியும், தலைவனும் சேர்ந்து நடத்தும் இல்லறம் நல்லறமாக வேண்டுமானால் இருவரும் தம்முடைய மன அளவில் பண்பட்டவர்களாக இருக்க வேண்டும். ஒருவர் மனத்தில் ஒருவர் பற்றிய உயரிய சிந்தனை இருந்தால்தான் அவர்களின் அன்புடைய வாழ்க்கையின் தன்மை இன்னதென்று உணர்ந்து கொள்ள முடியும். மனமே தூய்மையான அன்பின் தோற்றத்திற்குக் காரணமாக அமைவதனால் சங்க இலக்கியம் முழுமைக்கும் தூய்மையான அன்பு தனிமனித அறநிலையில் வைத்துப் போற்றப்படுகின்றது. களவு வாழ்க்கையில் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ளும் தலைவனும் தலைவியும் ஊழ்வினைப் பயனாலேயே ஒருவரை ஒருவர் சந்திக்கின்றனர். தான் மணம் புரிந்த தலைவனே இனிவரும் பிறவிகளிலும் கணவனாக அமைய வேண்டும். நானே உன் மார்பைச் சேர்பவளாக இருக்க வேண்டும் என்ற குறுந்தொகைத் தலைவி பேசுவது மனத்தில் உள்ள அன்பின் ஆழத்தை வெளிக்காட்டுவதாக அமைகின்றது.

***"இம்மை மாறி மறுமை யாயினும்***
***நீயா கியரென் கணவனை***
***யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே"***[8]

இறப்பதற்காக நான் அச்சம் கொள்ளவில்லை. இறந்து வேறு பிறப்பு என்று ஒன்று உண்டானால் அப்பிறவியில் தலைவனை மறந்து விடுவேனோ என்று நற்றிணைத் தலைவி துன்பம் கொள்வது கொண்டு பண்டைக் காலத்தில் மனத்தூய்மையினால் கற்பு வாழ்வின் உயர்வைப் போற்றிய மக்கள் வாழ்ந்தனர் என்பதைக் காண முடிகிறது.

***"சாதல் அஞ்சேன் அஞ்சுவன் சாவின்***
***பிறப்புப் பிறி தாகுவ தாயின்***
***மறக்குவென் கொல்லென் காதல னெனவே"[9]***

களங்கமற்ற நல்ல மனத்தில்தான் தூய்மையான அன்பு உருவாக முடியும். அத்தகைய அன்பு ஊழ்வினையாலும் இறைவன் கூட்டுவித்தலானும் நிகழும். எங்கோ பிறந்து எங்கோ வளர்ந்த தலைவனும் தலைவியும் வினைப்பயனால் எதிர்ப்பட்டு எத்தகைய பலனையும் நோக்காமல் அன்பை மட்டும் மனத்தில் சுமந்து இணைகிறபோது தான் மனம் அறவழிப்பட்டதாக இருப்பதை உணரமுடிகிறது. அத்தகைய தூய்மையான அன்பையே செம்புலப் பெயல் நீரார்,

***"யாயும் ஞாயும் யாரா கியரோ***
***எந்தையும் நுந்தையும் எம்முறை கேளீர்***
***யானும் நீயும் எவ்வழி அறிதும்***
***செம்புலப் பெயல்நீர் போல***
***அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"[10]***

என்று குறிப்பிடுகிறார். கணவனும் மனைவியும் சேர்ந்து வாழ்கின்ற வாழ்க்கையில் அன்பே முக்கியத்துவம் பெறுகின்ற காரணத்தால் புலவர்கள் அன்புடைமை குறித்துப் பரக்கப் பேசியுள்ளனர். காதலால் ஒன்று சேர்ந்த தலைவனும் தலைவியும் வாழ்க்கைக்காகப் பொருளைத் தேடவேண்டும் என நினைக்கையில், குடும்பத்திற்காகவும் அறம் மேற்கொள்ளவும் தலைவன் பொருள் தேட வேண்டிய சூழ்நிலைக்கு உள்ளாகின்றான். அவ்வாறான சூழலில் தலைவன்

தலைவியர்களுக்குள் பிரிவு ஏற்படுகின்றது. தலைவனின் பிரிவுக் காலத்தில் இருவரும் தனித்தனியாக இருந்து துன்பத்தை அனுபவிக்கின்றனர். இத்தகைய சூழ்நிலையைக் கண்ணுற்ற புலவர் கணவனும் மனைவியும் இணைந்து வாழும் இல்லறமே பொருளினும் இனியது என்ற முடிவுக்கு வந்தவராக, மனைவியுடன் கணவன் சேர்ந்து வாழ்ந்த நாட்களே இருவரும் வாழ்ந்த நாட்களாகக் கொள்ளப்படும். மற்ற நாட்கள் எல்லாம் வாழாத நாட்களே ஆகும் என்று குறிப்பிடுகின்றார்.

***"எல்லாம் எவனோ பதடி வைகல்***
***அரிவைத் தோளிணைத் துஞ்சிக்***
***கழிந்த நாளிவண் வாழு நாளே"[11]***

வாழ்கின்ற காலத்திலும் பிரிவின் சூழலிலும் தலைவனும் தலைவியும் ஒருவரை நினைத்து ஒருவர் வாழ்வதும் மீண்டும் சந்திக்கின்ற சூழ்நிலையில் அன்பின் மிகுதியால் நெகிழ்வதும் மனத்தின் அறம் பாற்பட்ட செயல்பாடுகளாகும். ஏனெனில் உண்மை அன்பில் மட்டுமே இத்தகைய நெகிழ்ச்சி நிலவும் என்பதைப் புரிதல் வேண்டும்.

***"உள்ளினென் அல்லனோ யானே உள்ளி***
***நினைத்தனென் அல்லனோ பெரிதே நினைத்து***
***மருண்மினன் அல்லனோ உலகத்துப் பண்பு"[12]***

தலைவன் பொருள் தேடச் செல்ல நினைக்கின்ற சூழலில் அவன் மனத்தில் துன்பம் மிகுகின்றது. தலைவியின் மனத்திலும் துன்பம் மிகுகின்றது. ஆனாலும் ஒருவரை ஒருவர் பிரிந்து வாழ்கின்ற நாளில் ஆற்றியிருத்தல் இருவருக்குரிய பொதுக் கடமையாகச் சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. தலைவனைப் பிரிந்து தனியே இருக்கும் தலைவி அறம் சான்ற தூய்மையான சிந்தனை நிறைந்த மனத்துடன் அவனுக்காகக் காத்திருக்கிறாள்.

***"செல்ப என்ப தாமே சென்று***
***தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை***
***வாழ்தும் என்ப நாமே"[13]***

தலைவியுடன் சேர்ந்து வாழ்கின்ற வாழ்வே இன்பமுடையது என்று நினைக்கும் தலைவன் இல்வாழ்க்கைக்குத் தேவையான பொருளை வெறுத்துத் தலைவியுடன் வாழ முற்படுகிறான். அதற்காகத் தன் மனத்திடம் கூறி அதனைத் தேற்றுவித்துச் செலவழுங்குகின்றான். இத்தகைய சூழலைச் சங்க இலக்கியத்தில் விரிவாகக் காணமுடிகிறது. எனினும் தலைவன், தலைவியின் மீது கொண்ட தூய்மையான அன்பின் பாற்பட்ட சூழ்நிலையைப் பட்டினப்பாலை எடுத்துக்காட்டுகின்றது. தலைவன் காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்புகளை எல்லாம் எடுத்துக்கூறி, இத்தகைய சிறப்புமிக்க காவிரிப்பூம்பட்டினத்தையே தருவதாக இருந்தாலும் நான் தலைவியைப் பிரியேன் என்று தன் மனத்திடம் கூறிச் செலவழுங்குவது தூய்மையான மன அறத்தை விளக்குகிறது.

***"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்***
***வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய***
***வாரேன் வாழிய நெஞ்சே"[14]***

தலைவன் மீது காதல் கொண்டு உடன்போக்காகத் தலைவனுடன் வந்து அவனை மணம் செய்து கொண்ட தலைவி, தலைவனின் குடும்பச்சூழல் எத்தகையதாக இருந்தாலும் அதனைப் பொறுமையுடன் அறவழிப்பட்ட மனத்துடனும் ஏற்றுக் கொள்வது முறையாகும். தன் தந்தையின் வீட்டில் இருக்கின்ற வளமையான செல்வத்தை நினைக்காமல் இருப்பதைக் கொண்டு இல்லறம் நடத்துவதும், ஓர் ஆடையை இரண்டாகக் கிழித்து உடுத்திக் கொள்ளும் அளவு வறுமைப்பட்ட வாழ்க்கை வாழ்ந்தாலும் அன்பு வழிப்பட்ட மனத்தூய்மையான வாழ்வே சிறந்ததாகும் என்று சங்க இலக்கியங்கள் கற்பித்திருக்கின்றன.

**"கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்**
**கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்"[15]**

**"ஒன்றன் கூறாடை யுடுப்பவரே யாயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"[16]**

சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியப்படுகின்ற தலைவன் தலைவியின் மனநிலை சார்ந்த வாழ்வியல் சூழல்கள் இருவரின் மனத்தில் இருக்கின்ற உண்மையான, ஆழமான அன்பை வெளிக்கொணர்வதாக அமைகின்றன. தலைவன், தலைவி இருவரும் அறவழிப்பட்ட மனநிலையைக் கொண்டிருப்பதனால் அவர்களின் மனத்தில் எழுகின்ற சிந்தனையும் தூய்மை பொருந்தியதாக அமைந்திருக்கின்றது.

வே. முத்துலக்குமி பட்டினப்பாலை என்ற இலக்கியத்தின் பொருளமைப்பைப் பற்றிக் கூறவரும்போது,"தலைவன் பொருள் தேடுவதற்காகப் பிரிய எண்ணும் பாலைவழி, திருமாவளவன் பகைவரை ஒறுத்தற்கு அஞ்சிய வேலினும் வெய்யது, அச்சுரநெறி சென்றால் பொருள் பெறலாம். ஆயின், அப்பொருள் வேண்டின், தலைவியின் தடமென் தோளைப் பிரிதல் வேண்டும். தலைவியின் தடமென்தோள் திருமாவளவன் தன் குடிமக்களைக் காத்தற்கு எடுத்த செங்கோயினும் தண்ணியது. அதனால் தலைவன் தன் நெஞ்சிற்குச் செலவினைத் தவிர்க்க என அறிவுறுத்துகிறான். இங்ஙனம் செலவழுங்கல் செல்லாமை குறித்தன்று. அப்போது செலவு தவிர்ந்து பின்னர்ச் சிறிது காலம் சென்று பிரியக் கருதியே தலைவன் இவ்வாறு கூறுகிறான். இவ்வாறு பட்டினப்பாலை தலைவனிடம் கடமையுணர்வினும் காதலுணர்வே விஞ்சி நிற்றலை விளக்கிக் காட்டுகிறது"[17] என்று கூறுவதன் மூலமாகத் தலைவன் தலைவியின் மனநிலை எத்தனை தூய்மையுடையதாக இருந்தால் இத்தகைய அன்புடைய மனநிலை அமைந்திருக்கும் என்பதை எடுத்துக் காட்டுகிறார். அதனால் அன்புக்கும் மனத்தூய்மையே காரணமாதல் புலப்படுத்துகிறது.

### 2.2.1. கற்பு

பண்டைக்காலம் முதலாகக் கற்பு, பெண்களுக்கு இருக்க வேண்டிய பெருந்தக்க பண்பாக எடுத்துக் கூறப்பட்டிருக்கின்றது. தொல்காப்பியர் மனம் குறித்துப் பேசவரும்போது 'கற்பெனப்படுவது கரணமொடு புணர' என்கிறார். அதாவது தலைவன் தலைவியை மணம் செய்துகொண்டு இன்பம் பெறுதல் என்னும் பொருளில் ஆள்கிறார். ஆக, கற்பு என்னும் பண்பு, தலைவனுக்கும் தலைவிக்கும் இருக்க வேண்டிய இன்றியமையாத பண்பாக விளங்கியமை அறியப்படும்.

*"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்*
*கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்*
*கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே"*[18]

கற்பெனப்படுவது, கொடுப்போர் கொடுக்கக் கொள்வது எனத் தொல்காப்பியம் விளக்கம் கூறுகிறது. மேலும்,

*"கொடுப்போர் இன்றியுங் கரண முண்டே*
*புணர்ந்துடன் போகிய காலை யான"*[19]

என்னும் நூற்பாவின் வழியாகத் தொல்காப்பியர் கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழும். அது, உடன்போக்கின் போது என்று குறிப்பிடுகின்றார். தம்முடைய கற்பாகிய ஒழுக்கத்தைக் காக்கின்ற பொறுப்புணர்வு, தலைவன் தலைவி இருவருக்கும் இருக்கிறது. மனத்தூய்மையுடன் அன்பு செலுத்தி ஒருவரை ஒருவர் காதலிக்கும் இருவரும் கற்பறம் வழுவாமல் மணம் செய்து கொள்ள வேண்டிய நிலையில் கொடுப்போர் இன்றியும் மணம் நிகழ்கிறது. ஆக, இதுவும் கற்பின்பாற்பட்டதேயாகும். தொல்காப்பியர் பெண்களுக்குரிய குணங்களாக, கற்பு, காமம், நாற்பால் ஒழுக்கம், பொறை, நிறை, விருந்து புறந்தருதல், சுற்றம் காத்தல் ஆகிய பண்புகளைக் குறிப்பிடுகிறார். இப்பண்புகள் பெண்களுக்கு

இருக்க வேண்டிய முக்கியமான குணங்களாகும். இவை, அனைத்தும் பெண்ணின் பெருமைக்குக் காரணமாய் அமைவன ஆகும்.

*"கற்புங் காமமும் நாற்பா லொழுக்கமும்*
*மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்*
*விருந்துபுறந் தருதலுஞ் சுற்றம் ஓம்பலும்*
*பிறவு மன்ன கிழவோன் மாண்புகள்*
*முகம்புகல் முறைமையிற் கிழவோற் குரைத்தல்*
*அகம்புகல் மரபின் வாயில்கட் குரிய"*[20]

மனித வாழ்க்கையில் போற்றிக் கடைப்பிடிக்கத் தக்க நல்ல ஒழுக்கங்கள் எல்லாம் மனத்தில் இருந்தே முகிழ்க்கின்ற காரணத்தால் அதனையும் தூய்மையின் பொருட்டுக் கற்பு என்னும் நிலையில் வைத்துக் கூறவேண்டியிருக்கிறது. சங்க இலக்கியங்களில் கற்பு குறித்த கருத்தாக்கங்கள் உயரிய நிலையில் போற்றப்பட்டுள்ளன.

வே. முத்துலக்குமி அவர்கள், "கற்பு என்பது இல்லறத்தார்க்குரிய ஒரு கட்டுப்பாடாகும். இந்தக் கட்டுப்பாடே கற்பெனும் அறமாகும். தனிமனித அறங்களை வரையறை செய்யும் கலித்தொகை நிறையெனப்படுவது மறைபிறரறியாமை என்று நிறையெனும் அறம் பற்றி மொழிகிறது. சொல்லாலும் செயலாலும் மறைக்கப்பட வேண்டியவற்றைப் பிறர்க்குப் புலப்படுத்தாமல் காப்பதே நிறையாகும். இதில் உள்ளத்தையும் உடலையும் காப்பதும் அடங்கும். ஆண்களோ அல்லது பெண்களோ இல்லறத்தில் ஆன்றோர் வகுத்த நெறியான கட்டுப்பாட்டில் பிறழாது வாழ்ந்து வருவதே கற்பறம் எனப்படும்"[21] என்று கற்பிற்கு விளக்கம் தருகிறார். பெண்ணின் கற்புத்திறன் அவள் தன் தலைவனைக் காக்கும் இயல்புடையது என்பதை,

***"வறனோடின் வையத்து வான்றருங் கற்பினாள்***
***திறனோடிப் பசப்பூர்த லுண்டெனா***
***அறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே"[22]***

என்னும் அடிகள் விளக்குகின்றன.

பண்டை நாளில் பரத்தை ஒழுக்கம் நிலவிய போதும் தன் மனைவியைத் தவிரப் பிற பெண்களை நினைக்காத வலிமையான குணமுடைய ஆண்களும் இருந்தார்கள் என்பதை,

***"கால்பொருது இடிப்பினுங் கதழுறை கடுகினும்***
***உருமுடன்று எறியினும் ஊறுபல தோன்றினும்***
***பெருநலங் கிளறினுந் திருநல வருவின்***
***மாயா வியற்கைப் பாவையின்***
***போதல் ஒல்லாளென் நெஞ்சத் தானே"[23]***

என்னும் நற்றிணை அடிகள் சான்று பகர்கின்றன.

### 2.2.2. ஒழுக்கநெறிகள்

ஒழுக்க நெறிகள் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதன. குடும்ப வாழ்வின் அமைதிக்கும் சமுதாய வாழ்வின் நன்மைக்கும் ஒழுக்க நெறிகள் அரண்களாக நின்று காக்கின்றன. மனிதனுக்குரிய பெருமைக் குணங்கள் எந்நாளும் மனத்தில் இருந்து அகலாமல் கட்டிக்காக்க வேண்டிய தன்மையன என்பதைக் குறிஞ்சிபாட்டு, "பொன்னாலும் முத்தாலும் மணியாலும் கட்டப்பட்ட மாலை அறுந்துபோனால் மீண்டும் சிறந்த தொழில் வல்லானைக் கொண்டு சரிசெய்து கொள்ளலாம். ஆனால் ஒழுக்கமுடையவரின் நற்பண்புகள் திரிந்து போனால் தவமுடையோனாக இருந்தாலும் அதனைத் திரும்பப் பெறல் இயலாது"[24] என்று குறிப்பிடுகின்றது. பண்டைக் காலத்தில் அறத்தையும் ஒழுக்கத்தையும் மக்கள் மனதில் இருத்திப் போற்றினர். அறத்தை

இகழ்ந்தவர்களையும், அறவழி நடக்காதவர்களையும் தண்டிக்கவும் அவர்கள் தயங்கவில்லை என்பதை அகநானூறு,

*"திருநுதற் குறுமக ளணிநலம் வவ்விய*
*அறனிலாள னறியே னென்ற*
*திறனில் வெஞ்சூ நெறிகரி கடாஅய்*
*முறியார் பெருங்கிளை செறியப் பற்றி*
*நீறுதலைப் பெய்த ஞான்றை*
*வீறுசா லவையத் தார்ப்பினும் பெரிதே"*[25]

என்னும் அடிகளான் குறிப்பிடுகிறது.

## 2.3. அறம் - பொருள்

பண்டைய மக்களின் வாழ்வில் அறமும், பொருளும் முக்கியத்துவம் உடையனவாக இருந்தன. அறம் மனத்தூய்மையில் பிறப்பதாகும். நல்ல நினைவு, நல்ல எண்ணங்கள் ஆகியவற்றால் ஈட்டப்படுவது நற்பொருளாகும். ஆக அறத்திற்கும் பொருளுக்கும் மனத்தூய்மை இன்றியமையாததாகிறது. பொருள் மானுட வாழ்க்கைக்கு இன்றியமையாதது. பண்டைக் காலத்தில் மக்கள் அறம் புரிவதற்காகவும், செம்மையாக இல்லறம் நடத்துவதற்காகவும் பொருளீட்டும் எண்ணம் கொண்டிருந்தனர்.

*"அறன்கடைப் படாஅ வாழ்க்கையு மென்றும்*
*பிறன்கடைச் செல்லாச் செல்வமு மிரண்டும்*
*பொருளி னாகும்"*[26]

நல்ல மனத்துடன், நற்சிந்தனையுடன் ஈட்டப்பட்ட பொருட் செல்வம்தான் வாழ்நாளில் நிலைக்கும். உழைத்து ஈட்டும் பொருளே சிறந்தது. சோம்பல் கொண்டு கைப்பொருளைச் செலவிட்டு வாழ்தல் இழிவானது என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது.

*"உள்ளது சிதைப்போ ருளரெனப் படாஅர்*
*இல்லோர் வாழ்க்கை யிரவினு மிளிவு"*[27]

தலைவியுடன் சேர்ந்து வாழ்கின்ற வாழ்க்கை இனிமையுடையது என்றாலும் அவ்வாழ்க்கை பொருளைச் சார்பாகக் கொண்டிருக்கின்றதாகையால் தலைவன் அன்புக்கும் பொருளுக்கும் இடையே உழல்பவனாக இருக்கிறான். தன் மனத்தில் தோன்றிய தூய்மையான சிந்தனைகளால் தலைவன் கற்பறத்தையும் கடமையினையும் ஒழுக்கத்தையும் போற்றுபவனாக இருக்கின்றான்.

*"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்*
*பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்*
*புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்*
*பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங்காதலர்"*[28]

என்று கலித்தொகை, தலைவன் கடமையின் பொருட்டுப் பொருள்தேடச் சென்றமையினைக் கூறுகிறது.

### 2.3.1. அருள் உணர்வு

அருள் மனத்தின்பாற்பட்டது. தனக்கென வாழ்வதுடன் உலகையும் மனத்தால் நினைத்து நன்மை செய்ய நினைக்கின்ற உள்ளத்தில் அருள் உணர்வு பிறக்கும். அருள்உணர்வு உலக உயிர்களுக்கு இன்றியமையாதது. பண்டைக்காலத்திலேயே பொருள் பற்றிய நிலையாமைச் சிந்தனையும் உடல் பற்றிய நிலையாமைச் சிந்தனையும் சான்றோர் மனத்தில் நிலைபெற்றிருந்ததன் காரணமாக அவர்கள் அருளைப் பெரிதாகக் கருதினர். வள்ளுவரும் அருளே சிறந்த செல்வம் என்று அருட்செல்வத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்.

இதனை வே. முத்துலக்குமி என்பாரும், "அழியும் செல்வமாகிய பொருட் செல்வத்தைப் பண்டைத் தமிழர் செல்வமாகக் கருதவில்லை. பொருள் அழியும் இயல்பினது. ஆகையால் பொருட்பிணி என்றும், நில்லாப் பொருட்பிணி என்றும்

பொருள் குறித்துக் கருதினர். நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும் முற்பிறவியில் செய்த நல்வினையினால் விளைவன. அவை செல்வம் அன்று. செல்வம் என்பது தம்மைச் சேர்ந்தோரின் துன்பத்தைத் தீர்க்கும் அருள் உள்ளமே என்று உணர்ந்து வாழ்ந்தனர். ஈண்டுத் துன்பத்தைத் துடைத்தலாகிய அருளே அறமாக வலியுறுத்தப் பெற்றுள்ளது. பிறவுயிர்களின் துன்பத்தையும் தம்முடையது போலக் கருதிக் காத்தலே அறிவுடையவரின் செயலாகும். அதுவே சான்றோரின் கடமை என்று கலித்தொகை பண்டைத் தமிழரின் அருளறத்தை விளக்குகின்றது. பாரி முல்லைக்குத் தேரீந்ததும் பேகன் மயிலுக்குப் படாமீர்ந்ததும் அருளறத்தின் பாற்படுவன. இறைவனிடமும், அழியும் இயல்பினவாகிய பொன்னும் பொருளும் போகமும் வேண்டாது அருளும் அன்பும் அறமுமாகிய நிலையானவற்றையே பண்டைத் தமிழர் வேண்டினர்”[29] என்று சங்க இலக்கியத்தை மேற்கோள் காட்டி அருளின் முக்கியத்துவத்தை விளக்குகின்றார்.

### 2.3.2. ஈகைக்குணம்

ஈகைக்குணம் மனத்தூய்மையில் பிறந்து, செயலால் வடிவம் பெறுகிறது. தன்னிடம் இருக்கின்ற பொருளைப் பிறருக்குப் பகிர்ந்து கொடுப்பதற்கு அறமுறைப்பட்ட மனம் தேவை. அறவழிப்பட்ட தூய்மையான மனத்தில்தான் நற்சிந்தனைகள் பிறக்கும். தனிமனிதன் தன் மனத்தில் தோன்றிய அறச்சிந்தனையின் வாயிலாகத் தன் உடமையாக உள்ள பொருள்களை வறுமையில் வாடுபவர்களுக்கும், உழைத்துச் சம்பாதிக்க இயலாதவர்களுக்கும் கொடுத்து உதவுதல் என்பது ஒருவகை அறமாகும். இது பிறர் கற்பிக்காத, தனிமனித ஒழுக்கத்தால் பிறந்த அறமாகும். கொடுக்கின்ற குணம் இயல்பாக எல்லார்க்கும் வாய்க்கும் தன்மையற்றதென்பதால் முக்கியத்துவம் உடையதாகின்றது.

இரா. அனுராதா என்பார் இது குறித்துத் தம் ஆய்வில், ‘‘தமது பொருளைப் பிறருக்கும் பகிர்ந்து கொடுத்தல் வறுமையால் வாழவந்தர்க்குத் தனது பொருள்களை ஈதல் என வாழ்வியல் அறங்கள் பல இருக்கின்றன. அரசனிடம் சென்று பொருள் பெற்று வந்த சங்கப் புலவர் ஒருவர் அறம் செய்ய என் அமைதி அவசியம் இல்லை. நாடிவந்த வறியவர்களுக்குப் பொருளை வழங்கு எனத் தன் மனைவிக்கு அறிவுரை கூறுகிறார். செல்வம் பெற்றதன் பயன் ஈதல்தான்’’[30] என்று ஈகை குணத்தின் மேன்மையைக் குறிப்பிடுவர்.

பொருள் பெற்று வளமான வாழ்க்கை வாழ்கின்ற ஒருவர் அப்பொருளால் நிறைந்த பயன் பெற வேண்டுமானால், அப்பொருள்களை வறியவர்களுக்கு ஈகையென வழங்குதல் வேண்டும். புகழோடு வாழ்பவர்களின் செல்வம் உலகோர் அனைவருக்கும் பயன்படும் இயல்பினது. செல்வர், தமக்கு மட்டுமே உரியது என்று பொருளைச் சேர்த்து வைத்துக் கொண்டு இருப்பது இல்லை. நல்லவரின் செல்வம் பலருக்கும் பயன்படக் கூடியது என்பதை நற்றிணை, சிறந்த கருத்து வளத்தால் ‘‘இசைபட வாழ்பவர் செல்வம் போல’’[31] என்று குறிப்பிட்டிருக்கின்றது.

சங்க இலக்கியத்தில் தலைவனின் சிறப்புகளைக் கூறுகின்ற போதெல்லாம் அவன் பிறருடைய துன்பத்தை நீக்கும் இயல்புடையவன் என்னும் சிந்தனை முன்வைக்கப்படுகிறது. தலைவன் முயற்சியுடையவன் ஆதலால் தன்னை எதிர்நோக்கி வரக்கூடிய துன்பங்களை எல்லாம் விலக்கி அரிதின் முயன்று பொருட் செல்வத்தைத் தேடுகிறான். அவனுடைய செல்வம் தன் குடும்பத்துக்கும் ஏழைகட்கும், தன்னை நாடி வரும் வறியவர்களுக்கும் ஆதரவற்றவர்களுக்கும் பாதுகாவலாக இருந்து காக்கிறது. பண்டைத் தலைவனின் குறிக்கோள் பிறருக்கு உதவுவதே என்னும் சிந்தனையை,

***‘‘இரந்தோர் மாற்றல் ஆற்றா***
***இல்லின் வாழ்க்கை’’***[32]

*"பிறர்க்கென முயலும் பேரருள்"*[33]

என்னும் நற்றிணை அடிகள் எடுத்துக் காட்டுகின்றன. ஈகையால் புகழ் கிடைக்கிறது. புகழை விரும்பி இறந்த பின்னும் வாழும் உயரிய மனம் கொண்டவர்கள் எந்நாளும் பொருளை நம்பிக் கொண்டு அதனைக் காத்துக் கிடக்க மாட்டார்கள். அவர்களுடைய கவனம் தாம் பெற்ற பொருளைக் கொண்டு அத்தகையோர்களுக்கு உதவ இயலும் என்பதை நோக்கமாகக் கொண்டதாகும். குறுந்தொகை,

*"நல்லிசை வேட்ட நயனுடைய நெஞ்சிற்*
*கடப்பாட் டாளனுடைப் பொருள் போலத்*
*தங்குதற் குரிய தன்று"*[34]

என்னும் அடிகளான் புகழ்பெற விரும்புவர்கள் பொருளைச் சேர்த்து வைத்துக் கொண்டு இருக்க மாட்டார்கள் என்று குறிப்பிடுகின்றது. வாழ்க்கையில் இருந்து பிரிக்க இயலாத கூறாக மக்கள் வாழ்வில் ஈகை பழக்கப்பட்டிருந்தது. மக்களும் நாடாண்ட மன்னர்களும் தங்கள் தங்கள் சந்திக்கும் பொருள் வளத்திற்கும் ஏற்ற வகையில் ஈகை வழங்குவதை நோக்கமாகக் கொண்டிருந்தார்கள். அறமே மக்கள் வாழ்க்கையில் நலம் தருமாதலால் ஈகை மக்கள் வாழ்வில் பேரளவு பங்கு பணியாற்றியது. அதன் விளைவாகவே,

*"விளைக வயலே வருக விரவலர்"*[35]

*"ஈதல் இரந்தார்க்குஎன்று ஆற்றாது வாழ்தலின்*
*சாதலும் கூடுமாம் மற்று"*[36]

*"தந்நயந் துறைவோர்த் தாங்கித் தாநயந்*
*தின்னமர் கேளிரோடேமுறக் கெழீஇ*
*நகுத லாற்றார் நல்கூர்ந் தோரென"*[37]

என்றவாறாகச் சங்க காலத்தில் அறத்திற்கு, ஈகைக்கு முக்கியத்துவம் கொடுத்துச் செய்யுட்கள் படைக்கப்பட்டன. பெற்ற செல்வத்தின் பயன் பிறருக்குக்

கொடுத்து உதவுதல் என்றும், தன்னிடம் பொருள் கேட்டு வருபவர்களுக்கு இல்லை என்று ஒருவன் கூறுதல் நன்மை பயக்காது என்னும் கருத்தமைவுகள் பண்டைய மக்களின் தூய்மையான மனத்தில் தோன்றிய ஈகை என்னும் அறத்தை உணர்த்தும் சான்றுகளாகின்றன.

### 2.3.3. நட்பில் மனத்தூய்மை

உலக வாழ்வில் ஒருவன் தன் சிறுவயதுக் காலத்தும், அதன்பின் வளர்ந்து மனம் பக்குவப்படும் வரையும் உறவினர்களைச் சார்ந்திருப்பான். பின்னாளில் இவர்கள் அனைவரும் தமக்கென உள்ள உறவுகளோடு, உறவுகளுக்கு இணையாக நட்புகளையும் சேர்த்துக் கொள்கின்றனர். நட்பு என்னும் குணம் சிறந்தது. மனத்தளவில் அறக்கோட்பாட்டினையும் உயரிய கொள்கையினையும் கொண்டிருப்பவரே சிறந்த நட்பைப் போற்றி வளர்க்க இயலும். கோப்பெருஞ்சோழன் – பிசிராந்தையார், அதியமான் – ஔவையார், பாரி – கபிலர் என்றவாறாகக் கூறப்படும் நட்புகள் யாவும் மிக்க புகழ்பெற்ற தன்மையன. நட்புக்கு மனத்தளவில் தோன்றும் தூய்மையான அறமே காரணமாக அமைவதனைச் சங்க இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன.

உண்மையான நட்பு எத்தகையது என்பதற்கு நற்றிணை நுட்பமான ஓர் இலக்கணத்தைத் தருகிறது.

*"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்*
*நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்"*[38]

நண்பர் விடத்தையே கொடுப்பினும் விடம் என்று அறிந்தும் மறுக்காமல் அதனை உண்ணும் தன்மையரே உண்மையான நண்பர் என்று மேற்கண்ட பாடலடிகள் குறிப்பிடுகின்றன. நட்பில் ஆராய்ச்சித்திறம் முக்கியமானது. எண்ணியபின் துணிய வேண்டும். இவர், நட்புக் கொள்ளத்தக்கவரா, அதனால் என்னென்ன விளைவுகள் ஏற்படும் என்ற ஆராய்ச்சித்திறன் மிக்க மனநிலை

நட்புக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும். நட்புக் கொண்ட பின்னால் இவருடைய குணம் இவ்வாறு இருக்கிறதே என்று வருத்தம் கொள்வது பயன் இல்லாததாகும்.

*"பெரியோர்*
*நாடி நட்பின் அல்லது*
*நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே"*[39]

என்று நற்றிணை நட்புக் குறித்துக் கூறும் கருத்து சான்றோர் ஆராய்ந்தறிந்து நட்புக்கொள்ளும் சூழலை விளக்குகின்றது. மேலும், நட்பு பொருளை நோக்கியோ, செய்த உதவிக்கு மாற்றாகவோ தோன்றுவது கிடையாது. இயல்பாக, ஒருவர் மேல் ஒருவர் கொள்ளும் மன ஈர்ப்பினால், உள்ளங்கள் ஒன்றுபடுவதனால் உருவாகும் என்று சங்க இலக்கியங்கள் கருத்துரைக்கின்றன. சான்றோர்களுடன் கொண்ட நட்பானது காலத்தால் நீடித்து நிற்கும் தன்மையதாகும். சான்றோர்கள் ஒருவருடைய மனநிலையினையும் குணநலன்களையும் எளிதாக எடைபோடும் தன்மையவர்களாவர். சான்றோர்களின் உயர்வான நட்பினைப் பகைவர்கள் கூட மதிக்கும் பண்புடையவர்களாக விளங்குவர் என்று "பெறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை"[40] என்னும் பரிபாடல் அடி குறிப்பிடுகின்றது.

இரா. அனுராதா, "நட்பில் உண்மை – பொய்மை என இரண்டும் பெறும் இடம் அதிகம். வெற்றி தோல்விகளால் வரும் படிப்பினைகள் சில நேரங்களில் நட்பினை உறுதி செய்யும் அளவுகோலாக ஆவதுண்டு. கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் கொண்ட நட்பு காலத்தால் பழமையானது. மனதால் பண்பட்டது. அத்தகைய புரிந்துணரும் தன்மை எல்லா நட்பிலும் வாய்க்கும் என்று சொல்ல இயலாது"[41] என்று நட்பின் தன்மை குறித்துக் குறிப்பிடுகின்றது. கூற்றுவனைக் கூட வெல்லும் தன்மை மிக்கவனும் நண்பனிடம் தோற்கின்ற சூழலைக் கலித்தொகை,

***“கூற்றம் வரினும் தொலையான், தன் நட்டார்க்குத்***
***தோற்றலை நாணாதோன்”[42]***

என்றும், வலிமை படைத்த வீரனுக்குள்ளும் மென்மையான மனத்தை நட்பு உருவாக்கும் என்பதை,

***“துப்பெதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையின்***
***நட்பெதிர்ந் தோர்க்கே அங்கை நன்மையின்”[43]***

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

### 2.3.4. செயல்திறம்

ஒன்றைத் தெளிவாகச் செய்து முடிக்கும் திறன் என்பது மனத்தூய்மையாலும், மனத்திடத்தாலும் வருவதாகும். இதனை வினைசெயல்வகை என்று குறிப்பிடுவர். ஒரு செயலைச் செம்மையாகச் செய்து முடிக்கவும் அச்செயலின் தன்மைகளை ஆராயவும் தெளிவான மனநிலை தேவை. குழப்பமான சிந்தனை உடையோர்களால் எச்செயலையும் வினைத் திட்பமுடன் செய்து முடிக்க இயலாது. வள்ளுவர் ஒரு செயலைச் செய்து முடிக்கும் திறன் வாய்ந்தவனை அறிந்து, அச்செயலை அவனிடம் ஒப்படைத்தல் செய்வது அச்செயலில் வெற்றி தரும் என்பதைக் குறிப்பிடும் முகமாக,

***“இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து***
***அதனை அவன்கண் விடல்”[44]***

என்று குறிப்பிடுவர். இக்கருத்தையே முன்னிலைப்படுத்திக் கூறும் வகையில் நற்றிணை, செய்ய முடிவு செய்த செயல் அப்பொழுது செய்ய முடியாமல் போனால் அது துன்பத்தையும் அதோடு இழிவையும் தரும் என்று குறிப்பிடுகின்றது.

***“செய்வினை முடியாது எவ்வம் செய்தல்***
***எய்யா மையோடு இளிவு தலைத்தரும்”[45]***

ஆண்மகனுக்கு வினையாற்றலே, கடமை செய்தலே தலையாய கடன் ஆகும். அதனோடு பொருள்தேடும் முயற்சி இல்லறம் நடத்துவதற்கும் அறம் செய்வதற்குமானது. அதனாலேயே வினையை ஆடவர்க்குரியதாகவும், இல்லறம் ஓம்பல் என்பது பெண்களுக்குரியதாகவும் கூறப்பட்டுள்ளது. இதனைக் குறுந்தொகை,

***"வினையே ஆடவர்க்குயிரே வாணுதல்***
***மனையுறை மகளிர்க் காடவர் உயிர்"***[46]

என்று குறிப்பிடுகிறது.

"நன்றாகச் சீர்தூக்கி ஆராய்ந்து ஈடுபட்ட செயல்களில் சில நேரங்களில் பிழைகள் ஏற்படுதல் உண்டு. அந்நிலையில் மனம் தளராது நன்மை தீமைகளை ஆராய்ந்து முடிவெடுக்க வேண்டும். அவ்வாறு முடிவெடுக்கும் போது பொருத்தமில்லாக் கூறுகளை விலக்கி நீர் விடுத்துப் பாலை மட்டும் உண்ணும் அன்னப் பறவை போல் நற்செயல்களை எடுத்துக் கொண்டு வெற்றியடையச் செய்ய வேண்டும்"[47] என்று இதே கருத்தை இரா. அனுராதா குறிப்பிடுகிறார்.

எச்செயலையும் மனத்தால் தெளிவாகத் திட்டமிட்டுச் சரியான காலத்தில் நிறைவேற்றல் நன்றாகும். இன்றேல் செயலின் பயன் குறித்த காலத்தில் கிடைக்காமல் போவதற்கு வாய்ப்புகள் அதிகம் உள்ளது. கடல், வலிமையான அலைகளைத் தன்னகத்தே கொண்டது. அலைகளை ஆளத்தெரிந்தவன்தான் நிறைந்த மீன்களுடன் கடலில் இருந்து மீண்டு வருகிறான். வழிநடைப் பயணம் கடுமை உடையது எனினும் திடமான மனத்தை உடையவன்தான் எதிர்வரும் துன்பங்களை எல்லாம் வென்று இறுதியில் பொருளோடு மீண்டு வருகிறான்.

*"அறந்தலைப் பிரியா தொழுகலுஞ் சிறந்த*
*கேளீர் கேடுபல வூன்றலு நாளும்*
*வருந்தா வுள்ளமொ டிருந்தோர்க்  கில்லெனச்*
*செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதன்"*[48]

என்னும் அகப்பாடலடிகள், செய்யும் செயலால் பெருமையும் புகழும் கடமையைச் சரிவர ஆற்றுபவர்களுக்கே உண்டெனக் குறிப்பிடுகின்றது. தனிமனிதன் தன் தேவைக்கான பொருளைத் தூய்மையான மனத்துடன் ஈட்ட வேண்டும். அத்துடன் குடும்பம் சார்ந்த நிலையில் உற்றார் உறவினர்க்கும் இரந்து வருவோர்க்கும் எனப் பொருளை முயன்று திரட்டுதல் வேண்டும். அதற்கு இயல்பாகவே நல்மனமும் ஊக்கமும் தேவைப்படுகிறது. இதனை,

*"கேள்கே டூன்றவும் கிளைஞ ராரவுங்*
*கேளல் கேளீர் கெழீஇயின ரொழுகவு*
*மாள்வினைக் கெதிரீய ஆக்கம்"*[49]

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. நினைத்த செயலை நினைத்தவாறே முடிப்பது நன்மை தரும். அதனையே வினைத் திட்பம் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

*"முருகுலுத் தீயே முன்னியது முடித்தலின்"*[50]

பொருள் செல்வம் ஆதாரமானது என்பதோடு பெரிய புகழ் படைத்ததாகவும் விளங்குகிறது. சிறிதளவு பொருள் ஈட்ட வேண்டுமென்றாலும் பேரளவு பொருள் ஈட்ட வேண்டுமென்றாலும் முயற்சி இன்றியமையாததாகிறது. எனவே பொருட் செல்வம் சேர்க்க வேண்டும் என்றால் இடையறாத முயற்சி வேண்டும். அப்போது தான் அதனை ஈட்ட முடியும் என்கிறது புறநானூறு.

*"புலிபார்த்து ஒற்றிய களிற்றுஇரை பிழைப்பின்*
*எலிபார்த்து ஒற்றாது ஆகும்"*[51]

என்ற பாடல் அடிகள் இதனைத் தெளிவுபடுத்துகின்றன.

### 2.3.5. உண்மை பேசுதல்

உண்மை அறத்தின்பாற்பட்டது. இதனைப் பண்டைய இலக்கியங்கள் வாய்மை எனக் குறிப்பிடுகின்றன. உண்மை பேசுதல் என்பது மனத்தின் தூய்மையைப் பொறுத்தது. உண்மை பேசுவதை அறமாக நிலைபெறச் செய்வதில் தனிமனிதனுக்கு நிறையப் பொறுப்புகள் இருக்கின்றன. அறஇலக்கியச் சிந்தனை உடைய சங்கப்பாக்களில் அறங்கள் ஒவ்வொன்றுக்குமான முக்கியத்துவம் ஒவ்வொரு அறத்தைப் பற்றிப் பேசும் போது வெளிப்படுகின்றது. உண்மை பேசுபவர்கள் அறத்தின் வழிப்பட்டவர்கள். தன் வாயினால் துன்பம் தரத்தக்கனவற்றையும் பொய்யினையும் கூறிக் கொண்டு திரிபவர்கள் வாழ்வின் சிக்கலான சூழல்களை எதிர்கொள்ளும் வாய்ப்பு உருவாகும் என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. பழமொழி இலக்கியம்,

> ***"பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்***
> ***சொல்லாலே தன்னைத் துயர்படுக்கும் நல்லாய்***
> ***மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்***
> ***நுணலும்தன் வாயால் கெடும்"***[52]

என்று பொய் சொல்லிக்கொண்டு திரிபவர்களின் நிலை குறித்துப் பேசுகிறது. சமுதாயத்தில் பிறருக்குத் தீங்கு விளைவிக்கும் குணம் உடையவர்கள் என்றேனும் தம் வாய்ச் சொற்களாலேயே துன்பத்திற்குள்ளாக நேரிடும். மணலுள் மூழ்கிக் கிடந்து ஒலி எழுப்பும் தன்மை உடைய தவளை தன் வாயினாலேயே, பாம்புக்குத் தான் இருக்கும் இடத்தை அறிவிப்பது என்பது மேற்கண்ட குணம் உடையவர்களுக்குச் சான்றாகிறது.

மனம், சொல்கின்ற சொல்களுக்கெல்லாம் சாட்சியாக இருக்கும். தவறு என்பது எது, சரி என்பது எது என்பதைக் காலத்தால் சுட்டிக் காட்டும். அதனை உணராது போனால் விளைவுகள் துன்பம் தரத்தக்கவையாக அமையும். தன் உள்ளத்திற்கு நேரிய குணமுடன் ஒவ்வொருவரும் நடக்க வேண்டும். பிறருக்குக்

கொடுத்த வாக்கை எப்பொருட்டேனும் காப்பாற்றுதல் வேண்டும் என்று நற்றிணை அறம் பற்றி உரைக்கின்றது.

*"பழையன் வேல்வாய்த்து அன்னநின்*
*பிழையா நன்மொழி"*[53]

தீய மனம் படைத்தவர்களின் இயல்பு அடுத்தவர்க்குத் துன்பம் விளைவிப்பதும் நேரிய செய்தியைக் குழப்பிக் கூறுவதும் ஆகும். ஆனால் சான்றோர் என்பவர்கள் எந்நிலையினும் பிறருக்குத் துன்பம் தராத வாய்மையைக் கொண்டவர்கள். சான்றோர்களின் வாய்மை குறித்துக் குறுந்தொகை,

*"அறிகறி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை"*[54]

என்று குறிப்பிடுகிறது. எனவே, வாய்மை என்பது உண்மை பேசுதல், பிறர்க்குத் தீமை இல்லாத சொற்களைக் கூறுதல் என்னும் பொருளை உடையதாகின்றது. வாய்மை பிறக்குமிடம் மனமாதலின் மனத்தை நன்முறையில் வைத்து பொய்யின் வழிப்படாமல் காத்தல் எந்நிலையினும் நன்மை தருவதாக அமையும்.

### 2.3.6. நிலையாமைச் சிந்தனைகள்

மனிதர்கள் கூடி வாழ்கின்ற உலகம், நிலையாமையின் பாற்பட்டது. அவ்வாறே உலகில் இருக்கின்ற இயற்கைப் பொருட்கள், உயிர்கள், மனிதனால் படைக்கப்பட்ட பொருட்கள் அனைத்தும் காலத்தால் அழியும் இயல்புடையன. அதனால் பூவுலகில் வாழ்கின்ற மக்கள் நிலையாமை என்னும் சிந்தனையை மனத்தில் கொண்டு நல்லறங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். உலகின் நிலையாமையை உணர்ந்த மனம் அறவழிப்பட்டு நடக்க வேண்டும். சங்க இலக்கியங்கள் விரிவான வகையில் நிலையாமை அறத்தை உணர்த்தியிருக்கின்றன. அவ்வாறு உணர்த்தும்போது, அவை தனிமனிதனின் சிந்தனைக்கு உகந்ததாக அமைந்திருக்கிறது. மனிதராகப் பிறந்தவர்கள் குழந்தைப் பருவத்தில் இருந்து

படிப்படியாக பலநிலைகளில் வளர்ந்து மெதுவாகப் பல பருவங்களைக் கடந்து இறுதியில் இறந்துபோகிறார்கள். ஒவ்வொருவருடைய வாழ்விலும் கடந்து சென்ற பருவமும், பிறவும் மீள்வது கிடையாது. இழந்த இளமைப் பருவம் எப்பொழுதும் மீண்டு வருவது இல்லை. அதுபோல் ஒருவர் இத்தனை காலம் வரை நான் வாழ்வேன் என்று அறுதியிட்டுக் கூறுதல் இயலாதது ஆகும்.

***"முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்***
***வாழ்நாள் வகைஅளவு அறிநரும் இல்லை"***[54]

சங்க இலக்கியப் பாடல் ஒன்று வில்லில் இருந்து புறப்பட்ட ஒரு அம்பு போலக் காலம் என்பது விரைந்து கழியும் என்று கூறுகிறது. மனிதனின் உடலில் இன்பம் அனுபவிக்க வாய்ப்பாக அமைவது இளமை. இவ்விளமையும் அதற்கு நிலைக்களனாக அமையும் யாக்கையும், அது தரும் இன்பமும் என இவையாவும் நிலையாமைத் தன்மையைக் கொண்டனவாகும்.

***"இளமையும் காமமும் நின்பாணி நில்லா"***[55]

***"வைகல் தோறும் இன்பமும் இளமையும்***
***எய்கணை நிழலின் கழியுமிவ் வுலகம்"***[56]

சங்க காலத்தில் தலைவனுக்குரிய இன்றியமையாத செயல்களில் வாழ்க்கைக்கான பொருள் தேடல் என்பதும் ஒன்று எனக் கூறப்பட்டது. ஆனால் தலைவன் பொருள் தேடச் செல்கின்ற காலத்தில் தலைவி, பொருளின் நிலையாமையினை எடுத்துக்கூறி, இல்லற வாழ்வில் அவனை ஈடுபடுத்தலை மேற்கொள்கிறாள். இன்பம் பெறுவதற்கு இளமைக் காலமே சிறந்ததாகையினால் தலைவி. "இளமையிற் சிறந்த வளமையு மில்லை"[57] என்று தலைவனிடம் வற்புறுத்துகிறாள்.

வாழ்கின்ற நாளில் கழிந்து கொண்டிருக்கும் ஒவ்வொரு நாளும் நிலையாமைச் சிந்தனையை உணர்த்துவதாக அமைந்திருக்கிறது. மனிதன்

தான் வாழ்கின்ற நாளில் இறப்பிற்கு உரித்தன நாள் இதுவென்று யாரும் முன்னரே அறிந்து கூறல் இயலாது. ஆற்றில் ஓடிக்கொண்டிருக்கும் நீர்நிலை இல்லாமல் ஓடிக் கொண்டிருத்தல்போல இளமையும் நிலை இன்றிக் கழியும் என்பதனைச் சங்க இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. கனவு என்பது தோன்றி மறையும் தன்மையுடையது. அதுபோலவே இளமை விரைவாக கழிந்து முதுமை வரும் என்பதை அறிய முடிகிறது. இதனை,

***"கடைநாள் இதுவென்று அறிந்தாரும் இல்லை"*** [58]

***"நாளினும் நெகிழ்பு ஓடும்நலன் உடன்நிலையுமோ***
***கூற்றுழ்போற் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ***
***முகைவாய்த்த தடம்போலும் இளமையும் நிலையுமோ"*** [59]

***"ஆறுநீர் கழிந்தன்ன இளமை"*** [60]

***"கனவு கழிந்தனைய வாகி நனவி***
***னாளது செலவு மூப்பினது வரவும்"*** [61]

என்னும் சான்றுகளான் அறியலாம். உலகில் வாழ்கின்ற மக்கள் என்றேனும் இறப்பதற்கு உரியவர்கள் வெற்றியும் தோல்வியும் நிலையாமைப் பண்பினைத் தனதாக்கிக் கொண்டன. இரண்டும் ஒருவரிடமே நிலைத்து நில்லாமல் பலருக்கும் உரிமையுடையனவாய் விளங்கும் தன்மையன. புறநானூறு இதனை,

***"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்***
***புதுவதன்றிவ் வுலகத் தியற்கை"*** [62]

என்று குறிப்பிடுகிறது. வானத்தில் வலம் வருகின்ற நிலவு நிலையாமையை உணர்த்தும் இயல்புடையது. அதன் தேய்ந்து வளரும் பண்பு மனித இனத்திற்கு நிலையாமையை உணர்த்தும் ஒரு கருவியாக அமைகிறது.

இதனை,

***"தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்***
***மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்***

*அறியா தோரையும் அறியக் காட்டிக்*
*திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து''*[63]

என்று புறநானூறு வலியுறுத்துகிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும்,

*"வாடாப் பூவின் பொய்கை நாப்பண்*
*ஒடுமீன் வழியின் கெடுவ''*[64]

*"நில்லாப் பொருட்பிணி''*[65]

*"நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ''*[66]

*"மரீஇத்தாம் கொண்டாரைக் கொண்டக்கால் போலாது*
*பிரியுங்கால் பிறர்என்னப் பீடின்றிப் புறமாறும் திரு''*[67]

என்னும் சான்றுகளும் நிலையாமையை உணர்த்துகின்றன. சங்க இலக்கியத்தில் காணப்படும் நிலையாமைச் சிந்தனைகளை மனத்தால் உணர்ந்தால்தான் எத்தகையோராக இருந்தாலும், எத்தகை பொருளாக இருந்தாலும் அது ஒருநாள் அழிவது திண்ணம் என்பதனால் நிலையாமையை மனத்தால் உணர வேண்டும். தனி மனிதர்கள் ஒவ்வொருவரும் நிலையாமைச் சிந்தனைகளை மனத்தில் கொள்வதன் மூலமாக, தாம் வாழும் வாழ்வில் நடுநிலையாளர்களாகவும், பிறருக்கு நன்மை பயக்கும் செயல்களைச் செய்பவர்களாகவும் இருக்க இயலும். உலகம் எண்ணற்ற மாயைகளின் தொடர்ச்சியால் ஆகியது. பூமியில் நிலையாமையினை உணர்ந்தவர்கள் மட்டுமே அதன் தாக்குதலில் இருந்து விடுபட்டு அமைதியான வாழ்க்கை வாழப் பழகியிருக்கின்றனர். சங்க இலக்கியங்கள் கூறியுள்ள நிலையாமை குறித்த அறங்கள் தனி மனிதனால் போற்றப்பட்டுப் பின் சமுதாயம் முழுமைக்கும் பரவி நலம் தருவனவாகத் திகழ்கின்றன.

## 2.4. சான்றோர் ஒழுகலாறு

மனிதராகப் பிறந்தவர்களில் தாம் கொண்ட புகழால் நிலைத்து நிற்பவர்கள் ஒருசிலரே. அவர்களில் சான்றோர் முக்கியத்துவப்படுத்தப்

படுகின்றனர். சான்றோர் மனநிலை மனத்தூய்மையாய் அமையும் தனிமனித அறத்தில் முக்கியமானதாகும். ஏனெனில் சான்றோர்கள் தன் சுகம் தவிர்த்துப் பிறர் சுகத்தையே தலையாயதாகக் கொண்டு வாழ்பவர்களாவர். சான்றோர்கள் நற்சிந்தனைகளை மனத்தில் கொண்டு, தாம் கற்ற கல்வியினால் மனப்பக்குவமடைந்து தங்கள் குலத்தற்கேயுரிய உயரிய குணத்தினால் மேன்மையான மனநிலையுடன் வாழ்பவர்களாவர். சிறியவர்களின் மேல் அவர்களின் செயல்களின் மேல் கோபம் கொள்ளாமல் நடுநிலையுடன் வாழும் தன்மையவர்களாவர். அதனாலேயே நற்றிணைப் பாடல் ஒன்று சான்றோர் குணத்தை,

***"ஆன்றோர் செல்நெறி வழாஅச்***
***சான்றோன்"***[68]

என்று சிறப்பிக்கிறது. ஒப்புரவு அறிதல், பழிக்கு அஞ்சுதல், நல்லவர்களுடன் நட்புக் கொள்ளல், சூழல்களுக்கு இணங்கல், கோபம் கொள்ளாமை என்பனவெல்லாம் சான்றோர்களின் நற்குணங்களுள் சிலவாகும். சான்றோர்கள் புகழுக்கே நாணம் கொள்பவர்கள் என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது. தன்னுடைய இன்பத்தை உயர்வாக நினைக்காமல் பிறருடைய நலனின் அக்கறை கொண்டவர்களாகச் சான்றோர்கள் விளங்குவதனை,

***"பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி அறனறிதல்***
***சான்றவர்க் கெல்லாம் கடன்"***[69]

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது. சான்றோர்கள் நல்லறத்தை உலகோர்களுக்குக் கற்பிக்கும் குணம் கொண்டவர்கள் ஆவர். நல்லோர்களான சான்றோர்கள் தங்களின் மனத்தில் அறக்கோட்பாட்டுடன் தூய்மையைப் போற்றி வாழ்தல் அறங்களில் உயர்ந்ததாகும். மண்ணுலகில் வாழ்கின்றவர்கள் மனத்தூய்மையுடன் வாழ்வதற்குச் சான்றோர்கள் வழிகாட்டுகின்றனர்.

### 2.4.1. நற்பண்பு

மனிதருக்கு நற்பண்பு இன்றியமையாதது. தனிமனித ஒழுக்கத்தின் மனத்தூய்மையில் நற்பண்பு குறிப்பிடத்தக்க இடம் பெறுகிறது என்பதை இரா. அனுராதா, “மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் மனிதப் பண்பு இன்றியமையாதது. வள்ளுவர் பண்பில்லாதவரை மரம் எனக் குறிப்பிடுகிறார். மனிதனின் ஆளுமைப் பண்பை வெளிக்காட்டுவது நற்பண்புதான். ஆனால் இயல்பாகவே மனிதன் குறையும் நிறையும் உள்ளவனாக இருக்கிறான். சந்தர்ப்பங்களும் சூழ்நிலைகளும் அவனைத் தவறு செய்யத் தூண்டுவதாக அமையும் போது உயர்ந்த மனிதனிடம் பண்புக்குறை ஏற்படுகிறது”[70] என்று பண்புக்கு விளக்கம் தருகிறார். இயல்பாக மனித மனம் தூய்மையுடன் இருத்தல் வேண்டும். குணக்குறைபாடு ஏற்படுவது மனிதனின் இயல்பெனினும் அதனைக் கடந்து மனத்தூய்மையும் நல்லொழுக்கமும் கொண்டு வாழ்தல் நலம் தரும் ஒன்றாகும். பரிபாடலில் வைகையில் வெள்ளம் பெருக்கெடுக்கும்போது அதில் நீராடுவதற்காக ஆண்களும் பெண்களும் கூடுகின்றனர். அங்கு நீராடிக் கொண்டிருப்பவர்களில் ஒரு பெண்ணின் மார்பை ஒருவன் உற்று நோக்குகின்றான். இயற்கையில் இக்குணம் பண்பின்மையை உணர்த்துவதாகும். இவனை, ஓட்டை மனமுடையவன் என்று பரிபாடல் குறிப்பிடுகின்றது.

***“கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்***
***ஓட்டை மனவ னுரமிலி”***[71]

பண்டைய வாழ்வியலில் புலவர்களும் இரவலர்களும் தங்கள் வாழ்க்கைக்காகப் பரிசுப் பொருள் பெறும் பொருட்டு மன்னர்களைச் சார்ந்திருந்தனர். அவ்வாறு புலவர்களும் இரவலர்களும் மன்னனைச் சந்திக்கும்போது அவர்கள் மன்னன் உடனடியாகப் பரிசு கொடுத்துத் தங்களின் வறுமையை நீக்க வேண்டும் என எண்ணுவர். ஆனால் மன்னன் பரிசு

கொடுக்கக் கால நீடிப்புச் செய்தால் அதனைத் தங்களுக்கு ஏற்பட்ட இழுக்காகக் கருதி நாணம் கொள்வர். இதனை,

*"கையுள் எதுபோல் காட்டி வழிநாள்*
*பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்*
*நாணாய் ஆயினும் நாணக் கூறி"*[72]

என்னும் அடிகள் தெளிவிக்கும். மக்களைத் துன்புறுத்தும் மனம் கொண்டவர்கள் உலகில் வாழவே செய்கின்றனர். மனிதர்கள் தங்கள் இனமான சக மனிதர்களைத் துன்புறுத்தி வாழ்தல் நேரியதன்று. பாலை வழியில் வாழ்கின்ற ஆறலைக் கள்வர்கள் துன்பம் செய்யும் இயல்பினர்கள். அவர்களின் செயல்கள் தீமை பயப்பதனால் அவர்களைக் கொடியோர் என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது.

*"அத்தம் செல்வோர் அலறத் தாக்கி*
*கைப்பொருள் வௌவும் களவேர் வாழ்க்கைக்*
*கொடியோர்"*[73]

சமுதாய வாழ்வில் பிறருக்குத் துன்பம் பயப்பதாகத் தீமையான சொற்களைக் கூறிக்கொண்டு வாழ்பவர்களின் செயல் நன்மை தருவதன்று. அத்தகைய குணம் உடையவர்கள் சமுதாயத்தில் வாழ்ந்திருந்தார்கள் என்பதை,

*"பழியில ராயினும் பலர்புறங் கூறும்*
*அம்ப லொழுக்க மாகிய வெஞ்சொற்*
*சேரியம் பெண்டிர்"*[74]

என்னும் அடிகள் குறிப்பிடுகின்றன. நன்மை கிடைக்காது எனினும் சமுதாய வாழ்வில் பிறருக்குத் தீமை செய்யும் குணம் கொண்டவர்கள் தங்கள் குணத்தை விடுவது கிடையாது. புறம் கூறுபவர்கள் தங்கள் மகிழ்ச்சிக்காக அதனைச் செய்வதாகச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

***"... நல்ல போலவும் நயவ போலவும்***
***தொல்லோர் சென்ற நெறிய போலவும்***
***காதல் நெஞ்சினும் இடையுகற்கு அகிலரும்***
***ஏதில் மக்கள்"***[75]

தீய சிந்தனை உடையவர்கள், சமுதாயத்தின் நற்குணம் உடையவர்களுடன் சேர்ந்து வாழ்கின்றபோது சில சிக்கல்கள் உண்டாகின்றன. அமைதிக் குறைபாடு ஏற்படுகின்றது. அதனால் தனிமனிதர்கள் தங்களின் சிந்தனைகளைச் சீர்படுத்திக் கொள்வதன் மூலம் இன்னல்களில் இருந்து தப்ப இயலும். சமுதாயமும் நேரிய முறையில் செல்லும்.

### 2.4.2. நடுநிலைமை

நடுநிலைமை என்பது மனம் சார்ந்த அறமாகும். தனிமனிதன் தனக்கும் பிறருக்கும் நடுநிலையோடு நடத்தல் அறத்தின் பாற்பட்டது. பண்டைய தமிழகத்தில் அரசாண்ட மன்னர்கள் பலரும் நடுநிலையுடன் நல்லாட்சி புரிந்தமையினைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்தியிருக்கின்றன. மன்னனின் செங்கோல் முறை திறம்பாத் தன்மை கொண்டது. மன்னன் தூய்மையான மனத்துடன் நாட்டில் நடைபெறும் அநீதியான செயல்களை நேரிய மனத்துடன் அணுகி அதற்கான தீர்வுகளைக் காணும்போதுதான் நலம்மிக்கச் செயல்கள் பலவும் நாட்டில் நடைபெறும். மன்னன் திறம்பட ஆட்சி செலுத்தாமல் போகும் காலங்களில் நாட்டில் அறத்திற்குப் புறம்பான செயல்களே நடைபெறும் என்பதைச் சங்கப்பாக்கள் தெளிவுபடுத்தியிருக்கின்றன. பண்டை நாளில் மன்னனின் நேரிய செயலும் நல்லாட்சிக்கு மன்னனின் செங்கோலும் முக்கியத்துவம் உடையதாகக் கருதப்பட்டது. எளியோர்க்கு நன்மை செய்வதாக மன்னனின் செங்கோல் அமைய வேண்டும் என்பதைப் புறநானூறு,

***"அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து***
***முறைவேண்டு பொழுதின் பதனெளியோர்"[76]***

என்னும் அடிகள் குறிப்பிடுகிறது.

பண்டை நாளில் நல்லாட்சி நடந்த காரணத்தால் நாட்டில் அறம் சிறந்திருந்தது. "குற்றங்களை முறைப்படி கேட்டறிந்து நீதி வழங்கும் முறைமை அறங்கூறு அவயத்தில் நிகழ்த்தப்பெறும். அறங்கூறு அவையம் அச்சம், அவலம், ஆர்வம் முதலியன நீங்கிய இடமாகும். செம்மையான உண்மையினால் அறத்தோடு விளங்குவது அறங்கூறு அவையமாகும்."[77] "நீதி உரைப்பவர்கள் பந்தம், பாசம், உறவுநிலைகள், பற்றுள்ளம் முதலியவற்றினின்றும் நீங்கியவர்களாக இருந்து நீதி வழங்க வேண்டுமென்பதை அறிய முடிகிறது."[78]

நாட்டை ஆளும் மன்னன் செங்கோன்மை, கொடை ஆகிய பண்புகளில் சிறந்திருக்க வேண்டும் என்பதை இதன்வழி உணர முடிகிறது. புறநானூறும்,

***"சோறு படுக்குந் தீயோடு***
***செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது***
***பிறிதுதெறல் அறியார் நின்நிழல் வாழ்வோரே***
***திருவில் அல்லது கொலைவில் அறியார்***
***நாஞ்சில் அல்லது படையும் அறியார்"[79]***

என்னும் அடிகளால் நாட்டில் அமைதி நிலவவும் வளம் பெருகவும் மன்னனின் ஆட்சியே காரணம் என்பதை எடுத்துக் கூறுகிறது. ந்ாட்டில் நடைபெறுகின்ற நல்லாட்சியினால் நாட்டில் நல்லவர்கள் நிறைந்திருப்பர். நாட்டு மன்னனின் செங்கோல் அறத்தில் இருந்து நழுவினால் அறத்திற்குப் புறம்பான செயல்கள் பலவும் நடைபெறும். வெயிலின் கொடுமையில் நடந்துவந்து களைத்துப் போனவர்களுக்கு மர நிழல் இன்பம் தருவதுபோல, மன்னனின் செங்கோலும் வெண்கொற்றக் குடையும் மக்களுக்கு நலம் தருவனவாக அமைய வேண்டும் என்பதை,

*"கடனறி மன்னர் குடைநிழற் போலப்*
*பெருந்தண் ணென்ற மரநிழல்"*[80]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. தனிமனித அறச்சூழலில் சமுதாய வாழ்வில் வாழ்கின்ற மக்களும் தம்முடைய மன அளவில் எந்நிலையிலும் நல்ல மன்னனைப்போல நடுநிலையைப் போற்றுபவர்களாக இருத்தல் வேண்டும். அப்போதுதான் அவர்கள் தங்கள் தூய்மையான மனநிலை மூலம் சமுதாயத்தில் நன்மை மிக்க செயல்கள் நடைபெற வழிகாட்ட இயலும்.

## 2.5. மனத்தின் உயரிய நிலை

மக்கள் தங்கள் மனத்தினால் உயர்நிலை அடைய வேண்டுமானால் அதற்கான பண்புநலன்கள் சிலவற்றைக் கொள்ளல் வேண்டும். உள்ளதைப் பகிர்ந்து கொடுத்து உண்ணுதல், தீய செயல்கள் செய்வதற்கு அச்சம் கொள்ளுதல், சோம்பல் இல்லாமல் இருத்தல், எந்நிலையிலும் வெறுப்பு இல்லாமல் நடந்து கொள்ளுதல், எச்செயலையும் மறதி இல்லாமல் செய்தல், புகழுக்காக எத்தகைய உயரிய செயல்களையும் செய்தல், பழிக்காக அச்சம் கொள்ளுதல் என்னும் பண்புகளைக் கொண்டிருக்க வேண்டும். சான்றோர்கள் இத்தகைய குணங்களைத் தமதாகக் கொண்டு விளங்கியதால் தமக்கும் பிறருக்கும் பயனுள்ள வாழ்க்கை வாழ்ந்தனர். தனிமனிதர்கள் அறமுறைப்பட்ட வாழ்க்கை வாழ்வதற்குச் சான்றோர்கள் தெளிவான வழிகளைக் காட்டியிருக்கின்றனர். பக்குடுக்கை நன்கணியார், "உலக வாழ்க்கை இன்பமும் துன்பமும் நிறைந்தது என்றாலும் உலக வாழ்க்கையில் இன்பம் தேர்ந்து வாழ்வதே நல்வாழ்க்கை"[81] என்று குறிப்பிடுகிறார்.

பக்குடுக்கை நன்கணியாரின் இக்கருத்து ஒவ்வொருவரும் உலக வாழ்வை எதிர்கொள்ள வேண்டிய முறைமையினை எடுத்துக் கூறுகின்றது. மக்கள் தம் வாழ்க்கையில் நினைத்த எல்லாம் அவர்கள் நினைத்தவாறே நடந்து

விடுவது இல்லை. எவ்வாறேனும் மனித வாழ்க்கை இனியது. அதனை எவ்வாறு எதிர்கொள்வது என்பதை மனதால் கற்று, தூய்மையான மனத்துடன் அணுக வேண்டும் என்பதை அவர் எடுத்துக் காட்டுகின்றார்.

“சான்றோர்கள் தங்களுக்கென மட்டும் அறத்தைப் போற்றாமல் சமுதாயத்தில் எந்நிலையிலும் அறத்தைப் போற்றுபவர்களாக இருந்தனர். மன்னர்களையும் நன்னெறிப் படுத்துபவர்களாகச் சங்கப் புலவர்கள் திகழ்ந்தனர்”[82] என்பதைப் புறநானூறு தெளிவுபடுத்தியிருக்கின்றது.

உலக மக்கள் தனிமனித அறத்தை மனத்தூய்மையுடன் செய்ய வேண்டும். மனத்தூய்மையே எல்லா அறங்களுக்கும் தலைமையானதாகும். அறச்சிந்தனைகள், நல்ல மனிதர்களை உருவாக்கவும் நல்ல குடிமக்களாக வாழச் செய்யவும் தனிமனித அறத்தில் மனம் சார்ந்த அறம் உறுதுணை புரிகிறது. நாடாளும் மன்னனாயினும், நாட்டில் வாழ்கின்ற குடிமக்களாயினும் நேரிய வழியில் மனத்தூய்மையைக் கடைப்பிடித்து வாழ்தல் தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் நலம் தருவதாக அமையும்.

### 2.5.1. *நன்றி மறவாப் பண்பு*

நன்றி என்னும் உணர்வு மனித குலத்தை உயர்த்துவதாகும். ஒருவருக்கொருவர் சரியான காலத்தில் செய்கின்ற நன்றியுடைய செயல்கள். மனிதனை அறவழியில் நடத்துவதற்கான கருவியாகும். ஒருவர் செய்த நன்றியை மறத்தல் என்பது பண்டை நாளில் பாவச் செயல்களுள் ஒன்றாகக் கருதப்பட்டது.

வே. முத்துலக்குமி, “சங்க இலக்கியத்தில் செய்ந்நன்றியறிதல் சிறந்த அறநெறியாகக் கூறப்பட்டுள்ளது. ஒருவர் செய்த நன்மையை மறவாதிருத்தல் செய்ந்நன்றியறிதலின் பாற்படும். ஒருவர்க்கொருவர் உதவி செய்து வாழ்தலும், ஒருவர் செய்த நன்மையை மறவாதிருத்தலும் சிறந்தவையாகக் கருதப்பெற்றன.

ஆன்முலையறுத்தல், கரு சிதைத்தல், பார்ப்பனருக்குக் கொடுமை செய்தல் ஆகியவை அறமற்ற செயல்களாக எண்ணப்பட்டன''[83] என்று அறம் போற்றப்பட்ட தன்மையினை எடுத்துக் கூறுகிறார். புறநானூறு என்ற நூலிலும்,

***"நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்***
***செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென***
***அறம்பா டிற்றே''[84]***

என்னும் அடிகளால் நன்றி கொன்றவர்களுக்கு உய்வில்லை என்பதைப் பதிவு செய்திருக்கிறது. பண்டைக் காலத்தில் வாழ்ந்த மக்கள் நன்றி மறவாப் பண்புடையவர்களாக இருந்தனர். தங்களுக்குச் சரியான காலத்தில் ஒருவர் செய்த உதவியை மறக்காமல் மனத்தில் கொண்டு, அதனைக் காலந்தோறும் மனத்தில் வைத்துப் போற்றும் பண்புடையவர்களாக இருந்தனர். நன்றி மறத்தலைத் தீமை என்று கருதினர். நன்றி மறக்கும் காரணத்தால் துன்பம் விளையும் என்பதை,

***"ஒற்கத்துள் உதவியார்க் குதவாதான் மற்றவன்***
***எச்சத்துள் ஆயினும்; தெறியாது விடாதேகான்''[85]***

என்னும் அடிகளில் கலித்தொகை குறிப்பிட்டிருக்கின்றது.

ஒருவர் தனக்குத் தக்க காலத்தில் உதவி செய்தால், அவ்வுதவியை அவருக்குத் திரும்பச் செய்யச் சரியான காலத்தை, உதவி பெற்றவர் எதிர்நோக்கி இருப்பர் என்பதைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

***"முன்னொன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்***
***பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்''[86]***

என்றவாறு சங்கஇலக்கியக் காலப்பகுதியைச் சார்ந்த மக்கள் அறம் செய்வதிலும் நன்றி மறவாமப் பண்பினால் சிறப்பான குணத்தை வெளிப்படுத்துபவர்களாக இருந்தனர்.

“நன்றி என்பது நன்மை செய்தலின் பாற்படும். ஒருவர் செய்த நன்மைக்கு ஈடாக மீண்டும் நன்மை செய்ய வேண்டும் என்பது மட்டும் இதன் கருத்தன்று. தகுந்த காலத்தில், பயன் கருதாது, செய்யாத ஒருவர்க்கு நன்மை செய்ய வேண்டும். சமுதாயத்தில் ஒருவர்க்குத் துன்பம் வரும்போது அத்துன்பத்தை நீக்கி நன்மை செய்ய வேண்டுவது ஒவ்வொருவரின் கடமையாகும். இதுவே மக்கட் பண்பு. நன்மை செய்யாத ஒருவர்க்கே நன்மை செய்ய வேண்டுவது கடமையெனில் ஒருவர் செய்த நன்மையை மறவாது போற்றுதலும் சிறப்பான ஒன்றே. செய்ந்நன்றியறிதல் என்பது இதுவேயாகும்”[87] என்று வே. முத்துலக்குமி என்பவர் செய்ந்நன்றியறிதலுக்குத் தக்க விளக்கம் தருகிறார்.

காலத்தால் ஒருவர்க்கு உதவி செய்வதும் அந்த உதவியைப் பெற்றவர் மகிழ்ந்து ஏற்று, அவ்வாறு உதவியவரை மனத்தில் நினைத்துக் காலம் முழுதும் போற்றுவதும், வாய்ப்பு ஏற்பட்ட காலத்துத் தாமதிக்காமல் திரும்ப உதவுதலும் போன்ற குணங்கள் தனிமனித மனத்துக்கு இன்றியமையாதது வேண்டப்படும் நல்ல குணங்களாகும்.

## 2.6. தனிமனித மனத்தூய்மையை போற்றுதற்குரியோர்

தனிமனித அறத்தில் மனத்தூய்மை இன்றியமையாது வேண்டப்படுவதாகும். தனிமனித அறம் உலக மக்கள் அனைவருக்குமான பொதுவாக மலரும் இயல்புடையது. அவ்வகையில் தனிமனித அறத்தில் மனத்தூய்மை கவனிக்கத்தக்கதாகிறது. மக்கள் அனைவரும் மனத்தளவில் தூய்மையைக் கடைப்பிடிக்க வேண்டியவர்கள் எனினும் குறிப்பாக, மக்களுக்கு அறம் உரைக்கத்தக்க தகுதி உடையவர்கள் பலரும் சமுதாயத்தில் இருக்கிறார்கள். அவர்களை இலக்காகக் கொண்டு, அவர்களின் ஒழுக்க முறைமையினைப் பின்பற்றி வாழ்பவர்களும் இருக்கவே செய்கிறார்கள்.

அவ்வகையில் அரசர், அந்தணர், வணிகர் ஆகியோர் தமக்கென தனிமனித வாழ்வில் ஒழுக்கத்தால் மனத்தூய்மையினைச் சிறப்பாகக் கடைப்பிடித்துப் பிறருக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்து காட்ட வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

நாடாளும் மன்னர்கள் தனக்குக்கீழ் வாழும் நாட்டு மக்களுக்கு நல்லறங்களைக் கற்றுக் கொடுக்க வேண்டும். தன் நாட்டில் தன் ஆளுகையின் கீழ் நற்குணம் மிக்க மக்கள் வாழும் பொருட்டு சிறந்த வாழ்வை அமைத்தல் வேண்டும். அத்தகையதொரு பொறுப்பு மன்னனுக்கு இருக்கிறது. அந்தணர்கள் தங்கள் ஒழுக்க நெறியில் நின்று நாடும் மன்னனின் ஆட்சியும் நலம்பெற யாகம் பல செய்பவர்களாக இருக்கிறார்கள். அவர்களின் தூய மனத்தால் கடைப்பிடிக்கப்படும் நெறி சமுதாயத்திற்கு நல்வழிகாட்டக் கூடியதாகும்.

“அந்தணர்கள் அறத்தன்மை பூண்டவர்களாகவும் இருபிறப்பு உடையவர்களாகவும் முக்திச் செல்வத்தை உடையவர்களாகவும் இருந்தனர்”[88] இதுகருதியே திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

“அந்தணர்கள் வேதத்தின் பொருளை அனைவரும் உணர்ந்து போற்றும் வண்ணம் எடுத்துக் கூறினர். வாழ்வியல் ஒழுகலாற்றை வாழ வேண்டிய முறைப்படி வாழ்ந்தனர். உயிர்களிடத்தில் அன்பும் அருளும் கொண்டவர்களாக, வீட்டு நெறிக்கு வழிகாட்டுவர்களாய் இருந்தனர்”[89] என்று அந்தணரின் அறக்கோட்பாடு குறித்து மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. அந்தணர்கள் யாகம் செய்வதை மட்டும் தங்கள் தொழிலாகக் கொண்டிருக்கவில்லை. மன்னனின் ஆட்சிக்கு அந்தணர்களின் செயல்பாடு மிக்க உதவிகரமாக அமைந்தது. கற்பித்தல், அரசரை நெறிப்படுத்தல், அறம் தழைக்கப் பாடுபடுதல் என்னும் நிலைகளில் அந்தணர்கள் தூய மனத்துடன் சமூகக் கடமையாற்றினர்.

வணிகர்கள் தங்கள் நெறியில் நின்றனர். மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைக் கொடுக்கும் பொறுப்பு வணிகர்களுக்குரியது. வணிகர்கள் தங்களின் தூய மனத்தால், தெளிந்த அறக்கோட்பாட்டில் செய்யும் தொழிலைத் திறமுடன் செய்து பொருளீட்டினார்கள். பட்டினப்பாலை வணிகர்கள் நடுவுநிலைமையுடன் வாணிகத் தொழில் புரிந்தமையைக் குறிப்பிடுகின்றது. பொருள் ஈட்டுவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டு செயல்படாமல் அறத்திற்குக் குறை ஏற்படாமல் தொழில் புரிந்து பொருள் ஈட்டி நல்வாழ்க்கை வாழ்ந்தனர்.

***"தமவும் பிறவு மொப்ப நாடிக்
கொள்வதூஉ மிகைகொளாது
கொடுப்பதூஉங் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்"[90]***

என்று பட்டினப்பாலை வணிகர்களின் அறமுறைப்பட்ட தெளிவான மனநிலையை எடுத்துக் காட்டுகிறது. மேலும், "காவிரிப்பூம்பட்டினத்து வணிகர்கள் கொலையைக் கண்டிப்பவர்களாகவும், கொலை செய்வதைத் தடுப்பவர்களாகவும் இருந்தனர். பசுக்களையும் காளைகளையும் போற்றிக் காத்தல், அந்தணர்களைக் காத்து அவர்களின் புகழைப் பரப்புதல், உணவிடல் முதலான அறச்செயல்களை மேற்கொண்டனர்"[91] என்று பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது.

ஆக, வணிகர்களின் நடுநிலையும் தூய்மையான மனமும், அவர்கள் அறவழி நிற்கும்போது காண்போர்க்கு ஓர் எடுத்துக்காட்டாய் அமைந்து, அறக்கோட்பாடு உடையவர்கள் பலரை, மேலும் உருவாக்குவதற்கு வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுப்பதாக அமைகிறது. திவாரக நிகண்டு,

***"தனிமையாதல் முனிவிலனாதல்
இடனறிந்தொழுகல், பொழுதொடு புணர்தல்
உறுவது செரித்தல், இறுவதஞ்சாமை***

*ஈட்டல் பகுத்தல் என்றிவையெட்டும்*

*வாட்டமில்லா வணிகதியற்குணம்"*[92]

என்று வாணிகர்களின் குணம் பற்றிக் குறிப்பிடுகிறது. மேற்கண்ட எட்டுக் குணங்களையும் அறக்கோட்பாட்டுடன் கடைப்பிடிக்கும் போதுதான் வணிகரின் அறம் முழுமை அடைகின்றது. வள்ளுவர், வாணிகர்கள், நடுநிலையுடன் கடமையாற்ற வேண்டும் என்பதை மனத்தில் கொண்டு,

*"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்*

*பிறவும் தமபோல் செயின்"*[93]

என்னும் குறள் வாயிலாக, வாணிகர்கள் நடுநிலையுடன் தொழில் புரிந்தால் தான் அறம் சிறக்கும் என்பதைத் எடுத்துக்காட்டித் தனிமனித அறம் தனிமனிதர்கள் மூலம் செழிக்கும் நிலையை எடுத்துக்காட்டுகிறார்.

### 2.6.1. நீதி கூறல்

நாடாளும் மன்னன், நாட்டில் நடைபெறும் அறமல்லாச் செயல்களை நடுநிலையான மனத்துடன் அணுகி சரியான நீதி வழங்குபவனாக இருக்க வேண்டும். மன்னன் தூயமனம் இல்லாதவனாய் இருந்து, தீயவர்களின் ஆலோசனையைக் கேட்டுக் கொண்டு தவறான நீதி வழங்கினால் நாடு புலி கிடந்த காட்டை விடக் கொடுமையானதாக இருக்கும். மன்னன் எவ்வாறு அறக்கோட்பாட்டிளனாக இருக்க வேண்டும், எவ்வாறு மனத்தூய்மையுடன் அறம் உரைக்கும் செயலை மேற்கொள்ள வேண்டும் என்பதனைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டியுள்ளன. பண்டை நாளில் வழக்கை விசாரித்தறிவதற்கு அறம் கூறும் அவயங்கள் இருந்தன. இதில் உள்ள சான்றோர்கள் அறநெறியைக் கடைப்பிடித்து நீதியின் வழியில் நின்று ஒவ்வொரு வழக்கையும் விசாரித்து சரியான நீதி வழங்குபவர்களாக இருந்தன. சான்றோர் என்பவர் எப்படி இருக்க வேண்டும் என்பதனை,

***"குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை"[94]***

என்னும் எட்டுக் குணங்களையும் தமதாகக் கொண்டிருக்க வேண்டும் என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. அறம் கூறும் அவையத்தில் இருந்தவர்கள் நடுவு நிலையுடன் இருந்து அறம் கூறிய தன்மையை மதுரைக்காஞ்சி மொழிகிறது.

அறம் கூறும் அவையத்தில் இருந்தவர்கள் கல்வி, கேள்வி, ஒழுக்கம் ஆகியவற்றில் சிறந்தவர்களாக விளங்கியதன் காரணமாக இயற்கையிலேயே தூய மனத்தை உடையவர்களாக அறமுறைப்படி நீதி வழங்குவதில் சிறந்திருந்தனர். தவறாக நீதி கூறினால் அறக்கடவுள் தன்னைத் தண்டிக்கும் என்னும் அச்சமும், தவறான தீர்ப்பு வழங்கப்பட்டு விடக்கூடாது என்னும் தெளிவான சிந்தனையும் பண்டைய மக்களிடம் இருந்ததன் காரணமாக, மன்னரும், அறம் கூறும் அவையத்தில் இருந்து குற்றத்தை விசாரணை செய்யும் திறம் வாய்ந்தவர்களும் தூய்மையான மனத்துடன் விளங்கினர் என்பது புலனாகின்றது.

## 2.7. தனிமனிதனின் மனத்தூய்மைக்கான நிலைக்களன்கள்

தனிமனிதன் அறத்தைக் கட்டிக்காக்கும் கடமையுடையவனாக இருக்கிறான். தனிமனிதனைச் சுற்றி நடைபெறும் செயல்கள் அவனுடைய வாழ்க்கைச் சூழலைப் பாதிக்கும் தன்மையன. தனிமனிதன் எந்நிலையிலும் அறத்தைக் காத்தல் என்பது அரிதானது. ஏனெனில் தனிமனிதன் தனிமைப்பட்ட சூழலில் குடும்பம் சாராமல் வாழ்கின்ற போது அவன் தவறுகள் செய்வதற்கு வாய்ப்புகள் ஏற்படுகிறது. அந்த வாய்ப்பினை அவன் அறத்திற்கு முக்கியம் கொடுத்து விலக்குவானாயின் அவன் அறத்தைக் கட்டிக் காக்கும் மாண்புடையவனாகின்றான். அத்தகைய குணமுடையவன் குடும்ப வாழ்க்கையைச் சார்ந்திருக்கின்ற சூழலில் குடும்பம் அவனால் நன்மை

பெறுகிறது. அவன் குடும்ப வாழ்வில் இருந்து செய்கின்ற அறங்கள் பின்பு சமுதாய அறங்களாக மலர்ந்து உலகளாவிய நிலையை அடைந்து பொது அறமாக மலரும் பேற்றைப் பெறுகின்றது.

க.த. திருநாவுக்கரசு என்பார், "அறம் என்பதை ஒரு முப்பட்டைக் கண்ணாடியாகக் கொண்டால் அதன் மூன்று பக்கங்களாக எண்ணம், சொல், செயல் விளங்குகின்றன. எண்ணம் அறத்தின் நிலையாற்றலாகும். சொல் இயக்க ஆற்றலாகும். செயல் இயங்கும் ஆற்றலாகும். இம்மூவகை ஆற்றலும் செயல்படும் போது அதுவே ஒழுக்கமாகின்றது. அவ்வொழுக்கமே அறமாகின்றது"[95] என்று அறம் குறித்து விளக்கம் தருவார்.

ஆக, அறம் நிலைபெற, தனிமனித ஒழுக்கம் நன்னிலை பெற எண்ணம், சொல், செயல் என்னும் மூன்றும் நேர்க்கோட்டில் செயல்பட வேண்டியது அவசியம். மனிதன், அறக்கோட்பாட்டாளனாக வாழ்வதற்கு இம்மூன்றன் செயல்பாடும் திருப்திகரமாக அமைய வேண்டும். அதனாலேயே பண்டைய இலக்கியங்கள் சமூகம் மேம்பட வேண்டும் என்ற நோக்கில் மீண்டும் மீண்டும் அறத்தை வலியுறுத்துகின்றன.

"பழைய நிலையில் இருக்கும் சமுதாயங்கள் நாகரிக சமுதாயங்களைவிட மரபொழுக்கத்துக்கு மிகுதியான இடமும் தனிமனித சிந்தனைக்குக் குறைந்த இடமும் கொடுக்கின்றன. இருந்தாலும் மிக வளர்ச்சியடைந்த சமூகங்களும் கூடப் பெரும்பாலும் மரபொழுக்க நிலையிலே தான் இருந்து வருகின்றன என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும். இத்தகைய சமூகத்தில் ஒரு சிலரே அறவழியைப் பற்றிச் சிந்திக்கின்றனர். அதுவும் குறிப்பிட்ட சிலவழியில்தான் சிந்திக்கின்றனர். மரபொழுக்க நிலையின் முக்கியமான போக்கு இதுதான்"[96] என்று அறத்தின் நிலைப்பேற்றுக்கு, மரபொழுக்கம் காரணமாவதை வில்லியம் லில்லி சுட்டிக்காட்டுவர்.

மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் நெருங்கிய உறவுண்டு. தனிமனிதனின் செயல், சமுதாயம் முழுவதையும் பாதிக்கும் அளவு வலிமை பெற்றது. அதனால் தனிமனிதன் தன்னளவில் முதலில் சிந்தனையைச் சீர்ப்படுத்திக் கொள்ள வேண்டும். அவ்வாறு சீர்படுத்திக் கொண்டால்தான் தனக்கும் பிறருக்கும் பயனுள்ள வகையில் அவனால் செயலாற்ற இயலும். தனிமனிதன் தன் சீரிய சிந்தனையால் அறமல்லாச் செயல்களை விடுத்து அறவழியிலான செயல்களை மேற்கொண்டு அறக்கோட்பாட்டாளனாகச் சமுதாயத்தில் வாழ்கின்றபோது, சமுதாயம் அவனை உதாரணமாகக் கொண்டு அறக்கோட்பாட்டைக் கடைப்பிடிக்க உறுதி கொள்கிறது. பண்டைய சங்க இலக்கியங்கள் மன்னன், அமைச்சன், அந்தணர், வணிகர், சாதாரண மக்கள் என அனைரும் தனிமனித வாழ்வியல் சூழலில் மனத்தூய்மையை எவ்வாறு கடைப்பிடிக்க வேண்டும் என்பதை வலியுறுத்திக் கூறியிருக்கின்றன. அவ்வறங்கள் எதிர்கால சமூகத்தில் திறம் வாய்ந்ததோர் மக்கள் சமுதாயத்தை நேரிய வழியில் உருவாக்கும் திறன் பெற்றவை என்பது கண்கூடு.

## 2.8. தொகுப்புரை

மனித மனம் நன்மைக்கும் தீமைக்கும் நிலைக்களனாக அமைந்து அதன்வழிச் செயல்களைத் தோற்றுவிக்கின்றது. தனிமனித மனத்தில் விளையும் சிந்தனைகள் வலிமையானவை என்பதால் முதலில் மனித மனத்தில் எழுகின்ற சிந்தனைகளைச் சீர்படுத்துவது அவசியமாகிறது. தனிமனிதன் தன் மனச்சாட்சியின்படி நடந்து அறத்தைக் காக்கும் உரிமை பூண்டவனாக வேண்டும். மனத்தூய்மையே சமுதாயத்தைக் கட்டிக்காக்கச் சிறந்தது என்பதால் மக்கள் அனைவரும் இதற்குப் பொறுப்புள்ளவர்களாகிறார்கள். சங்க இலக்கியங்களில் தலைவன் தலைவி ஆகியோர் அன்புடைய வாழ்க்கை வாழ்வதன் மூலமாகத் தனிமனித அறத்தில் மனத்தூய்மை வெளிப்படுகிறது.

அறம், பொருள், இன்பம் மூன்றும் ஒன்றை ஒன்று சார்ந்து நிற்கின்ற காரணத்தால் பண்டைத் தலைவனும் தலைவியும் அறவழியில் பொருள் கொண்டு இன்பமான வாழ்க்கை வாழ்ந்தமையை அறியமுடிகிறது. கற்பு ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான நிலையில் வைத்துக் கூறப்பட்டமை தனிமனித ஒழுக்கத்தில் அறம் மனித மனம் சார்ந்திருந்ததை அறிய முடிகிறது.

தூய்மையான நட்பு என்பது அறத்தன்மை வாய்ந்ததாக இருப்பதும் அதுவே நற்செயல்களின் பிறப்பிடமாக அமைவதும் எடுத்துக் காட்டப்படுகிறது. உண்மை – மனித மனத்தின் அடியாகப் பிறப்பது, தனிமனிதன் வாழ்வில் உண்மை பேசுவதை நோக்கமாகக் கொள்ள வேண்டும் என்பதை அறிய முடிகிறது. உலகம் நிலையாமையின் வழியது என்பதை உணர்ந்து வாழ்வில் அறத்தைத் தலையாயதாகக் கொள்ள வேண்டும். நற்குணம் நல்வாழ்க்கைக்கு நலம் பயக்கும் தன்மையோடு சமுதாய மேம்பாட்டுக்கும் உதவும் என்பது உணர்த்தப்படுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. கலைக்களஞ்சியம், தொகுதி – 1, தமிழ் வெளியீட்டுக்கழகம், ப.255.
2. வே. முத்துலக்குமி, பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள், ப.28.
3. வில்லியம் லில்லி, அறவியல் ஓர் அறிமுகம், ப.76.
4. கலைக்களஞ்சியம், தொகுதி – 1, ப.255.
5. வில்லியம் லில்லி, முற்குறித்த நூல், ப.76.

6. வே. முத்துலக்குமி, முற்குறித்த நூல், ப.32.

7. குறள். 34.

8. குறுந். 49.

9. நற். 397 : 7–9.

10. குறுந். 40.

11. குறுந். 323.

12. குறுந். 99.

13. நற். 129 : 4–6.

14. பட்டினப். 218–220.

15. நற். 110 : 10–11.

16. கலி. 18 : 10–11.

17. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.80.

18. தொல். பொருள். கற். இளம். 140.

19. மேலது, 141.

20. மேலது, 150.

21. வே. முத்துலக்குமி, மு.நூல், பக்.82–83.

22. கலி. 16 : 20–22.

23 நற். 201–872.

24. குறிஞ். 13–18.

25. அகம். 256 : 16–21.

26. அகம். 155 : 1–3.

27. குறுந். 283 : 1–2.

28. கலி. 11:1–4.

29. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.94.

30. இரா. அனுராதா, சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள், ப.50.

31. நற். 217.

32. நற். 84.

33. நற். 186.

34. குறுந். 143.

35. ஐங். 2.

36. கலி. 60.

37. அகம். 151.

38. நற். 355.

39. நற். 32.

40. பரி. 3.

41. இரா. அனுராதா, மு.நூல், ப.54.

42. கலி. 42.

43. புறம். 380.

44. குறள். 517.

45. நற். 284.

46. குறு. 135.

47. இரா. அனுராதா, மு.நூல், ப.61.

48. அகம். 173.

49. மேலது, 93.

50. புறம். 56.

51. புறம். 237.

52. பழ. 114.

53. நற். 10.

54. குறு. 184.

55. நற். 314.

56. கலி. 11.

57. நற். 46.

58. மேலது, 126.

59. கலி. 11.

60. மேலது, 16.

61. மேலது, 353.

62. புறம். 29.

63. மேலது, 76.

64. புறம். 24.

65. நற். 16.

66. மேலது. 126.

67. கலி. 7.

68. மேலது. 7.

69. நற். 233.

70. அகம். 112.

71. இரா. அனுராதா, மு.நூல், ப.112.

72. பரி. 12.

73. புறம். 211.

74. பெரும். 39–41.

75. அகம். 115.

76. புறம். 55.

77. புறம். 35.

78. மதுரை. 489–492.

79. புறம். 35.

80. புறம். 20 : 7–11.

81. நற். 146.

82. புறம். 194.

83. புறம். 145.

84. புறம். 34 : 1–3.

85. மேலது, 34 : 5–7.

86. கலி. 149 : 6–7.

87. கலி. 34 : 4–5.

88. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.176.

89. திருமுருகு. 180–182.

90. மதுரைக். 468–474.

91. பட்டினப். 209–211.

92. மேலது, 199–204.

93. குறள். 120.

94. தொல். பொருள். இளம். உரை. ப.121.

95. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.24.

96. வில்லியம் லில்லி, அறவியல் ஓர் அறிமுகம், ப.85

*****

# சொல் தூய்மையில் தனிமனித அறம்

## 3.0. முன்னுரை

"தீதும் நன்றும் பிறர்தர வாரா"[1] என்பார் கணியன் பூங்குன்றனார். "நன்மையும் தீமையும் சொல்லக்கூடிய சொல்லால் வருகின்றன என்பதால் சொல் அறம் பேணவேண்டும்"[2] என்கிறார் வள்ளுவர். தனிமனித ஒழுக்கம் ஒழுக்கங்களில் எல்லாம் தலையாயதாகும். தனிமனிதன் தன்னளவில் மனம், சொல், செயல் என்னும் நிலைகளில் தூய்மையைக் கடைப்பிடிக்கும்போது அறக்கோட்பாட்டாளனாகின்றான். ஆக, அடிப்படையில் ஒவ்வொருவரும் தம் வாழ்வில் சொல் தூய்மையைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியமாகிறது. சங்க இலக்கியங்களில் விரிவான நிலையில் தனிமனித அறத்தில் சொல் தூய்மை வலியுறுத்தப்பட்டிருக்கின்றது.

## 3.1. புலவர் சொல்

பண்டைய புலவர்கள் சொற்றிறம் மிக்கவர்களாயிருந்தனர். மன்னர்கள் நெறிபிறழ்ந்த காலத்து அவர்களை நல்வழி காட்டித் திருத்தும் பண்பினர்களாயிருந்தனர். வே. முத்துலக்குமி என்ற ஆய்வாளர், "பண்டைத் தமிழகத்தில் அரசர்களும் புலவர்களும் நெருங்கிய நண்பர்களாக வாழ்ந்தனர். அதியனின் அவைக்களப் புலவராக ஔவை விளங்கினார். பாரியின் உயிர் நண்பராகக் கபிலர் திகழ்ந்தார். கோப்பெருஞ்சோழனின் நண்பராகப் பிசிராந்தையார் விளங்கினார். புலவர் பெருமக்கள் அரசர்கள் புகழ் தரத்தக்க செயல்களைச் செய்தவிடத்துப் போற்றிப் பாராட்டினார். அரசர்களிடம் குறை கண்ட காலை அஞ்சாது எடுத்துரைத்து அவர்களை அறநெறிப்படுத்தும் பண்பும்

புலவர்பால் இருந்தது''[3] என்று பண்டைக் காலத்தில் இருந்த அரசர்களுக்கும் புலவர்களுக்கும் இடையேயுள்ள உறவு நிலையினைத் தெளிவுபடுத்துகின்றார்.

புலவர் தங்களின் சீரிய சொற்றிறத்தால் மன்னர்களுக்குச் சிறந்த அறிவுரை கூறிய காரணத்தினால் அவர்கள் புலனேருழவர் எனப்பட்டனர். புலவர்கள் தங்கள் வறுமை நிலையைக்காட்டியும், புலமைத்திறத்தை நிலைநாட்டிப் பரிசில் பெறுவதை மட்டுமே நோக்கமாகக் கொள்ளாமல் மன்னன் மக்களுக்கு நல்லாட்சி வழங்க வேண்டும் என்பதில் உறுதி உடையோராய் இருந்தனர்.

''அஞ்சாமையும் அறநெறியும் அன்றைய புலவரின் வழிகாட்டியாகத் திகழ்ந்தன. மன்னரின் ஆதரவில் வாழ்ந்தாலும் கூடத் தவறு என்று பட்டதைத் தெளிவாகச் சொல்லும் ஆற்றல் புலவர்களுக்கு இருந்தது''[4] என்று தி.அ. சொக்கலிங்கம் குறிப்பிடுகின்றார். தமிழண்ணல், ''அரசனின் அறநெறி தவறா ஆட்சியும் மக்களின் குற்றமள்ள இன்பமும், நாட்டின் இடையறா நலமுமே அவர்களின் பரிசில் வாழ்க்கைக் குறிக்கோள்களாகும். அரசர்களின் அமைச்சர்கள் போலச் சமயமறிந்து, அவர்கட்கு இன்மொழியாலும் வன்மொழியாலும் அறிவுரை கூறியிருக்கிறார்கள்''[5] என்று புலவர்கள் அரசர்களை நன்னெறிப்படுத்திய திறத்தைக் கூறியிருக்கின்றார்.

நாடாளும் மன்னன் குடிமக்களிடம் அன்பும் அருட்குணமும் கொண்டவனாக இருக்க வேண்டும். சுருங்கச் சொன்னால் தாய் தன் குழந்தையைக் காப்பது போல் மன்னன் நாட்டைக் காக்க வேண்டும் என்று சேரமன்னனுக்கு நரிவெரூஉத்தலையார் என்னும் புலவர் அறிவுரை பகர்கிறார்.

***''அருளும் அன்பும் நீக்கி நீங்கா***
***நிரயம் கொள்பவரோடு ஒன்றாது காவல்***
***குழவி கொள்பவரின் ஓம்புமதி''[6]***

மன்னன் சிறப்பாக நாட்டைக் காத்தால் மட்டும் போதாது. தன்னை நாடி வருபவர்களுக்குக் காட்சிக்கு எளியவனாகவும் கடுஞ்சொல் இல்லாதவனாகவும் இருப்பது முக்கியம். ஆவூர் மூலங்கிழார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியபோது "இன்சொல் எண்பதத்தை ஆகுமதி பெரும"[7] என்னும் புறப்பாடலடியில் இனிய சொல்லுடன் எல்லார்க்கும் காட்சிக்கு எளியனாயும் இருக்க வேண்டும் என்று வற்புறுத்துகின்றார்.

தன்னை நாடி வந்தவர்களின் வறுமையையும் துன்பத்தையும் போக்குதல் நாடாளும் மன்னனுக்குரிய தலையாய கடமையாகும். உலகம் நிலையாமை உடையது. உலகப்பொருள்களும் நிலையாமை உடையன. எனவே வாழ்கின்ற காலத்தில் அனைவருக்கும் நலம்பயக்கும் நல்வாழ்க்கை வாழ வேண்டும் என்று புலவர்கள் தம் படைப்பால் சிறந்த சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளனர்.

***"தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்***
***மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்***
***அறியா தோரையும் அறியக் காட்டித்***
***திங்கள் புத்தேள் திரிதரூஉம் உலகத்து***
***வல்லா ராயினும் வல்லுந ராயினும்***
***வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி***
***அருள வல்லை ஆகுமதி"[8]***

என்னும் அடிகளில் முதுகண்ணன் சாத்தனார் சோழ மன்னன் நலங்கிள்ளிக்கு அறம் உணர்த்துகின்றபோது, வானில் வலம் வரும் நிலவு தேய்வதும் வளர்வதும் அழிவதும் மீண்டும் பிறப்பு எடுப்பதுமாக நிலையாமை குறித்த உண்மையை உலகிற்குக் காட்டிக் கொண்டிருக்கிறது. அதனால் நிலையாமையே நிலை என்பதை மனத்தால் உணர்ந்து வாழ்வில் துன்புற்றுத் தன்னிடம் வந்தவர்களை அத்துன்பம் நீங்குமாறு காத்தருள வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். இங்கு வந்தவர்களின் துன்பத்தைப் பொருள் மட்டும் கொண்டு தீர்க்க விழையாமல்

அருளையும் காட்ட வேண்டும் என்று இரக்கமாகிய மனிதப் பண்புக்கு முக்கியத்துவம் கொடுத்தது நோக்கத்தக்கது.

உலகில் வாழ்கின்ற மக்கள் தாம் வாழ்கின்ற காலத்திலேயே நலம் தரும் செயல்களை மேற்கொள்ள வேண்டும். உலகில் எத்தனை மன்னர்கள் இருந்தபோதும் அவர்கள் அனைவரும் புகழ் பெறுவது இல்லை. செயற்கரிய செயல் செய்து மக்கள் மனத்தில் இடம் கொண்டவர்களே நிலைத்து வாழ்கின்றனர். அதனால் இறப்பில்லா அறங்களை மேற்கொள்ள வேண்டும் என்று முதுகண்ணன் சாத்தனார் குறிப்பிடுகின்றார்.

***"சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்***
***நூற்றிதழ் அலரி நிறைகண் டன்ன***
***வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து***
***வீற்றிருந் தோரை எண்ணுங் காலை***
***உரையும் பாட்டும் உடையோர் சிலரே***
***மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே***
***புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்***
***வலவன் ஏவா வான ஊர்தி***
***எய்துப என்பதம் செய்வினை முறத்தெனக்***
***கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி"***[9]

நாடாளும் மன்னன் நல்லவனாகவும் நற்குணங்களின் இருப்பிடமாகவும் இருத்தல் வேண்டும். மன்னன் நற்சான்றோர்களின் நற்கருத்துகளை மனத்தில் கொள்ள வேண்டும். "தக்க காலத்தில் அறிவுரை கூறித்திருத்தும் சான்றோர்கள் அருகில் இல்லாமல் மனம் போன போக்கில் நடக்கின்ற மன்னன் கெடுப்பவர் எவரும் இன்றித் தானே கெட்டழிவான்"[10] என்று வள்ளுவர் குறிப்பிடுவார். மன்னன் தானே கெட்டழிவது ஒருபுறம் இருக்க, நற்குணம் இல்லாத தீயவர்களின் நட்பும் மன்னனுக்குக் கேடாக முடியும்.

*“பாண்முற் றுகநின் நாள்மகிழ் இருக்கை*
*பாண்முற்று ஒழிந்த பின்றை மகளிர்*
*தோள்முற் றுகநின் சாந்துபுலர் அகலம்ஆங்க*
*முனிவின் முற்றத்து இனிதுமுரசு இயம்பிக்*
*கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க் களித்தலும்*
*ஒடியா முறையின் மடிவிலை யாகி*
*நல்லதன் நலனும் தீயதன் தீமையும்*
*இல்லை என்போர்க்கு இனனா கிலியர்”[11]*

என்று உறையூர் முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளியின் சிறப்பைக் கூறுகின்றபோது, சிறந்த சொற்களால் மன்னன் எத்தகையோரைப் புறம் தள்ள வேண்டும், யாராருடைய தொடர்பை மன்னன் நீக்க வேண்டும் என்பதைக் குறிப்பிடுகின்றார். சிற்றினத்தாருடன் சேரலாகாது என்பதைப் புலவர் வலிமையாக வலியுறுத்திக் கூறியிருக்கின்றார்.

“நாடாளும் மன்னனின் செல்வ வளம் அவனுக்கு மட்டும் உரியதல்ல. அச்செல்வம் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று உறுதிப்பொருள்களையும் விளைவிக்கும் திறன் வாய்ந்ததாகும். பிறருக்குப் பொருள்களை ஈவதனால் மேற்கூறிய இன்பங்கள் கிடைக்கப்பெறும். அவ்வாறாகப் பொருள்களைக் கொடுத்து உதவவில்லையேல் பெருஞ்செல்வத்தை உடையவர்கள் பல்வேறு பிறவிகளை எடுத்துத் துன்புற நேரிடும்”[12] என்று உறையூர் முதுகண்ணன் சாத்தனார் குறிப்பிடுகின்றார்.

*“களிறு முகந்து பெயர்குவம் எனினே*
*ஒளிறு மழை தவிர்க்கும் குன்றம் போலக்*
*கைம்மா எல்லாம் கணையிடத் தொலைந்தன*
*கொடுஞ்சி நெடுந்தேர் முகக்குவம் எனினே*
*கடும்பரி நன்மான் வாங்குவயின் ஒல்கி*
*நெடும்பீடு அழிந்து நிலம்சேர்ந் தனவே*

*கொய்சுவல் புரவி முகக்குவம் எனினே*
*மெய்ந்நிறை வடுவொடு பெரும்பிறி தாகி*
*வளிவழக் கறுத்த வங்கம் போலக்*
*குருதியம் பெரும்புனல் கூர்ந்தொழிந் தனவே;ஆங்க*
*முகவை இன்மையின் உகவை இன்றி*
*இரப்போர் இரங்கும் இன்னா வியன்களத்து*
*ஆள்அழிப் படுத்த வாளேர் உழவ*
*கடாஅ யானைக் கால்வழி யன்னவென்''*[13]

இப்பாடலடிகளில் ஔவையார், மூவேந்தர்களும் ஒருங்கிருந்த நிலையில் உலகினை வேந்தர்கள் ஆள்கின்றார்கள். உலகில் எதுவும் நிலையானதல்ல. மன்னர்கள் இறந்த நிலையில் அவர்களுடன் எதுவும் செல்வதில்லை. வலிமை உடையவர்களிடம் செல்வமும் நாடும் சென்று சேர்கிறது. அதனால் அரசு முறையை முறைப்படி நன்றாக நடத்தி, இல்லாதவர்களுக்கு உதவி செய்து நல்லனவற்றைச் செய்தல் வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.

மன்னன், தான் என்ன செய்கின்றோம் என்று அறியாமல் தவறு செய்கின்றபோது தம்முடைய சீரிய சொற்களால் அவர்களை நன்னெறிப்படுத்திய பாங்கினை அறியமுடிகிறது. பாண்டியன் அறிவுடைநம்பி முறையின்றி வரிவாங்கிய காலத்து,

*"காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே*
*மாநிறைவு இல்லதும் பன்னாட் காகும்*
*நூறுசெறு வாயினும் தமித்துப்புங் குணினே*
*வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்*
*அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே*
*கோடி யாத்து நாடுபெரிது நந்தும்*
*மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்*
*வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு*
*பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்*

*யானை புக்க புலம்போலத்*
*தானும் உண்ணான் உலகமும் கெடுமே"[14]*

என்னும் பாடலில் பிசிராந்தையார் முறையறிந்து வரிவாங்கினால் நாடு நன்றாக இருக்கும். மக்களின் நிலையறியாமல் வரி வாங்கினால் நாடும் கெட்டழியும். நீயும் அழிவாய் என்று கூறுவது புலவரின் நுண்மான் நுழைபுலத்தையும் சொல்ல வேண்டிய செய்தியை சொல்ல வேண்டிய காலத்துச் சிரத்தையுடன் அறிவுரை கூறும் மனத்திட்பத்தையும் அறிய முடிகிறது.

### 3.1.1. *வாய்மை*

'வாய்மை' என்பதற்கு, "அஃதாவது மெய்யினது தன்மை. பெரும்பான்மையும் காமமும் பொருளும் பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்குவது"[15] என்பர். வள்ளுவர் வாய்மை என்பதற்கு, "மற்றவர்களுக்குச் சிறிதும் தீமை பயக்காத சொற்களைக் கூறுதல்"[16] என்று குறிப்பிடுகின்றார். "எவன் ஒருவன் பொய்யாமை என்னும் கொள்கையினைக் கடைப்பிடிக்கின்றானோ அவன் உலகில் உள்ள உயர்ந்தோர்களின் மனத்தில் எல்லாம் நிலைபெற்று விளங்குவான்"[17] என்று மேலும் குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியத்தில் வாய்மையின் முக்கியத்துவத்தைப் புலவர்கள் வலியுறுத்தியிருக்கின்றனர். மனம் பிறப்பிடமாக இருக்க, வாயில் இருந்து பிறக்கின்ற சொற்கள் மெய்ம்மை உடையனவாக இருக்க வேண்டும் என்பதைப் பாடல்களின் வாயிலாகப் புலவர்கள் நுட்பமாக உணர்த்தியிருக்கின்றனர். நாடாளும் மன்னவனுக்கு வாய்மை முக்கியம்.

*"நகையினும் பொய்யா வாய்மைப் பகைவர்*
*புறஞ்சொற் கேளாப் புரைதீ ரொண்மை"[18]*

என்னும் அடிகளில் கபிலர், விளையாட்டில் கூட வாய்மையைக் காக்கின்ற பண்பும் பகைவர்கள் புறத்தில் கூறும் சொற்களை ஏற்றுக்கொள்ளாத குற்றமில்லாத

அறிவு நலமும் சான்றவனாக செல்வக் கடுங்கோ வாழியாதன் இருந்தான் என்று அவனுடைய சொல் தூய்மையைக் குறிப்பிடுகின்றார். "நாடாளும் மன்னன் எந்நிலையினும் வாய்மை தவறாதவனாக இருக்க வேண்டும்"[19] என்பது அரசியல் அறமாகக் கருதப்படுகிறது. "நிலம் பெயர்ந்தாலும் சொன்ன சொல் மாறக்கூடாது"[20] என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

### 3.1.2. வஞ்சினத்தில் சொல்லறம் பேணல்

பண்டைக் காலத்தில் மன்னர்கள் வஞ்சினம் கூறிய நிலையினும் சொல் தூய்மையைக் கடைப்பிடித்தமையை அறிய முடிகிறது. மன்னர்கள் தாங்கள் எடுத்த முடிவைச் செயல்படுத்துவதற்கும் உள்ள உறுதி குறையாமல் இருப்பதற்கும் வஞ்சினச் சொற்கள் பயன்பட்டன. வஞ்சினச் சொற்களைக் கூறியவர்களின் நிலையில் இருந்து நோக்குகின்றபோது அவை அறத்தின் வழிப்பட்டதாக இருப்பதனை அறியமுடிகிறது. வஞ்சினம் நெடுமொழி, ஒன்று மொழி, நீள்மொழி, கடிய கூறல், நெடிய கூறல் எனப் பலவாறாக அழைக்கப்படுகின்றது.

"பண்டை நாளில் வீரர்கள் தாங்கள் கூறிய வஞ்சினச் சொல் பொய்த்துப் போகக் கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருந்தனர்."[21] மேலும், "சொல்கின்ற வஞ்சினம் அறவழிப்பட்டதாக இருக்க வேண்டும் என்பதையும் கவனத்தில் கொண்டனர்."[22]

நாட்டு மக்களுக்கு நலம்தரும் வகையில் நடைபெறும் நல்லாட்சிக்குச் சான்றாகவே மன்னன் எடுக்கும் நடவடிக்கைகள் அமைகின்றன. பாண்டியன் நெடுஞ்செழியன், "குடிபழி தூற்றும் கொடுங்கோல் தன்மையும், புலவர்கள் பாடும் புகழைப் பெறாமல் இருப்பதும், இரந்து வந்தவர்களுக்குக் கொடுத்து உதவாமல் இருப்பதும், நாடாளும் மன்னனுக்கு இழிவைத் தருவனவாகும். நான் போரில் வெற்றி பெறாமல் போனால் மேற்கூறிய

நிலையினை அடைவேனாக''[23] என்று கூறுவது இங்கு நோக்கத்தக்கது. இதனால் மன்னர்கள் நன்மை விளையும் பொருட்டே வஞ்சினம் கூறினர் என்பது தெளிவாகிறது.

''வஞ்சினங்களில் மன்னனின் செங்கோல் சிறப்பு, குடியோம்பல், பெரியோரைப் போற்றல், ஈகை, கற்பு முதலிய அறங்கள் வலியுறுத்தப்படுகின்றன.''[24] என்று அறிஞர் குறிப்பிடுவர். நல்லனவற்றைக் கூறும்போது சொல் சோர்வு படாமல் காத்துக் கொள்ளுதல் வஞ்சினம் கூறும்போதும் அறக்கோட்பாடு தவறாமல் நல்லனவற்றை உணர்த்தல் என மன்னர்களின் மனநிலையினைத் தனதாக உள்வாங்கிக் கொண்ட புலவர்கள் அவற்றைப் பாடல்களில் வெளிப்படுத்தும்போது நுட்பமான நிலையில் சொல் சோர்வு படாமல் வஞ்சினச் சிந்தனைகளை முன் வைத்திருக்கின்றனர்.

## 3.2. புலவர் கூறும் அறம்

அறம் என்பதை புலவர்களின் நிலையில் இருந்து நீதி என்னும் பொருள் கொள்ளலாம். பண்டைக் காலத்தில் நாடாளும் மன்னனே நாட்டில் குற்றம் நடைபெறும்போது நீதி வழங்க வேண்டியவனாக இருந்தான். குற்றத்தின் தன்மையை ஆராய்வது, குற்றத்தில் தொடர்புடையவர்களைத் தீர விசாரித்து அறிவது முதலானவற்றைப் பன்முறை ஆராய்ந்து கோல் கோடாமல் நீதி வழங்க வேண்டியவனாக மன்னன் இருக்கின்றான்.

''செங்கோன்மை மன்னனின் நீதித்தன்மையைக் கூறும் சொல்லாகும். முறையறிந்து நீதி வழங்கலும், முறையறிந்து அறம் செய்தலும், நாட்டைக் காத்தலும், மக்களைப் பேணுதலும் அரசனின் தலையாய அறங்களாகும். மன்னன் நடுவுநிலைமை மாறாமல் இருக்கின்றபோதுதான் நாடு சிறக்கும். தவறாக நீதி வழங்குகின்றபோது அரசனின் அறமே கூற்றாக நின்று அழிவை உண்டாக்கும் இயல்புடையது. அரசன் அதிகாரத்தைச் சுமந்திருக்கும்போது வேலைப்பாட்டோடு

செய்யப்பட்ட கோலைக் கையில் கொண்டிருப்பான். அதுவே செங்கோலாகும். அரசனின் ஆட்சி நேர்மையானது என்பதற்கு அது சான்றாகும்''[25] என்கிறார் இரா. அனுராதா.

"நாட்டை ஆள்கின்ற மன்னனே முழுக்க முழுக்க நீதிக்குப் பொறுப்பேற்க வேண்டிய காரணத்தினால் வழக்கைத் தக்கவாறு ஆராய்ந்து நீதி வழங்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றான்.''[26]

***"அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து***
***முறைவேண்டு பொழுதின் பதன் எளியோர்''[27]***

நல்ல பொன் என்று மாற்றுப் பார்ப்பதற்குக் கட்டளைக்கல் பயன்படுவதுபோல மன்னவனும் நல்ல மனம் கொண்டவனாக இருத்தல் வேண்டும். நாட்டில் தீமையான செயல்கள் நடைபெறுகின்றபோது அதனைத் தடுப்பதும், நீதி வழங்குவதும் மன்னனின் கடமை என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

***"அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்***
***பல்வேல் திரையன்''[28]***

குற்றங்கள் நிகழ்ந்த முறைமையினைக் கேட்டறிந்து நீதி வழங்கும் நிகழ்வு நீதி வழங்கும் மன்னனின் அவையில் நிகழ்த்தப்படும். அறம் கூறு அவையம் அதிகமான உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காமல் நடுவுநிலை நிலவும் இடமாக இது விளங்கியது.

***"அச்சமும் அவலமும் ஆர்வமு நீக்கிச்***
***செற்றமும் உவகையுஞ் செய்யாது காத்து***
***ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்***
***சிறந்த கொள்கை அறம்கூ றவையமும்''[29]***

அறம் கூறு அவையத்தில் அமர்ந்து நீதி கூறுபவர்கள் உறவினர், நண்பர், வேண்டியவர், வேண்டாதவர் என்னும் மனநிலை இல்லாமல் நடுவு நிலையுடன்

இருந்து நீதி வழங்குதல் வேண்டும். "அறம்கூறு அவையத்தில் மன்னன் எளியனாய் வீற்றிருந்து நீதி வழங்குதல் வேண்டும்"[30] என்கிறது புறநானூறு.

நாடாளும் மன்னன் நீதி தவறினால் நாட்டில் அல்லன நடைபெறும் என்பதைப் புலவர்கள் தம் சொல் தூய்மையினால் காலம்தோறும் மன்னர்க்கு உணர்த்துவதைத் தம் தலையாய நோக்கமாகக் கொண்டிருந்தனர். எந்த அளவு மன்னனின் நடுவுநிலை சிறந்திருக்கின்றதோ அந்த அளவு நாடும் சிறந்து விளங்கும்.

***"சோறு படுக்குந் தீயோடு***
***செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது***
***பிறிது தெறல் அறியார் நின் நிழல்வாழ்வோரே***
***திருவில் அல்லது கொலைவில் அறியார்***
***நாஞ்சில் அல்லது படையும் அறியார்"***[31]

"மன்னனின் செங்கோல் திறம் பிறழாமல் ஆட்சி நடத்தினால் நாட்டில் நீதி நிலைபெற்று விளங்கும். நல்ல மழைப்பொழிவு ஏற்படும். கோள்கள் நல்ல நிலையில் இயங்கும். மக்கள் நலமுடன் வாழ்வார்கள் என்னும் நம்பிக்கை நிலவி வந்தது."[32] "நாட்டில் மழை வளம் குறைந்தாலும், வளம் குன்றினாலும் இயற்கைப் பிறழ்வான நிகழ்ச்சிகள் நடந்தாலும் உலகம் மன்னனையே குறை கூறும் என்பதனால் மன்னன் நடுவுநிலை திரியாது இருக்க வேண்டும்."[33] "மன்னன் எத்தகைய படை வலிமையைக் கொண்டவனாக இருந்தபோதும் நீதி இன்றேல் நாடு சிறக்காது."[34]

மன்னனின் செங்கோல் நாட்டை நன்கு வழிநடத்திச் செல்லும் இயல்புடையது. "கோல் என்பது அரசன் அதிகார முறையில் வீற்றிருக்கும் போதும் செல்லும் போதும் கையில் பிடித்திருக்கும் தண்டு. அது மணியிழைத்து ஓவிய வேலைப்பாடமைந்த பொற்றகட்டால் பொதியப் பெற்றிருப்பது. கோல் ஆட்சிக்குரிய குறியாதலால் அரசனுடைய ஆட்சி நேர்மையானதாக இருக்க

வேண்டுமென்பதைக் குறித்தற்கு அது நேரானதாகச் செய்யப்பட்டிருக்கும். அதனால் அதற்குச் செங்கோல் என்று பெயர். செம்மை, நேர்மை, கொடுமையான ஆட்சி, கொடுங்கோல் என்னும் பெயரால் குறிக்கப்படும். கொடுமை, வளைவு, ஆட்சியின் நேர்மையாவது அறநெறிவழி நேரே செல்லுதல்''[35] என்று தேவநேயன், செங்கோல் என்பதற்கு விளக்கம் தருகின்றார்.

புலவர்கள் மன்னர்களைக் கண்டு தம்முடைய கவித்திறனைக் காட்டிப் பொருள் பெற்று வாழ்வதை மட்டும் நோக்கமாகக் கொண்டிராமல் நாடு நலம் பெற வேண்டுமாயின் அறம் எவ்வாறு இருக்க வேண்டும்? நீதிமுறை எவ்வாறு விளங்க வேண்டும்? என்பதைத் தம் சொற்றிறத்தால் விளக்கியிருக்கின்றனர்.

## 3.3. மன்னர்கட்குப் புலவர் உரைத்த போர் நெறி

பண்டைய மன்னர்களின் வீரத்தையும் ஆளுமைத் திறத்தையும் அறியப் போர் தக்க சான்றுகளாய் விளங்குகிறது. பரந்த போர்க்களங்களில் போர் நடைபெற்றபோது அஞ்சாத மனத்தையும் நடுநிலையான குணத்தையும் கொண்ட புலவர்கள் போர்க்களங்களை நாடிச் சென்று அறங்களை உணர்த்தினர். போரின் கொடிய விளைவுகளைத் தடுப்பதிலும், போரை நிறுத்துவதிலும் இவர்களின் பணி குறிப்பிடத்தக்கதாக இருந்தது. சுருங்கக் கூறினால் புலவர்களின் சொல், மாற்றம் விளைவிக்கத்தக்கதாய் அமைந்தது. அறநெறியில் போர் புரிந்தவர்களைப் போற்றும் திறன் உடையவர்களாய்ப் புலவர்கள் திகழ்ந்தனர்.

மன்னர்கள் தங்களின் உறவினர்களிடம் சண்டையிட்டுக் கொள்ளும் நிகழ்வுகள் முன்னாளில் நடந்தேறின. சோழர் குடியில் பிறந்த இரண்டு மன்னர்கள் ஒருவரோடு ஒருவர் சண்டையிட முயன்ற நிலையில் அங்கு சென்ற கோவூர்கிழார் என்னும் புலவரின் பணி குறிப்பிடத்தக்கதாக இருந்தது. இருவரும் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை நுட்பமாக உணர்த்தி அவர்களின்

பகையைத் தடுக்கின்றார். "நீங்கள் இருவரும் ஆத்திமாலை சூடியவர்கள். உன்னுடன் போர் புரிபவன் வேற்று மன்னவன் இல்லை. அவனும் சோழனே. உங்களின் இச்செயல் மற்ற மன்னர்களிடம் அதிகமான இகழ்ச்சியை உண்டாக்கிவிடும்"[36] என்று கூறிப் பகை விலக்குவது புலவரின் நுட்பமான அறிவுக்குச் சான்றாகிறது.

ஆவூரின் உரிமை காரணமாக சோழ மன்னன் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையே பகை உணர்வு தோன்றியது. நலங்கிள்ளி நெடுங்கிள்ளியின் கோட்டையை முற்றுகை இட்டான். ஆனால் நெடுங்கிள்ளி போரை எதிர்கொள்ளாமல் அமைதியாக இருந்தான். அதனால் மக்கள் துன்புற்றனர். அத்னை அறிந்த கோவூர்க்கிழார், "நீ அறவுணர்வு கொண்டவனாக இருப்பின் இந்நாடு உனக்கு உரியது. வந்த போரை எதிர்கொண்டு மக்களைக் காப்பதே நின் அறம்"[37] என்பதைத் தன் வலிமைமிக்க சொல்லால் வலியுறுத்தினார்.

கோப்பொருஞ்சோழனுடன் அவன் மக்கள் அரசுரிமை காரணமாகப் போர் தொடுக்க முனைந்தனர். அவர்களுடன் போர்க்கெழுந்த கோப்பெருஞ்சோழனின் செயலைப் புல்லாற்றூர் எயிற்றியனார் என்னும் புலவர் கண்டிக்கிறார். "உனக்குப் பின் உன் செல்வம் இளைஞர்களுக்கன்றோ! அவருடன் போர்க்கு எழுந்தால் உனக்குப் பழியே மிஞ்சும்" என்று கூறிப் போரைத் தடுக்கிறார். தந்தையும் மக்களும் பொருவது முறையன்று என்பதை இவருடைய அறிவுரை விளக்குகின்றது. "பாணர் தாமரை மலையவும், புலவர் புணைதேர் பண்ணவும் இன்னாவாகப் பிறர்மண் கொண்டு ஆர்வலர்க்கு இனிய செய்தல் அறனோ மற்றிது? என்று வினவும் நெட்டிமையார் பாடல் போர்த்திறனை உணர்த்துவதாக உள்ளது"[38] என்கிறார் வே. முத்துலக்குமி.

புலவர்கள் மேற்கொண்ட முயற்சியின் விளைவாக, அவர்களின் சொல்லாற்றால் நாட்டுக்கு நலமே விளைந்தது. புலவர்களின் அறவுரை கேட்ட மன்னர்கள் தங்களின் தவறை உணர்ந்து போரைக் கைவிட்டனர்.

‘‘புலவர் நல்லுரை கேட்டு அரசர் பலர் உண்மை உணர்ந்து முற்றுகை விடுத்தனர். போர் தவிர்த்தனர். வெஞ்சினம் தவிர்த்தனர். ஒறுத்தல் நிறுத்தினர். புலவர் உறவே பேருறவாகக் கொண்டனர். அவர் கடுஞ்சொல் கொண்டு வேம்பும் கடுவும் போலக் கடிந்தபோதும் உண்மை உணர்ந்து உள்ளம் குளிந்தனர். அறம் உணர்த்திய அறிவுரைக்காக நன்றி பாராட்டினர்’’[39] என்று மு. வரதராசன் புலவர்களின் சொல் வன்மையினை விவரிக்கிறார்.

### 3.3.1. சான்றோர் சொல் தூய்மை

புலவர்கள் உரைத்த நன்னெறிகள் பலவும் கேட்போர் மனத்தைச் சீர்திருத்தும் தன்மையனவாக விளங்கின. ‘‘நிலத்தை வைத்து இது நல்ல இடமா? கெட்ட இடமா? என்று வரையறை செய்ய இயலாது. அங்கு வாழ்கின்ற மக்களைக் கொண்டு தான் அதனை முடிவு செய்ய இயலும்’’[40] என்கிறார் ஔவை. உலக வாழ்க்கை இனிதாக வேண்டுமாயின் செய்கின்ற செய்கைகள் நல்லனவாக இருக்க வேண்டும். அதனால்தான் தமக்கும் பிறருக்கும் நலம் விளையும். நல்வினை செய்ய இயலவில்லை என்றால் இயன்றவரை தீமை செய்யாத மனநிலை உடையவர்களாக வாழ வேண்டும். ‘‘உலக மக்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் எண்ணமுடன் நல்ல நெறியில் செல்ல வைக்கும் உயரிய செயலே அறம்’’[41] என்று விளக்குகிறார் நரிவெரூஉத்தலையார். உலகம் இன்ப துன்பத்தின் வழிப்பட்டது. ஓர் இல்லத்தில் சாப்பறை ஒலிக்கிறது. அங்கே துன்பம் நிலவுகிறது. ஓர் இல்லத்தில் மணமுழவு ஒலிக்கிறது. மனம் புரிந்தவள் மகிழ்ச்சியில் திளைக்கிறாள். ‘‘இன்பமும் துன்பமும் கலந்து உலகைப் படைத்த இறைவன் பண்பில்லாதவன். உலகம் இன்பமும் துன்பமும் நிறைந்தது எனினும் இன்பம் தேர்ந்து வாழ்வதே நல்வாழ்வாக அமையும் பெருமை உடையது.’’[42]

### 3.3.2. நலம் விளையும் சொல்லாற்றல்

புலவர்கள் தன்னலம் கருதாத் தகைமையாளர்கள். அதனால் தம்முடைய சொல்லாற்றல் வெளிப்படும் போதெல்லாம் தம்மைச் சார்ந்தவர்களுக்கும் தாம் முன்னிலைப்படுத்துபவர்களுக்கும் நலம் விளைதல் வேண்டும் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டனர். இறைவனிடம் சென்று அருள் வழங்கக் கேட்கும் காலத்தில் கூட அவர்கள் பொன்னையும் பொருளையும் இன்பத்தையும் வேண்டாமல் எங்கும் அன்பும், அறமும் பெருக வேண்டும் என்னும் தன்னலமற்ற மனநிலையினை வெளிப்படுத்துபவர்களாக இருந்தனர்.

*"யாஅம் இரப்பவை*
*அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே"*[40]

வாழ்க்கைக்குப் பொருள் தேவை. பொருள் இன்றேல் இல்வாழ்க்கை சிறக்காது. ஆகையினால் பண்டைய இலக்கியங்களில் பொருள் தேடல் தலையாய நிகழ்வாகக் கூறப்பட்டது. "பண்டைய புலவர்கள் பொருள், இன்பம் இரண்டும் எவ்வகையில் கிடைத்தாலும் சரி என்னும் எண்ணத்தைக் கொண்டவர்களாக இருக்கவில்லை. பொருள், இன்பம் இரண்டும் அறவழிப்பட்டனவாகவே இருத்தல் நன்று என்று கூறினார்கள்."[41] "அறத்தை விரும்புதலே அந்தணர் குறிக்கோள்"[42] என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது. இன்பம் தனக்காக என்று கருதுபவர்கள் சுயநலக் கொள்கை உடையவர்கள். ஆனால் புலவர்கள் தாம் நினைக்கும் செயல்கள், செய்யும் செயல்கள் ஆகியவற்றை உலகிற்கு நலம் விளையும் முறையில் செயல்படுத்தினர். அவர்களின் மனம் தவத்தால் அடங்கி நடுநிலை உடையதாகத் திகழ்ந்தமையினால் அவர்களின் வாய்ச்சொல்லும் அறவழிப்பட்டதாகவே இருந்தது.

***"ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை***
***நான்மறை முதல்வர்"[43]***

மனிதன் கொள்கையுடன் வாழ வேண்டும் என்பதைப் புலவர்கள் சொல்லத் தவறவில்லை. நற்கொள்கை இருந்தால்தான் நலம் விளையும் செயல்களை மேற்கொள்ள இயலும். சிறந்த கொள்கை இல்லாதவனின் உடல் நலம் வலிமையற்றது என்கிறார் ஆலந்தூர் மூலங்கிழார்.

***"பூட்கை இல்லோன் யாக்கை போலப்***
***பெரும்புல் லென்ற இரும்பேர் ஒக்கல்"[44]***

நல்லனவற்றை நாடறியச் சொல்வதில் புலவர்கள் நேரிய மனநிலையினைக் கொண்டவர்களாக இருந்தனர்.

***"ஆற்றுதல் என்பதொன்று அலந்தவர்க்கு உதவுதல்***
***போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை***
***பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்***
***அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை***
***அறிவெனப் படுவது பேதையர்சொல் நோன்றல்***
***செறிவெனப் படுவது கூறியது மறாஅமை***
***நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை***
***முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வௌவல்***
***பொறையனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்"[45]***

இல்லற வாழ்க்கை நடத்துதல் என்று கூறுவது வறுமையில் வாடுபவர்களுக்கு ஒன்றைக் கொடுத்து உதவுவது; ஒன்றைப் பாதுகாத்தல் என்று கூறுவது கூடியவரைப் பிரியாது இருத்தல்; மக்கட்பண்பு என்று கூறுவது உலக வழக்கு அறிந்து நடத்தல்; அன்பு என்று கூறுவது தன் சுற்றத்தைக் கெடுக்காமல் இருத்தல்; அறிவு என்று சொல்லப்படுவது அறியாதவர்கள் தன்னைப் பார்த்துக் கூறக்கூடிய கடுமையான சொற்களைப் பொறுத்துக் கொள்ளுதல்; ஒருவரோடு ஒருவர் உறவு என்று கூறப்படுவது கூறியது ஒன்றை தாம் மறவாது இருத்தல்;

இறை என்று சொல்லப்படுவது மறைந்து ஒரு செயலைப் பிறர் அறியாமல் செய்தல்; முறை என்று சொல்லப்படுவது இவர் நம்மவர் என்று நினைக்காமல் அவர் செய்த குற்றத்துக்கு ஏற்ப தண்டித்தல்; பொறை என்று சொல்வது பகைவரை அதற்கான காலம் வரும் அளவும் பொறுத்துக் கொள்ளல். இப்பாடலில் பயின்றுவரும் நுட்பமான கருத்துகள் மனிதன் ஒருவன் தன் வாழ்வில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை எடுத்துரைக்கின்றன. புலவரின் ஒவ்வொரு சொல்லும் ஆன்றடங்கிய மனத்தில் இருந்து வெளிப்பட்டு மக்கள் வாழ்க்கைக்கும் மன்னர்களின் செம்மையான அறிவுத் திறனை மேம்படுத்தும் நுட்பமான சொற்கோவைகளாகவும் திகழ்ந்திருக்கின்றன.

### 3.3.3. *அமைதியாக வாழ்கின்ற வழி*

மனிதன் தான் வாழ்கின்ற வாழ்க்கையை அமைதியாக வாழ்வதற்கும் போட்டி பொறாமைகள் இன்றி மனத்தை நடுநிலையில் வைத்துக் கொள்வதற்கும் தேவையான அறநெறிகளை வழங்கியிருக்கின்றனர். ஒரு மனிதனின் செயல்களே நன்மைக்கும் தீமைக்கும் காரணமாகின்றமையால் மனிதன் தன் மனம், சொல், செயல் இவற்றைத் தக்கவகையில் காத்துக் கொள்ளல் நலம் பயக்கும்.

***“யாதும் ஊரே; யாவரும் கேளிர்***
***தீதும் நன்றும் பிறர்தர வாரா***
***நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன***
***சாதலும் புதுவது அன்றே வாழ்தல்***
***இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்***
***இன்னா தென்றலும் இலமே; மின்னொடு***
***வானம் தண்துளி தலைஇ ஆனாது***
***கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று***
***நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்***
***முறைவழிப் படூஉம் என்பது திறவோர்***

***காட்சியின் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்***
***பெரியோரை வியத்தலும் இலமே***
***சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"[46]***

என்னும் புறப்பாடலில் கணியன் பூங்குன்றனார் சிறந்த சொல்லாக்க முறைமையினால் உலகோர்களுக்குத் தெளிவாக்கியுள்ள சிந்தனைகள் தனிமனிதனின் சொற்றிறத்தை சொல் தூய்மையை மேம்படுத்தும் தன்மையனவாக இருக்கின்றன. தனிமனிதன் ஒருவன் உலகம், வாழ்க்கை இவற்றின் நிலையாமையை உணர்ந்து வாழ்வை அதன் போக்கில் எதிர்கொள்ளப் பழகிக் கொள்வானேயானால் பக்குவப்பட்ட அவனுடைய மனம் பெருமை, சிறுமை என்று மக்களுக்குள் வேற்றுமை பாராட்டாமல் சமதர்ம சமுதாயத்திற்கு வழிகாட்டுவதாக அமையும் என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.

### 3.3.4. நல்ல நண்பர்களுக்கான சொல்

நட்பு அரிதான ஒன்று. பண்டைக் காலத்தில் அரசர் புலவர் நட்பு சிறந்திருந்தது. நட்பின் அருமையை உணர்ந்த புலவர்கள் நட்பு எப்படி இருக்க வேண்டும். அதனை எப்படிப் போற்றி வளர்க்க வேண்டும் என்பதைக் கூறிச் சென்றுள்ளனர்.

***"காதல் நெஞ்சின்றும் இடைபுகற்கு அலமரும்***
***ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது"[47]***

என்னும் புறப்பாடல் அடிகளில் சோழ மன்னனும், பாண்டிய மன்னனும் நட்பு பாராட்டி ஒருங்கு இருப்பதைக் கண்ட காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் நல்ல நண்பர்களைப் பிரித்தற்கு எழுகின்ற அயலாரின் சொற்களைக் கேட்கக் கூடாது என்று அறிவுரை கூறுகின்றார். மேலும் மன்னர்கள் நட்பால் ஒன்றுபட்டால் நாடு நலம்பெறும் என்பதையும்,

***"..... இருவீரும்***
***உடனிலை திரியீர் ஆயின் இமிழ்திரைப்***

***பௌவம் உடுத்த இப்பயங்கெழு மாநிலம்***
***கையகப்படுவது பொய்யா காதே''***[48]

என்னும் பாடலடிகளால் தெரியப்படுத்துகின்றார்.

### 3.3.5. பொருளின் இழிவுகூறல்

பொருளைத் தேடி அலைந்து கொண்டிருக்கும் மக்களுக்குப் புலவரின் சொற்கள் மருந்தாக அமைந்தன என்று கூறுதல் மிகையில்லை. பொருளை இவ்வழியில்தான் பெற வேண்டும். இவ்வகையில் பெறக்கூடாது என்பதைச் சங்கப் புலவர்கள் தம் தூய சொற்களான் உணர்த்தியுள்ளனர். உலகப் பொருள்கள் எல்லாம் நிலையானவை என்று நினைத்து உலகில் உள்ளவர்கள் இனிய வாழ்வை வாழ மறந்து பொருள் தேடுவதிலேயே காலம் முழுவதையும் கழித்து விடுகின்றனர். அதனால் புலவர்கள் தம் அறிவாற்றல் மிக்க சொல் வளத்தால் பொருளின் இழிவினை அரசர்க்கும், மக்களுக்கும் விளக்கியுள்ளனர். பொருட்செல்வம் ஒருவரிடம் நிலையாக இருப்பது கிடையாது. ஒருவரை விட்டு ஒருவரிடம் என அது இடம் மாறிக் கொண்டே இருப்பது. அதுவும் விரைவாக நடைபெறக்கூடிய ஒன்றாகும் என்கிறது கலித்தொகை.

***“கிழவர் இன்னோர் என்னாது பொருள்தான்***
***பழவினை மருங்கில் பெயர்பு பெயர்பு உறையும்''***[44]

‘‘பொருளை அறவழியில்தான் தேட வேண்டும். அறவழியில் தேடாத பொருள் வாழ்க்கையில் துன்பத்தைக் கொண்டு வருவதுடன் நிலை இன்றி அழிந்துவிடும்.''[50] நல்வழியில் பொருள் தேட வேண்டியதையே புவியில் மனிதன் தான் வாழ்கின்ற நாளில் பாடுபட்டுப் பொருள் தேடுவரை நோக்கமாகக் கொள்கிறான். அப்பொருளைப் பல்லாற்றானும் காக்க முயல்கிறான். ஆனால் அப்பொருள் எத்தகைய உயரிய பொருளாயினும் குறித்த காலத்தில் பயன்படாமல் போகிறது. இறக்கின்றபோது அவனுடன் எதுவும் உடன் வருவது கிடையாது. இதனைப் புறநானூறு,

"நாகத்தன்ன பாகார் மண்டிலம்
தமவே ஆயினும் தம்மொடு செல்லா"[51]

என்னும் அடிகளான் இதனை உணர்த்துகின்றது.

உலக வாழ்வில் பொருள் தேடுவதை மனிதன் தன் தலையாய கடமையாகக் கொள்கிறான். அதனை முயன்று பலவழிகளில் தேடிச் சேமிக்கவும் முனைகிறான். ஒருவனுக்கு நல்வினை இருக்கின்றவரை சேர்த்து வைத்த பொருள் நிலைத்து நிற்கும். தீயகாலம் வரும்போது சேர்த்துவைத்த பொருள் எல்லாம் அவர் கண்முன்னே கரைந்து விடுகின்றது. அதனால் பொருட்செல்வத்தின் மேன்மை மற்றும் அதன் நிலையாமையினை அறிந்து அதனை விலக்கல் நலம் பயக்கும் என்பதைப் புலவர்கள் தம் சொல்லாற்றலின் வாயிலாகத் தெளிவுபடுத்தியுள்ளனர். நற்றிணை, "வாடாப் பூவின் பொய்கை நாப்பண் ஓடுமீன் வழியிற் கெடுவ பொருளே"[52] என்னும் பாடலடிகளில் நிலையற்று ஓடும் நீரில் ஓடுகின்ற மீனைப் போன்று பொருளும் நிலையின்றிச் செல்வம் என்று குறிப்பிடுகின்றது. "நிலை இல்லாத பொருளை யாரேனும் விரும்புவரோ"[53] "நிலையில்லாத பொருள் நோயை ஒத்தது"[54] "பொருள் நிலை இல்லாதது"[55] என்று இலக்கியங்களில் புலவர்கள் பொருளின் தன்மையை மனம் உணர்ந்து கொள்ளும் வண்ணமும் மனிதன் பொருளின்மேல் கொண்ட ஆசையை விலக்க வேண்டும் என்னும் அரிய உண்மையினையும் பதிவு செய்துள்ளனர். து. சிவராசன், "வாழ்க்கைக்குப் பொருள் வேண்டும். ஆயினும், பொருளே வாழ்க்கை ஆவதில்லை"[56] என்று கூறும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது ஆகும்.

## 3.4. செல்வத்தின் அருமை உணர்த்தல்

செல்வத்தின் மேன்மை குறித்து விரிவான நிலையில் பேசிய சங்கப் புலவர்கள் மனிதனின் மனம் கொள்ளும் வண்ணம் பொருளின் அருமைத்

தன்மையினையும் உணர்த்தியுள்ளனர். தனக்காகவும் தன் தேவைக்குமே பொருள் என்னும் எண்ணத்தை விதைக்காமல், பிறர் நலம் பேணவும், இல்லோரைக் காக்கவும், ஆதரவற்றவர்களுக்கு உதவவும் சேர்த்த பொருள் பயன்பட வேண்டும். அதற்காகவே பொருளைச் சேர்க்க வேண்டும் என்று சிறந்த சொல்லாக்கங்களால் உணர்த்தியுள்ளனர். நற்றிணை, உண்மையான செல்வம் என்பது பிறருக்கு இரங்குவதாகிய பண்பே என்று கூறுவது இங்கு நோக்கத்தக்கது.

***“நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்***
***செல்வ மன்றுதன் செய்வினைப் பயனே***
***சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்***
***புன்கண் அஞ்சும் பண்பின்***
***மென்கண் செல்வம் செல்வமென் பதுவே”[57]***

இப்பாடலில் இப்பிறவியில் வசதியாக வாழ்வதற்குக் கிடைத்த செல்வம் முன்பு செய்த நல்வினைப் பயனால் கிடைத்தது. இனிமையாகப் பேசுவதும், வாகனங்களில் பயணிப்பதும் செல்வம் இல்லை. உண்மையான செல்வம் என்பது பிறருக்கு இரங்கக் கூடிய அருள் உணர்வேயாகும் என்னும் குறிப்புக் காணப்படுகிறது. அதனால் ‘பொருட்செல்வம் இல்லோரைக் காப்பதற்கே’ என்னும் புலவர்களின் நோக்கம் வெளிப்படுகிறது.

மனிதராகப் பிறந்தவர்கள் பிறருடைய துன்பத்தைத் தீர்ப்பதை நோக்கமாக்கக் கொள்ள வேண்டும். அகநானூறு, “பிறருடைய துன்பத்தைப் போக்குவதற்கு ஈட்டிய பொருள் பயன்பட வேண்டும்”[58] என்று குறிப்பிடுகிறது. வள்ளுவர், “தன்னுடைய இன்பத்தைப் பாராமல் தன்னைச் சார்ந்தவர்களின் துன்பம் போக்கத் துணையாக நிற்பவன் அக்குடும்பத்தைத் தாங்கி நிற்கும் தூண் போன்றவனாவான்”[59] என்று குறிப்பிடுகிறார். ஆக, தன்னைச் சார்ந்தவர்களை வாட விடுவது அறிவுடையோர் செயல் அல்ல என்பது பெறப்படுகிறது. இதனையே அகநானூறு,

***"நட்டோர் இன்மையும் கேளிர் துன்பமும்***

***ஒட்டாது உறையுநர் பெருக்கமும் காணூஉ***

***ஒருபதி வாழ்தல் ஆற்றுவ தில்ல"[60]***

என்னும் அடிகளில் தன்னைச் சார்ந்தவர்கள் துன்புறுவதைக் கண்டு சோம்பல் கொண்டிராமல் அவர்களுக்கு உதவும் பண்பைக் கொண்டிருக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறது. தன்னைச் சார்ந்த உறவினர் அல்லாது அயலாரிடமும் அன்பு பாராட்ட வேண்டும். அவர்கள் பொருள் இன்றி வறுமையில் வாடுகின்ற போதும், உண்ண உணவின்றித் துன்புறுகின்ற போதும் தாம் பெற்ற பொருள் வளத்தினால் அவர்களின் துன்பம் தீர்ப்பதை நோக்கமாகக் கொள்வதே மனிதப் பண்பு என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

***"கேள்கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும்***

***கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவும்***

***ஆள்வினைக்கு எதிரிய ஊக்கம்"[61]***

மனிதன் தான் முயன்று சேர்த்த பொருள் பிறருக்குப் பயன்படும் போதுதான் அதனால் விளையும் பயன் முழுமையாகக் கிடைக்கிறது. இதனையே பண்டைய புலவர்கள் தாங்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்ததுடன் பிறரும் அவ்வாறே கடைப்பிடிக்க வேண்டும் என்னும் நற்சிந்தனையினால் உலகுக்குத் தம் பாடல்களின்வழி எடுத்துக் கூறியுள்ளனர்.

### 3.4.1. நிலையாமை உணர்த்தும் சொல்திறம்

உலகில் வாழ்கின்ற மக்கள் அனைவரும் தாம் வாழ்கின்ற வாழ்க்கை மற்றும் உலகம், இந்த உலகப் பொருள்கள், படைப்புகள் அனைத்தும் நிலையானவை என்னும் எண்ணம் கொண்டவர்களாக இருக்கின்றனர். சான்றோர்களாகிய பண்டைய புலவர்கள் மனித வாழ்வியலை உற்றுநோக்கி எது நிலையானது, எது நிலையற்றது என்னும் சிந்தனையை மக்களுக்கு

விளக்கமாகக் கூறியிருக்கின்றனர். அவர்கள் கூறியுள்ள கருத்துகள் மக்களை நல்வழிப்படுத்துவனவாக அமைந்திருக்கின்றன.

இரா. அனுராதா என்பார், ‘‘மண்ணில் தோன்றிய உயிர்கள் அனைத்தும் ஒருநாள் அழிந்ததாக வேண்டியது படைப்பின் சூட்சுமம். ஒவ்வோர் உயிரும் வாழ்வதற்கான காலம் சில வரையறைக்குள் அடங்குகிறது. அந்நிலை உயிர்களின் இயக்க நிலையிலும் சமூக நிலையிலும் பல்வேறு மாற்றங்களைத் தந்து கொண்டிருக்கிறது. உயிர்களின் பிறப்பும் இறப்பும் பொருள்களின் நிலைமாற்றமும் தன்மை மாற்றமும் தொடர்ந்து நிகழ்பவை. சுருங்கக் கூறின் இந்த உலகம் நிலையாமை என்னும் தத்துவத்தைத் தொடர்ந்து செயல்படுத்திக் கொண்டே இருக்கிறது’’[62] என்று அதன் தன்மையைச் சுட்டுகிறார்.

மனித வாழ்வில் ஒவ்வொருவருக்கும் அவர்களுடைய பிறப்பு தெரிந்த ஒன்றாக இருப்பதுபோல் அவர்களின் இறப்பு இல்லை. இறப்பு மனிதப் பிறவிக்கு அறிந்து கொள்ள இயலாத சூட்சுமமாகவே விளங்குகிறது. அதனால் புவியில் வாழ்கின்ற மக்கள் தாம் இழந்த இளமையைத் திரும்பப் பெற இயலாது என்பதையும், தன் வாழ்நாளின் அளவை முன்னரே அறிந்து கொள்ள இயலாது என்பதையும் நற்றிணை,

***‘‘முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்***
***வாழ்நாள் வகைஅளவு அறிநரும் இல்லை’’[63]***

என்னும் அடிகளான் குறிப்பிடுகின்றது. ‘‘வாழ்வில் மனிதனை நாடிவரும் இன்பம், செல்வம், வாழ்நாள் அனைத்தும் நிலை இன்றி அழிந்து போகின்றன. வில்லில் இருந்து புறப்படும் அம்புபோல் அனைத்தும் விரைந்து அழிகிறது’’[64] என்று சங்கப் புலவர் உலகிற்கு உணர்த்துவர்.

### 3.4.2. அகத்தில் தோழியின் சொல்

அகவாழ்க்கை பண்டைக் காலத்தில் மாண்புடைத்தாய் விளங்கியது. புலவர்கள் தோழி என்ற பாத்திரத்தின் மூலம் மிக அரிய கருத்துகளை எல்லாம் கூறியுள்ளனர். குறிப்பாக, அகப்பாடல்களில் தோழியின் கூற்றாக அமைந்த பாடல்களில் தோழியின் மூலம் அகவாழ்வை அறமாக்கும் சிறந்த கருத்துகளை எல்லாம் புலவர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். "தலைவியின் வாழ்வு காதல் கொண்டவனோடுதான் மணத்தில் முடிய வேண்டும். அதுதான் கற்பு, அறம் என்று வரைவு கடாவும் நோக்கில் குறிஞ்சிப்பாட்டில் அறத்தொடு நிற்கும் தோழியின் மனப்பான்மை போற்றத்தக்கதாகும்."[65] "தலைவன் பிரிந்திருக்கின்ற காலத்தில் தலைவியன் உடல் நிறம் மாறுபடுவதும், அவள் துன்பத்தின் வயப்பட்டிருப்பதும் இயற்கை. அவ்வேளையில் அவளின் துன்பத்தைக் குறைக்கும் பொருட்டாகத் தோழி அவளுக்குப் பிரிவின் அருமையையும் அதனால் விளையும் பயனையும் சுட்டிக்காட்டித் துன்பம் நிலையற்றது, அதனால் அது விரைவில் நீங்கும் என்பதை உணர்த்துகிறாள்."[66] "தலைவன் மணந்து கொள்ளக் காலம் கடத்துகின்றபோது அறமல்ல என்பதை உணர்த்தி விரைவில் மணந்து கொள்வதற்கான அறிவுரையினைத் தலைவனுக்கு வழங்குகிறாள்."[67]

### 3.4.3. அறிவரின் அறச்சொல்

வாழ்க்கைக்குத் தேவையான நற்சிந்தனைகளை எடுத்துக் கூறுவதையும் தீயவனவற்றைக் கடிந்துரைப்பதையும் அறிவர் மேற்கொண்டனர். தலைவன் தலைவி இருவரும் உடன்போக்குச் சென்ற நிலையில் அவர்களைத் தேடிக்கொண்டு பாலைவழியில் புலம்பியபடி செல்லும் செவிலியிடம் முக்கோல்பவர் கூறும் அறிவுரை உலகோர்க்கான சொல்லாக அமைகின்றது.

“பெண்ணானவள் தாம் பிறந்த குடும்பத்தில் இருந்து பெற்றோரைப் பிரிய வேண்டியவள். சந்தனம், யாழ் இசை, கடலில் விளைந்த முத்து இவை தனக்குப் பயன்படுவது இல்லை. மாறாகப் பிறருக்கே பயன்படுகின்றன. தலைவியும் அவ்வாறே, தலைவனுக்குப் பயன்படுவாள்”[68] என்று கூறுவது உலக இயற்கையினை விளக்கும் அறிவுரையாகிறது.

## 3.5. சொல் தூய்மைக்குப் புலவர்களின் பங்களிப்பு

சங்ககாலப் புலவர்கள் தாம் இயற்றிய பாடல்களில் அரிதான உண்மைகளையும் உலக மக்கள் நல்லனவற்றைக் கடைப்பிடித்து வாழ்வாங்கு வாழ்வதற்கான நற்சிந்தனைகளையும் வழங்கியிருக்கின்றனர். அவர்களுள்,

★ பாலை பாடிய பெருங்கடுங்கோ
★ பாண்டியன் அறிவுடைநம்பி
★ பாண்டியன் நெடுஞ்செழியன்
★ உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்
★ உறையூர் முதுகண்ணன் சாத்தனார்
★ ஓதலாந்தையார்
★ கபிலர்
★ காரிக்கண்ணனார்
★ நல்லாந்துவனார்
★ பொன்முடியார்
★ மோசிகீரனார்
★ ஔவையார்
★ வெண்பூதியார்

ஆகியோர் உருவாக்கியுள்ள சொல்லாக்கங்கள் மிகவும் சிறப்புடையனவாகத் திகழ்கின்றன.

### 3.5.1. *பாலை பாடிய பெருங்கடுங்கோ*

சங்க இலக்கியங்களில் அரசப்புலவர்களுள் ஒருவராக அறியப்படுபவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ. இவர் ஒரு சேர மன்னன். கலித்தொகையில் பாலைத்திணைப் பகுதியை பாடிய இவர், பாலை நிலத்தின் பெயரால் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று அழைக்கப்படுகின்றார். பாலைக் கலியில் பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடிய பாடல்கள் பாலைக் காட்சியை நுட்பமாக எடுத்துக்காட்டும் வண்ணமும் வாழ்க்கைக்குத் தேவையான நல்லறங்களை மக்களுக்கு எடுத்துக் கூறும் தன்மையனவாகவும் விளங்குகின்றன. பெருங்கடுங்கோ மக்கள் வாழும் வாழ்க்கையில் பொருள் எத்தகையது என்பதையும், அதன் தன்மையினையும் விளக்கிக் கூறியுள்ளார். “இரந்தோர்க் கொன்றீயாமை யிளிவென”[69] என்னும் அடியினால் தம்மை நாடிவந்தவர்களுக்குத் தம்மிடம் உள்ள பொருளைக் கொடுத்து உதவாமல் இருப்பது இகழத்தக்க பண்புகளில் ஒன்றாகும் என்று குறிப்பிடுகின்றார். பண்டைய மன்னர்கள் தாம் சேர்த்து வைத்த பொருள்களைக் கொடுத்து உதவுவது தான் பெருமை என்னும் எண்ணம் கொண்டவர்கள். அத்தகையதொரு மனப்போக்கினைப் பெருங்கடுங்கோவிடமும் காண முடிகிறது.

***“மெல்லிய லரிவைநின் னல்லகம் புலம்ப***
***நிற்றுறந் தமைகுவெ னாயி னெற்றுறந்***
***திரவலர் வாரா வைகல்***
***பலவா குகயான் செலவுறு தகவே”[70]***

இப்பாடலின்கண் தம்மிடம் உள்ள பொருளைப் பெறுவதற்கு இரவலர் வராத வாழ்நாட்கள் எல்லாம் அவருக்குப் பயனற்ற வாழ்நாட்களாகும் என்னும் செய்தி அறியக்கிடக்கிறது. வாழ்க்கைக்குத் தேவையான பொருளை ஈட்டுவதில் நேர்மை வேண்டும் என்பது பெருங்கடுங்கோவின் சிந்தனையாக வெளிப்படுகிறது.

*"செம்மையினி கந்தொரீஇல் பொருள் செய்வார்க் கப்பொரு
எிம்மையு மறுமையும் பரிகயாவ தறியாயோ"*[71]

இவ்வடிகளில் ஈட்டப்படுகின்ற பொருள் நேரிய வழியில் சேர்ந்தவை இல்லை என்றால் அவற்றால் துன்பங்கள் விளைவதுடன் வாழ்கின்ற வாழ்க்கைக்கும் துறக்க உலகிற்குச் செல்வதற்குமாகச் சேர்த்து வைத்த பயன்களை எல்லாம் அத்தகைய பொருட்கள் கெடுத்துவிடும் என்றும் குறிப்பிடுகின்றார்.

வாழ்க்கையில் வறுமை, இல்லாமை ஆகிய சூழல்கள் ஒருவர்க்கு ஏற்படுத்துவதற்குக் காரணங்கள் பலவாகின்றன. இத்தகைய சூழல் வாழ்க்கையில் ஏற்படக்கூடாது எனில் ஒருவர்க்குப் பொருள்வளம் தேவை. இதனை,

*"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வம் இரண்டும்
பொருளின் ஆகும்"*[72]

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. பிறருக்கு ஈந்து பெருமையுடன் வாழ்தலும், அப்பெருமையைத் தக்கவைத்துக் கொள்வதாகிய நிலையும் பொருட் செல்வத்தாலே விளையும் என்னும் சிந்தனை பெருங்கடுங்கோவால் உலகிற்கு உணர்த்தப்பட்டிருக்கிறது. உழைப்பே உயர்வுதரும் என்பதில் பெருங்கடுங்கோ உறுதி உடையவர் என்பதை,

*"உள்ளது சிதைப்போ ருளனெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை யிரவினு மிளிவு"*[73]

என்னும் அடிகளில் உணர்த்துகிறார். இவ்வடிகளில் முன்னோர் சேர்த்து வைத்த பொருளைக் கொண்டு வாழ்வது கூடாது. அத்தகைய செயல் இழிவானது. அது இரந்து நிற்றலை விடவும் மதிப்புக் குறைந்தது என்று குறிப்பிடுகின்றார். மேலும் இவரோ தாம் ஈட்டும் பொருள் தம் சொந்த முயற்சியால் பெறப்பட்டதாக இருக்க

வேண்டும் என்பதை, “சிறியவன் செல்வம்போல் சேர்ந்தோர்க்கு நிழல்இன்றி”[74] என்னும் அடியினால் விளக்கியிருக்கின்றார். பெருங்கடுங்கோவின் சொற்கள் அதனைக் கேட்பவர் மனத்தில் மாற்றங்களை ஏற்படுத்தும் வண்ணமும் கேட்பவரின் மனநிலையைச் சீர்படுத்தும் வண்ணமும் அமைந்திருக்கின்றன.

### 3.5.2. *பாண்டியன் அறிவுடைநம்பி*

பாண்டியன் அறிவுடைநம்பி அரசப் புலவராக அறியப்படுபவர். உலக வாழ்வு இனியது. அவ்வாழ்வும் எல்லா வளங்களும் நிரம்பியதாக இருக்க வேண்டும் என்று சான்றோர்கள் அறிவுறுத்தினர். பண்டை நாளில் செல்வங்களுளெல்லாம் எல்லாம் சிறந்த செல்வமாக மழலைச் செல்வம் போற்றப்பட்டது. பாண்டியன் அறிவுடை நம்பியின் பாடல் ஒன்றில் மழலைச் செல்வத்தின் இன்றியமையாமை குறித்த சிந்தனை அறமாக வெளிப்பட்டிருக்கின்றது.

***“படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்***
***உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்***
***குறுகுறு நடந்து சிறுகை நீட்டி***
***இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்***
***நெய்யுடை யடிசில் மெய்ம்பட விதிர்த்தும்***
***மயக்குறு மக்களை இல்லோர்க்குப்***
***பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே”[75]***

இப்பாடலில் பாண்டியன் அறிவுடை நம்பி பெருஞ்செல்வத்தை ஈட்டி அதன் பயனைப் பலருடன் இருந்து அனுபவிக்கின்ற பெரிய செல்வம் பொருந்தியவர் எனினும் இன்பத்திற்குக் காரணமான மழலைச் செல்வத்தைப் பெறவில்லை என்றால் அவ்வாழ்வினால் பயன் ஏதும் இல்லை என்று மொழிகிறார். மற்றோரிடத்தில் கல்வி இல்வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்று என்று கூறி அதைக் கற்க வேண்டியதன் வழிமுறைகளையும் அதன் அருமைத் தன்மையினையும் விளக்குகின்றார்.

*"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே*
*பிறப்புஓர் அன்ன உடன்வயிற்று உள்ளும்*
*சிறப்பின் பாலால் தாயும் மனம்திரியும்*
*ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்*
*மூத்தோன் வருக என்னாது அவருள்*
*அறிவுடையோன் ஆறு அரசு செல்லும்*
*வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்*
*கீழ்ப்பா லொருவன் கற்பின்*
*மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே"[76]*

இப்பாடலில் கல்வி கற்றுக் கொடுக்கும் ஆசிரியருக்குத் துன்பம் வந்த காலத்து உதவுதல்; ஆசிரியரின் தேவை அறிந்து உதவுதல்; கற்கும்போது பணிவுடன் கற்றல் ஆகிய மாணவர்களுக்கான அடிப்படைத் தகுதிகளாகக் கூறப்பட்டுள்ளன. தாயும் நாடாளும் மன்னனும் கற்றோரையே மதிப்பர். அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் அல்லாது வேறு கீழ்க்குலத்தில் உதித்த ஒருவன் கல்வி கற்று உயர்நிலை அடைந்தால் அவன் மேற்குலத்தோராலும் மதிக்கப்படுவான் என்னும் உயரிய சிந்தனையும் இங்கு வெளிப்படுகின்றது. பாண்டியன் அறிவுடை நம்பியின் கருத்து சமுதாயத்தில் வாழ்கின்ற ஒவ்வொருவருக்குமான நேரடியான அறிவுரையாக அமைகின்றது. புலனைச் சொல்லால் உழுது நற்பலன் விளைவிக்கும் சொல் வித்தாக இக்கருத்துத் திகழ்கிறது.

### 3.5.3. *பாண்டியன் நெடுஞ்செழியன்*

பாண்டிய மன்னர்களுள் புகழ்பெற்றவன் பாண்டியன் நெடுஞ்செழியன். இவன் தலையாலங்காணத்தில் நடைபெற்ற போரில் சேரன், சோழன், வேளிர் ஐவர் என எழுவரை வென்று வாகை சூடியவன். இதனால் தலையாலங்கானத்துச்

செருவென்ற நெடுஞ்செழியன் என்ற சிறப்புப் பெயருடன் அழைக்கப்பட்டான். பாண்டிய நெடுஞ்செழியன் ஓர் அரசப் புலவராகவும் அறியப்படுகிறான்.

நாடாளும் மன்னன் நற்குணம் உடையவனாகவும் குணத்தூய்மை உடையவனாகவும் இருந்தால்தான் அவன் மக்களுக்கு எடுத்துக்காட்டாய் விளங்க இயலும் என்பதைத் தன் சொல்லாலும் செயலாலும் நடைமுறை வாழ்க்கையினாலும் வாழ்ந்து காட்டியவன் பாண்டியன் நெடுஞ்செழியன். மன்னனுக்கு வேண்டிய மனஉறுதி, தெளிவு, அனைத்தும் மிக்கவன் பாண்டியன் என்பதை அவனுடைய சொற்கள் தெளிவுபடுத்துகின்றன.

*“நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்*
*இளையன் இவனென உளையக் கூறில்*
*படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்*
*நெடுநல் யானையும் தேரும் மாவும்*
*படையமை மறவரும் உடையம் யாம்என்று*
*உறுதுப்பு அஞ்சாது உடல்சினஞ் செருக்கிச்*
*சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்கு அகப்படேஎன் ஆயின் பொருந்திய*
*என்னிழல் வாழ்நர் செல்நிழல் காணாது*
*கொடியன்எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்*
*குறுபழி தூற்றும் கோலேன் ஆகுக*
*ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவனாக*
*உலகமொடு நிலைஇய பார்புகழ் சிறப்பிற்*
*புலவர் பாடாது வரைகவென் நிலவரை*
*புரப்போர் புன்கண் கூர*
*இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே”*[77]

இப்பாடலில், எதிரிகள் இவன் இளையவன் என்று பழி தூற்றும்போது பாண்டியன் கூறிய வஞ்சினம் இது. பகைவர்களை வெல்லவில்லை எனில், எம் அரசன் கொடியன் என்று எம் மக்கள் பழி தூற்றட்டும். புலவர்கள் என் சிறப்பைப் பாடாது போகட்டும். இரப்பவர்களுக்கு இல்லை என்று கூறும் இழிவுடையேன் ஆவேன் என்று வஞ்சினம் கூறுவது எதிர்மறையாக, பாண்டியன் வெற்றி பெறுவான் எனக் கூறும் தெளிவான மனநிலையை உணர்த்துகிறது. பாண்டியனின் சொற்றிறம் சொல்வன்மையின் வலிமையை விளக்குகிறது.

### 3.5.4. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

புலவர் தொழில் மன்னனைப் பாடுவதும், பரிசில் பெறுவதும், இல்லாதவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்துத் தாமும் மகிழ்ந்து மற்றவர்களையும் இன்புறுத்துவதாகும். புலவர்கள், மன்னர்கள் சிறப்பில்லாதவர்கள் என்றால், அவமதிப்பவர்கள் என்றால், அவர்களைத் தக்க காலத்தில் இடித்துரை கூறித் திருத்தத் தயங்குவது இல்லை.

***"நிலீஇயர் அத்தை நீயே ஒன்றே***
***நின்னின்று வறுவது ஆகிய உலகத்து***
***நிலவன் மாரோ புரவலர் துன்னிப்***
***பெரிய ஓதினும் சிறிய உணராப்***
***பீடின்று பெருகிய திருவின்***
***பாடில் மன்னரைப் பாடன்மார் எமரே"[78]***

இப்பாடலடிகளில் ஏணிச்சேரி முடமோசியார், தன் சீர்மையான சொல்திறத்தால் பயனற்ற, புலவர்களை மதிக்கும் திறனற்ற மன்னரைப் புகழ்ந்து பாடுவது இல்லை என்னும் தன் குணத்தைப் பதிவு செய்கிறார். இதனால் புலவர்களின் உயர்ந்த ஒன்றைப் பாடும், உயர்ந்த ஒன்றையே பேசும் மனநிலை தெளிவாகிறது. செல்வர்கள் செல்வம் பெற்றதன் பயன் அதனைப் பிறருக்குக் கொடுத்து உதவுதல் வேண்டும் என்பதாகும். அவ்வாறு கொடுத்து உதவாத

செல்வத்தால் எந்தப் பயனும் விளைவது இல்லை. கொடை வழங்காத செல்வர்கள் தம் புகழை இழப்பதற்கு உரியவர்களாவர். அவர்கள் பெற்ற செல்வத்தால் பயன் ஏதும் இல்லை என்பதை,

*“பிறர்க்கு ஈவின்றித் தம்வயிறு அருத்தி*
*உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய*
*முரைசு கெழுசெல்வர் நகர்போ லாதே”*[79]

என்னும் அடிகளில் குறிப்பிடுகின்றார். பிறருக்குச் செய்யும் உதவி என்பது அவரிடமிருந்து எந்தப் பலனை எதிர்பாராமல் செய்யும் உதவியாக இருக்க வேண்டும். இன்ன உதவி செய்தால் இன்ன பயன் விளையும் என்னும் எண்ணம் இன்றி நன்மை செய்வதே நோக்கமாகக் கொள்ள வேண்டும் என்று இவர் வலியுறுத்துகிறார்.

### 3.5.5. உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் புலவர்கள் கடைப்பிடித்த தலையாய அறங்களைத் தானும் கடைப்பிடித்தவர். மன்னர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நுட்பமான அறக்கோட்பாடுகளை எடுத்துக் கூறியவர். நாடாளும் மன்னர்கள் தங்களை அறவான்களாக உலகில் நிலைநிறுத்த வேண்டும் என்னும் சிந்தனையை முன்வைத்தவர். பொருளில்லாமல் துன்பமுடன் மன்னனை நாடி வந்தவர்களின் முகக்குறிப்பை உணர்ந்து மன்னர்கள் உதவி செய்யும் மாண்பினராக இருத்தல் வேண்டும் என்னும் சிந்தனையை,

*“வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி*
*அருள வில்லை ஆகுமதி”*[80]

என்னும் அடிகளால் தீர்க்கமாகக் கூறுகின்றார். மன்னனின் செல்வம் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் நாட்டில் நிலைபெறச் செய்யக் காரணமாக அமைய வேண்டும். செல்வம் இரவலர்க்குத் துணையாதல் வேண்டும். அவ்வாறு

செல்வம் உலக மக்களுக்குப் பயன்படாமல் போனால் அச்செல்வத்தால் பயன் ஏதும் விளைவது கிடையாது. மேலும் ஈகைக்குணம் இல்லாதவர்கள் குறையுடைய பிறவிகளாகப் பிறந்து துன்புற நேரிடும் என்று குறிப்பிடுகின்றார்.

***“சிறப்பில் சிதரும் உறுப்பில் பிண்டமும்***
***கூனும் குறளும் ஊமும் செவிடும்***
***மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு***
***எண்பேர் எச்சம் என்றிவை எல்லாம்***
***பேதைமை அல்லது ஊதியம் இல்லை”[81]***

நாடாளும் மன்னன் நல்லவனாக இருப்பதுடன் நற்குணங்களின் இருப்பிடமாகவும் இருக்க வேண்டும். நற்குணம் நிலைபெற வேண்டுமாயின் தீயவர்களின் தொடர்பினை விலக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.

### 3.5.6. ஓதலாந்தையார்

ஓதலாந்தையார் ஐங்குறுநூற்றின் பாலைத் திணைப் பகுதியைப் பாடிய சிறப்பினால் அறியப்படுகின்றார். அகவாழ்வின் நுட்பமான சிந்தனைகள் பலவற்றையும் பாலைத் திணையின் வழியாக இவர் எடுத்துக்காட்டுகிறார். குறிப்பாகத் தலைவன் தலைவியின் ஒழுகலாறுகள் அகவாழ்க்கையில் எவ்வாறு அமைய வேண்டும் என்பதை உலகிற்கு உணர்த்தும் விதமான இவர் பாடல்கள் அமைகின்றன. தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கையை மேற்கொண்டிருக்கும்போது அவர்களின் களவு வாழ்க்கை பின்னர் கற்பு வாழ்க்கையாக நிறைவு பெற வேண்டும் என்பது புலவர்களின் சீரிய சிந்தனையாகும். இதனை,

***“அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்***
***பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே”[82]***

களவு வாழ்க்கையில் இடம் பெற்றிருக்கும் தலைவனும் தலைவியும் சேர்ந்து வாழ வேண்டும் என்னும் உண்மையை வலியுறுத்தும்போது

அவர்களுக்கு எதிராகச் செயல்படுபவர்களைத் தூற்றும் மனப்பான்மை கொண்டு கடிந்துரைப்பவர்களாகவும் இருந்தனர்.[83] புலவர்கள் களவு பிழை இன்றி நிறைவுபெற வேண்டுமாயின் கற்பில் முடியவேண்டும் என்னும் எண்ணம் கொண்டிருந்தமையினை அவருடைய பாக்களின் வழியாக வலியுறுத்தினர்.

### 3.5.7. கபிலர்

சங்க இலக்கியங்களில் அதிகமான பாடல்களைப் பாடியவராகக் கபிலர் அறியப்படுகின்றார். கபிலர் அறத்துறையில் அதிகமான பாடல்களைப் பாடியிருக்கின்றார். அகவாழ்வுச் சிந்தனையில் கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டு கபிலரின் நுண்மான் நுழைபுலம் மிக்க ஆற்றலுக்குச் சிறந்த சான்றாக விளங்குகிறது. மனிதர்கள் எந்நிலையிலும் தங்களின் நற்குணங்களை இழத்தலாகாது. அவ்வாறு இழந்தால் எந்நிலையிலும் ஞானியாலும் கூட அதனைத் திரும்பப் பெற இயலாது என்று குறிப்பிடுகின்றார்.

***“முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை***
***நேர்வருங் குரைய கலங்கெடின் புணரும்***
***சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்***
***மாசறக் கழீஇய வயங்குபுகழ் நிறுத்தல்***
***ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை***
***எளிய என்னார் தொல்மருங் கறிஞர்”[84]***

எனக் கபிலர் கூறியுள்ள கருத்துகள் யாவும் உலக மக்களும், மன்னர்களும் ஏற்று வாழ்வதற்கு உரிய கருத்துக்களாக அமைந்திருக்கின்றன. கபிலர் தன் பாடல்களில் நுட்பமான கருத்துகள் பலவற்றையும் பதிவு செய்திருக்கின்றார். “எப்போதும் நடுநிலையான மனநிலையைக் கொண்டிருக்கின்ற மன்னர்கள் எப்பொழுதும் உலகத்தை மக்கள் விரும்பும் வண்ணம் நல்லாட்சி நடத்துவர்.”[85] “சான்றோர்கள் தமக்கெனச் சுயமான நற்சிந்தனை கொண்டவர்கள். அவர்கள் பிறருக்கு நன்மை செய்யும் சிந்தனை உடையவர்களாவர். அவர்களின்

அறக்கோட்பாடு உலகிற்கும் உலக மக்களுக்கும் நலம் விளைவிப்பதாகும்.''[86] ''எல்லோருக்கும் கொடுத்து உதவும் குணம் கொண்டவர்களின் செல்வம் புகழ் உடையது.''[87] ''நமக்கு நலம் பயக்கின்றது என்பதற்காக எதன் பொருட்டும் பிறருக்குத் தீமை விளையும் செயல்களைச் செய்யக்கூடாது''[88] என்னும் அரிதான கருத்துகளை கபிலர் முன் வைத்திருக்கின்றார். கபிலரின் சொற்கள் நாட்டில் வாழ்கின்ற மக்களுக்கும், நாடாளும் மன்னர்களுக்கும் வழிகாட்டும் சொற்கோவைகளாகத் திகழ்கின்றன.

### 3.5.8. காரிக்கண்ணனார்

காரிக்கண்ணனார் அரசர்களுக்குள் ஒற்றுமை ஏற்படுத்துவதையும், மன்னர்கள் ஒருவருக்கு ஒருவர் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்று உணர்த்துவதையும் நோக்கமாகக் கொண்டிருந்தார்.

***''. . . . . நல்ல போலவும் நயவ போலவும்***
***தொல்லோர் சென்ற நெறிய போலவும்***
***காதல் நெஞ்சின்னும் இடைபுகற்கு அலமரும்***
***ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது***
***இன்றே போல்கநும் புணர்ச்சி வென்றுவென்று***
***அடுகளத்து உயர்களும் வேலே கொடுவரிக்***
***கோண்மா குயின்ற சேண்விளங்கு தொடுபொறி***
***நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த***
***குடுமிய ஆகபிறர் குன்றுகெழு நாடே''[89]***

என்னும் பாடலடிகளில் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் என்னும் மன்னனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒன்றாக வீற்றிருப்பதைக் கண்ட காரிக் கண்ணனார், ''நீங்கள் இருவரும் ஒன்றாக இருந்து செயலாற்றினால் உலகம் உங்கள் இருவரின் வசப்படும். அதனால் பிறர் கூறக்கூடிய நல்மொழிகளையும், தீயமொழிகளையும் மனம்

கொண்டு மனம் மாறுபாடு கொள்ளாமல் எப்போதும்போல் ஒற்றுமையாக இருக்க வேண்டும்'' என்று அறிவுரை கூறுகிறார். இவ்வறிவுரை இரு மன்னர்களுக்கான அறிவுரையாக மட்டும் அமையாமல் ஒற்றுமையின் வலிமையை உலகிற்கு உணர்த்துவதாய் அமைகிறது.

### 3.5.9. நல்லந்துவனார்

நல்லந்துவனார் கலித்தொகையில் இடம்பெறும் பல பாடல்களிலும் பிற இலக்கியங்களிலும் நுட்பமான அறக்கருத்துகளைக் கூறியிருக்கின்றார். சான்றோர்கள் நடுநிலையான மனநிலை உடையவர்கள். அவர்கள் தம் மனத்தில் பிறருக்கு நன்மை தரக்கூடிய சிந்தனைகளை மட்டும் எண்ணும் குணம் கொண்டவர்கள். நடுநிலையும் பிறர் நலம் விரும்புதலும் இவரது எண்ணமாக இருக்கின்ற காரணத்தால் சான்றோரின் இயல்பினைப் பரவலாகப் பாக்களின் வாயிலாகக் கூறியிருக்கின்றார். ''பிறர் புகழ்கையில் சான்றோர் நாணுவர்''[90] என்று குறிப்பிடுவதனால் சான்றோர்கள் தற்புகழ் விரும்பாத் தகைமையர் என்பது பெறப்படும். ''சான்றோர்கள் பிறர்க்கு வந்த துன்பத்தைத் தம்முடைய துன்பமாகக் கருதும் மனப்பான்மை உடையோராவர். அதுவே சான்றோர்களின் கடமை என்பதை இவர் புலப்படுத்துகின்றார்.''[91]

''தீயவர்களின் நெஞ்சம் தீமை விளையும் களனாக அமைந்திருக்கும். கல்வி கற்றவர்களின் மனம் பக்குவம் அடைந்திருக்கும். கல்வி கற்காதவன் மனம் கல்வி அறிவில்லாத காரணத்தினால் இரக்கம் என்னும் பண்பைக் கொண்டதாக இருக்காது. அருள் இல்லாத காரணத்தால் தீய செயல்கள் விளையும் களமாகி இருண்டு காணப்படும். எப்போதும் மனத்துள் தீய எண்ணத்தைக் கொண்டிருப்பவனின் மனம் நன்மைக்கு இடம் இன்றி இருப்பதால் துன்பத்தின் வழிப்பட்டதாக இருக்கும். அது தீமை விளையும் களம். வறுமையின் காரணமாகப் பிறரை அண்டி நிற்பவனின் மனம் இரந்து நிற்கின்ற காரணத்தினாலேயே

துன்பத்திற்குள்ளாகி வாடும்''[92] என்று கல்வி இல்லாத காரணத்தால் மனிதன் துன்பத்திற்கு இடனாகும் தன்மையினை இவர் விளக்கியிருக்கின்றார்.

அறம் என்பதை வாழ்க்கைக்குப் பயன்படும் வண்ணம் சொற்கோவையாக்கிக் கூறும் நுட்பமான பண்பு வாய்ந்தவர் நல்லந்துவனார். ''சேர்த்து வைத்த செல்வம் தமக்கும் தம்மைச் சார்ந்தவர்களுக்கும் பயன்பட வேண்டும். அவ்வாறாகப் பயன்படாத செல்வம் அழிந்துவிடும். கல்வியை, குருவைப் பணிந்து கற்க வேண்டிய முறைமையில் கற்க வேண்டும். ஆசிரியரை வருத்தம் கொள்ளச் செய்து கற்கும் கல்வி நிலைபேறின்றி அழியும். நன்றி மறப்பதும் பொய் கூறுவதும் அழிவைத் தரும்''[93] என்று உலகோர்களுக்கான அறங்களை இதற்கு இது என்னும் நீதிகளாகக் கூறியிருக்கின்றார்.

### 3.5.10. *பொன்முடியார்*

பொன்முடியார் ஒரு பெண்பாற் புலவர். இவர் புறநானூற்றில் கடமையைப் பாடிய புலவராக அறியப்படுகிறார். நாட்டை ஆள்வதற்கு நற்குணம் மிகுந்த மன்னன் தேவை. மன்னவன் நற்குணம் மிகுந்தவனாகவும், நாட்டை நன்கு வழிநடத்திச் செல்லும் திறன் பெற்றவனாகவும் இருக்க வேண்டும். அவனைச் சார்ந்தே நாட்டின் செயல்கள் அனைத்தும் நடைபெறும் என்பதனால் ஒவ்வொருவரும் கடமையாளர்களாக விளங்க வேண்டும் என்பதை உலகோர்க்குரிய சொல்லாக உணர்த்தியிருக்கின்றார்.

***''ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே***
***சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே***
***வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே***
***நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே***
***ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்***
***களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''[94]***

எனப் பொன்முடியார் இப்பாடலில் தாய், தந்தை, கொல்லர், வேந்தன், போர்வீரன் ஆகியோர்களுக்குரிய கடமைகள் இன்னின்ன என்பதை விளக்கிக் கூறியிருக்கின்றார். குழந்தையைப் பெற்றெடுத்தல் தாய்க்குரிய கடன்; குழந்தையைச் சான்றோனாக ஆக்குதல் தந்தைக்குரிய கடன்; போருக்குத் தேவையான வேல் செய்து கொடுப்பது கொல்லர்க்கு உரிய கடமை; நாட்டு மக்களுக்கு நல்ல நடத்தையைக் கற்றுக் கொடுப்பது மன்னருக்கு உரிய கடமை; பரந்த போர்க்களத்தில் யானையை வீழ்த்தி வெற்றி பெறுவது போர் வீரனுக்கு உரிய கடமையாகும் என்று இவர் கூறியுள்ள கருத்துகள் அனைத்தும் ஒட்டுமொத்தச் சமுதாயத்திற்கான குரலாக அமைகிறது. தனிமனிதர்கள் தங்கள் தங்கள் கடமைகளில் சரியாக இருந்துவிட்டால் உலக இயக்கம் சரிவர நடைபெறும் என்னும் உண்மை இவரது பாடல்களால் விளக்கப்படுகிறது.

### 3.5.11. மோசிகீரனார்

அறநெறிக் கொள்கைகளை நுட்பமாக உலகிற்கு உணர்த்தியவராக மோசிகீரனார் என்ற புலவர் அறியப்படுகிறார். நாட்டை ஆளும் மன்னன் நற்குணமும் செங்கோல் திறனும் உடையவனாக இருந்தால் மட்டுமே நாடு நலம் பெறும் என்னும் சிந்தனையை இவர்,

> ***“நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர் அன்றே***
> ***மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்”***[95]

என்னும் அடிகளில் குறிப்பிடுகிறார். பரந்த நில உலகில் உயிர்களைக் காக்கின்ற பணியினைச் செய்வது நெல்லும் நீரும் மட்டும் அன்று நாட்டை நல்வழியில் செலுத்தும் ஆட்சியுமே என்று குறிப்பிடுகின்றார். நல்ல ஆட்சி நடைபெற்றால்தான் நாட்டின் தேவைகள் நிறைவுறும் என்று உலகோர் உணரும் வண்ணம் தன் சிந்தனையை முன் வைத்திருக்கிறார்.

மோசிகீரனார் புலவர்களின் குரலாகக் கூறியுள்ள கருத்து மன்னர்களுக்கான குரலாகவும் புலவர்களின் உயரிய மாண்பினை எடுத்துக் கூறுவதாகவும் அமைகின்றது. “புலவர்கள் வளமையரை நாடாது, கொடுக்கும் குணமுடையோரை மட்டுமே நாடுவர். அதிலும் அவர் கொடுக்கின்ற பொருள் சிறிதாயினும் கொடுப்பவரை ஒருபோதும் இகழ்ந்துரைக்க மாட்டார்கள்”[96] என்று குறிப்பிடுகின்றார்.

### 3.5.12. ஔவையார்

பெண்பாற் புலவரான ஔவையார் பெண்பாற்புலவர்களுள் அதிகமான பாடல்களைப் பாடியவராக அறியப்படுகின்றார். புலவர்கள் எளிமையாக வாழக்கூடியவர்கள் என்பதனை, “புலவர்கள் எத்திசையில் சென்றாலும் அவர்களுக்கு அத்திசையில் உணவு உண்டு”[97] என்று குறிப்பிட்டிருக்கிறார். சங்கச் சமுதாயம் வீரச்சமுதாயம் என்பதை அறிந்து கொள்ள இவரது கவிதைகள் சான்றாக அமைகின்றன. இதனை, “போரில் இறவாது நோயின் காரணமாகவும் முதுமையின் காரணமாகவும் இறந்தால் அவர்களைப் புதைக்கும் முன்பு வாளால் கீறிப்புதைக்கும் வழக்கம் இருந்தது”[98] என்று தமிழரின் வீரப்பண்பைச் சுட்டுகிறார். “தொண்டைமானுக்கும் அதியமானுக்கும் இடையே தூது சென்று ஏற்படவிருந்த போரைத் தடுத்து நாட்டில் அமைதி நிலவச் செய்யும் குணம் உடையவராகவும் சொல்திறம் உடையவராகவும் திகழ்ந்தார்.”[99] “புலவர்கள் ஒற்றுமையாக இருந்தபோது நாட்டின் நலம் கருதி அனைவரும் ஒற்றுமையாக இருக்க வேண்டும்”[100] என்பதை வலியுறுத்தினார்.

### 3.5.13. வெண்பூதியார்

வெண்பூதியார், அகவாழ்வில் தலைவன் தலைவியின் வழி வாழ்க்கை எவ்வாறு இருக்க வேண்டும் என்னும் சிந்தனையை முன்வைப்பவராக

விளங்குகிறார். உலகோர் பலர் அருட்திறத்தினை மறந்து பொருள்மேல் ஆசை கொண்டு வாழ்வதை மனத்தில் கொண்டு,

*------------- "நந்துறந்து*
*பொருள்வயிற் பிரிவா ராயினிவ் வுலகத்துப்*
*பொருளே மன்ற பொருளே*
*அருளே மன்ற வாருமில்லதுவே"*[101]

என்னும் பாடலடிகளில் தலைவன் அருளை மறந்து பொருளை நினைந்து சென்றமையைப் பாடுகின்றார். வாழ்க்கைக்குப் பொருள் முக்கியம் எனினும் தலைவியுடன் இணைந்து இல்லறம் நடத்தும் வாழ்வு பொருளினும் இனியது என்பதை இவர் விளக்கியிருக்கின்றார்.

பண்டைத் தமிழ்ப் புலவர்கள் அறத்தைத் தலையாயதாக வைத்துப் போற்றும் தன்மையர்கள் என்னும் சிந்தனை அறங்களின் வாயிலாகத் தெளிவாகிறது. பண்டிதமணி கதிரேசன் செட்டியார், "தமிழ்ப்புலவர் பெருமக்கள் மன்னர்க்கு அரசியற் சூழ்ச்சிக்குரிய அமைச்சராகவும், அறிவுரை கூறி நன்று தீது உணர்த்தி நல்லாற்றின் நிறுத்தும் ஆசிரியராகவும் தாயத்தான் உடன் தோன்றினாரிடையே மாறுபாடு நிகழுங்காலை நடுநின்று அறிவுரை கூறி அதனைத் தீர்த்து அவரை நிலைப்படுத்தும் அக்குலமுதியோராகவும் விளங்கினர். முதுமையின் தளர்ச்சியிற் கதுமென நேரும் இறப்பு முதலியவை பற்றிய அச்சம் நிகழாவண்ணம் உடல், இளமை, பொருள் முதலியவற்றின் நிலையாமைகளை நெஞ்சத்தில் பதியுமாறு எடுத்துரைத்து மெய்யுணர்விற்றலைப் படுத்தும் அறவோராகவும், காதலிகத்து கைவிடப்பட்ட கற்பரசியாரை அவர்தங் கணவரோடியைந்து நீதி பல கூறி நெறிபிறழா வண்ணம் வாழ்க்கையில் நிலைப்படுத்தும் நல்லுறவினராகவும் விளங்கினர்"[102] என்று பண்டைய புலவர்களின் மாண்புகளை விளக்குகின்றார்.

### 3.6. அகவாழ்வின் சிறப்பும் புலவர் அறநெறிகளும்

தலைவியும் தலைவனும் சேர்ந்து இல்லறம் நடத்தும் வாழ்க்கை கற்பு வாழ்க்கையின் பாற்பட்ட மணவாழ்க்கை. இல்வாழ்க்கையில் நடந்துகொள்ள வேண்டிய முறைகள், கடைப்பிடிக்க வேண்டிய ஒழுகலாறுகள் ஆகியவற்றைப் புலவர்கள் தனிமனித ஒழுக்கங்களாக எடுத்துக் காட்டியுள்ளனர். தலைவன் தலைவி இருவரிடமும் ஒத்த காதல் உணர்வு இருந்தால்தான் இல்லறம் சிறக்கும் என்பதை அகநானூற்றுப் புலவர் எடுத்துக் கூறுகிறார்.

***-------------- "யாக்கைக்கு***
***உயிர் இயைந்தன்ன நட்பின், உயிர்***
***வாழ்தல் அன்ன காதல்***
***சாதல் அன்ன பிரிவறி யோளே !"[103]***

காதலன் காதலி இருவரும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் வாழ்கின்ற வாழ்க்கைதான் இன்பம் தருவது என்பதை புலவர்கள் உணர்த்தினர். அதுவே அறம் என்று உலகிற்கு உணர்த்தினர்.

***"இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்***
***வளமை விழைதக்கது உண்டோ ? உற்றாள்***
***ஒரோ ஒகைதம்முள் தழீஇ ஒரோஒகை***
***ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்***
***ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை; அரிதுஅரோ***
***சென்ற இளமை தரற்கு"[104]***

என்று அகவாழ்வின் சிறப்பும் அருமையும் புலவர்களால் எடுத்துரைக்கப்படுகிறது.

#### 3.6.1. திருமண வாழ்க்கை

ஆணும் பெண்ணும் மணம் செய்து கொண்டு வாழ்கின்ற திருமண வாழ்க்கை அன்பு சான்றது. அறம் விளையும் களமாக இருப்பதும் இதுதான்.

பண்டை நாளில் களவு மணம், கற்புமணம் இரண்டும் உலக வழக்கில் இருந்துள்ளது. குறிஞ்சிப்பாட்டில் கபிலர் களவு மணமும் தமிழரின் மணங்களுள் ஒன்று எனக் கருத்துரைக்கின்றார்.

*"இருவேம் ஆய்ந்த மன்றல் இதுவென*
*நாமறி வுறாலின் பழியும் உண்டோ"*[105]

களவில் தலைவனும் தலைவியும் மணம் செய்து கொண்டபின் பிறகு உலகறியக் கற்புமணம் புரிந்தமையினை,

*"நேர்இறை முன்கைபற்றி நுமர்தர*
*நாடறி நல்மணம் அயர்கம் சில்நாள்*
*கலங்கல் ஓம்புமின் இலங்கு இழையர்"*[106]

என்னும் அடிகள் விளக்குகின்றார். ஐங்குறுநூற்றுப் புலவர்,

*"ஒண்சுடர் பாண்டிற் செஞ்சுடர் போல*
*மனைக்கு விளக்கு ஆயினள் மன்ற"*[107]

என்னும் அடிகளின் மூலம் குடும்பம் சிறக்க ஒளியாக விளங்குபவள் பெண் என்று போற்றியுரைக்கின்றார். குடும்பப் பெண் நற்குணங்களின் இருப்பிடமாக விளங்குவது இல்லறம் சிறக்க வழியாகும் என்பதை அகநானூறு,

*"அன்பும் மடனும் சாயலும் இயல்பும்*
*என்பு நெகிழ்விக்கும் கிளவியும் பிறவும்*
*ஒன்றுபடு கொள்கையொடு"*[108]

என்று எடுத்துரைக்கிறது.

### 3.6.2. பிரிவும் இரங்கலும்

ஆண்கள் பெண்களைத் தனியே விடுத்துப் பிரிந்து செல்லல் அறமல்ல என்று கலித்தொகை விளக்குகின்றது. இது உலகோர் அனைவருக்குமான

குரலாக ஒலிக்கின்றது. ஆனால் புரக்கப்பட்ட பெண் அவனால் பணியின் நிமித்தமோ பொருள் தேடும் நிமித்தமோ பிரிவுக்கு உட்படும்போது இரங்கத்தக்க நிலையினளாகின்றாள் என்பதைத்,

***"தோள்நலம் உண்டு துறக்கப் பட்டோர்***
***வேணீர் உண்ட குடை ஓரன்னர்***
***நல்குநர் புரிந்து நலன் உணப்பட்டோர்***
***அல்குநர் போகிய ஊன் ஓரன்னர்***
***கூடினர் புரிந்து குணன் உணப்பட்டோர்***
***சூடினர் இட்ட பூ ஓரன்னர்"***[109]

நீர் உண்ணப்பட்ட ஓலை புறக்கணிக்கப்பட்டது போன்றும் குழலில் சூடிய பூவைப் புறக்கணிப்பது போன்றும் பெண்ணின் நிலை துன்புறத்தக்கதாகும் என்று கூறி, மணந்தவளைப் பிரியாமல் உடன் உறைவதே அறம் என்பதைப் பாடல் வலியுறுத்துகின்றது.

### 3.6.3. *அனைவரும் இன்பமாய் வாழ வழி*

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் அரசப்புலவர், சான்றோரின் நற்குணங்களை எடுத்துக்கூறும் முகமாக ஒவ்வொருவரும் சான்றோரின் சொற்றிறனையும், உயரிய மனநிலையினையும் உலகோர் ஒவ்வொருவரும் பெற்று உயர வேண்டும் என்னும் சிந்தனையைத் தன் புறப்பாடலில் எடுத்துக் கூறியிருக்கின்றார். உலகம் நிலைபெற்றிருப்பதன் காரணம், தன்னலம் அறியாத, உலகிற்கென வாழ்கின்ற சான்றோர்கள் இவ்உலகில் வாழ்வதனால் தான் என்று இவர் குறிப்பிடுகின்றார்.

***"உண்டால் அம்ம இவ்வுலகம் - இந்திரர்***
***அமிழ்தம் இளைவது ஆயினும் இனிதென***
***தமியர் உண்டலும் இலரே முனிவிலர்***
***துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவதஞ்சி***

*புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்*
*அன்னமாட்சி அனையர் ஆகி*
*தமக்கென முயலுநர் உண்மையானே"*[110]

இப்பாடலில், கிடைத்தற்கரிய அமுதம் கிடைத்தாலும் அதனைத் தானே உண்ண மாட்டார்கள். பிறருக்குக் கொடுத்துப் பின் மீதமிருப்பின் தானும் உண்ணும் குணம் உடையவர்கள். யாரிடமும் வெறுப்புக் கொள்ள மாட்டார்கள். அஞ்ச வேண்டியவற்றுக்கு அச்சம் கொள்வர். பிறரது துன்பம் தீர்க்க விரைந்து செயலாற்றுவர். புகழைத் தரும் செயலாக இருந்தால் தம்முடைய உயிரைக் கூட அதற்கெனக் கொடுப்பர். உலகையே பரிசாகக் கொடுப்பதாக இருந்தாலும் பழிவரத்தக்க செயல்களை ஒருபோதும் செய்யமாட்டார்கள். இத்தகைய பண்புடையோர் பிறரின் நலனுக்காகவே உயிர் வாழ்பவர்கள் எனச் சான்றோர்களின் பெருமைகளை எடுத்துக்காட்டி, உலகோர் அனைவரும் சான்றோர்களின் உயர்குணப்பண்புகளைப் பெற்று வாழ்வில் சொல் தூய்மையராயும் செயல் தூய்மையராயும் விளங்க வேண்டும் என்பதைக் குறிப்பாக உணர்த்தியிருக்கின்றார்.

### 3.6.4. நன்மை நாடி – தீமை அகற்றல்

வாழ்க்கையில் எத்தகைய நிலையிலும் துன்பம் தரத்தக்க தீய செயல்களைப் புறம் தள்ளி நல்ல செயல்களை மட்டுமே துணையாகக் கொள்ள வேண்டும் என்பதைச் சங்கப் புலவர்கள் உணர்த்தியுள்ளனர். நன்மை செய்தால் நன்மை விளைவதும் தீமை செய்தால் தீமை விளைவதும் உலகின் இயல்பாதலால் தீமை செய்பவர்களை விட்டு விலகுதல் வேண்டும் என்று புறப்பாடல் ஒன்று குறிப்பிடுகிறது.

*"நல்லதன் நலனும் தீயதன் தீமையும்*
*இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்"*[111]

பிறருக்குத் தீமை செய்தால் தமக்கும் தீமை வந்து சேரும் என்பது,

***"வள்ளிவீழ் விழாவரை மிகைத்தேன் தொடா***
***கொல்லை குரல்வாங்கி ஈனா மலைவாழ்நர்***
***அல்ல புரிந்து ஒழுகலான்"***[112]

என்னும் அடிகளால் தெளிவாக்கப்படுகிறது. புலவர் தீமையை விலக்க வேண்டியதன் அவசியத்தைத் தன் பாடலில் தெளிவாகவும் நுட்பமாகவும் விளக்கியிருக்கிறார்.

### 3.6.5. துறவின் அருமை உணர்த்தல்

துறவு தலையானதாகக் கருதப்பட்டது. துறவின்வழி நின்று அறம் செய்து வாழ்தல் நன்றெனக் கொள்ளப்பட்டது. புலவர்கள் தம் தூய சொற்களால் துறவு வாழ்வின் மேன்மையை விளக்கியுள்ளனர். புறநானூற்றுப் புலவர் ஒருவர் உலகிற்குத் தன் தெளிவான சிந்தனைகளை முன்வைக்கும் விதத்தில்,

***"இருங்கடல் உடுத்த இப்பெருங்கண் மாநிலம்***
***உடைமிலை நடுவணது இடைபிறர்க்கு இன்றி***
***தாமே ஆண்ட ஏமங் காவலர்***
***இடுதிரை மணலியினும் பலரே சுடுபிணக்***
***காடுபதி ஆகப்போகி தம்தம்***
***நாடுபிறர் கொளச் சென்று மாய்ந்தனரே***
***அதனால் நீயும் கேண்மதி அத்தை! வீயாது***
***உடம்பொடு நின்ற உயிரும் இல்லை***
***மடங்கல் உண்மை மாயமோ அன்றே***
***கள்ளிவேய்ந்த முள்ளிஅம் புறங்காட்டு***
***வெள்ளிப் போகிய வியலுள் ஆங்கண்***
***உப்பு இலாஅ அவில் புழுக்கல்***
***கைக்கொண்டு பிறர்க்கு நோக்காது***
***இழிபிறப்பினோன் ஈயப்பெற்று***

*நிலம் கலனாக இலங்கு பலிமிசையும்*
*இன்னா வைகல் வாரா முன்னே*
*செய்நீ முன்னிய வினையை*
*முந்நீர் வரைப்பகம் முழுதுஉடன் துறந்தே!"*[113]

என்னும் பாடலில் வெளிப்படுத்தியுள்ளார். சிறப்புடைய மன்னர்களெல்லாம் நிலைபேறு இன்றி இறந்தனர். இறப்பு வருதல் அனைவர்க்கும் உறுதி. அதனால் இறக்கும் முன்பு உலக வாழ்வின்மேல் உள்ள பற்றினை நீக்கித் துறவு வாழ்வைத் துணை கொள்ள வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.

மனிதனின் வாயில் இருந்து பிறக்கின்ற ஒவ்வொரு சொற்களும் நன்மைக்கும் தீமைக்கும் முழுமுதற் காரணம் ஆகின்றன. பண்டைய புலவர்கள் வாய்மையின் அவசியத்தை உணர்த்தியதுடன், எவ்வெவ் வகையில் மனிதன் சொல்லறத்தைப் பேணுதல் வேண்டும் என்பதை வாழ்க்கையின் ஒவ்வொரு சூழலிலும் ஒவ்வொரு நிகழ்விலும் எடுத்துக் காட்டியுள்ளனர். அகவாழ்வு, புறவாழ்வு, போர்நெறி என எல்லா வாழ்நிலைகளிலும் பண்டைக் காலத்தில் சொல்தூய்மை என்பது கடைப்பிடிக்கப்பட்டிருக்கின்றது என்பதை அறிய முடிகிறது.

## 3.7. தொகுப்புரை

பண்டைத் தமிழ்ப் புலவர்கள் தம் சீரிய சொல்லாற்றலால் அறம் உரைக்கும் தன்மையராய்த் திகழ்ந்தனர். சரியானதைச் சரியானது என்றும் தவறானதைத் தவறானது என்றும் உறுதியாகக் கூறும் மனநிலை பண்டைய புலவர்களுக்கு இருந்துள்ளது. சொன்ன சொல்லைக் காப்பதை ஒரு பேரறமாக அன்றைய மக்கள் கருதினர். நன்மையும் தீமையும் ஒருவர் பேசுகின்ற பேச்சினால் வருவதால் பேச்சில் ஒரு அறநெறி சார்ந்த முறையைப் பேணுதல் ஒரு தலையாய அறமாகக் கருதப்பட்டது.

அன்பும் அறமும் வாழ்க்கையின் உயர்ந்த பண்புகளாக உணர்த்தப்பட்டது. மன்னன் தவறு செய்தபோது புலவர்கள் தம் சொல்லாற்றலால் மன்னனிடம் தவற்றினை நுட்பமாகச் சுட்டிக் காட்டினர். வஞ்சினம் கூறுதலிலும் ஓர் அறம் பேணப்பட்டது. புலவரும் அரசரும் சொன்ன சொல் மாறாப் பண்பினராய், நடுவுநிலையினராய் அன்று விளங்கினர். புலவர் தம் சொல் திறனால் மன்னர்களிடையே ஏற்பட்டிருந்த பகைமை உணர்வைத் தணித்தனர்.

தன்னலம் கருதாதவர்களாகவும், தம் சொல்லாற்றலால் பொது நலம் பேணுபவர்களாகவும் சான்றோரும் புலவர்களும் இருந்துள்ளனர். பொருள் நிலையற்றது என்பதும், இந்நிலையற்ற பொருளைக் கொண்டு அறம் செய்வது கடமை என்பதும் மக்களுக்கும் மன்னர்க்கும் உணர்த்தப்பட்டது. நிலையாமையை உணர்ந்து மறுமை வாழ்க்கைக்கு இன்பம் சேர்க்க அறத்தின் துணை அவசியம் எனக் கூறப்பட்டது. அகவாழ்வில் நேரிய வாழ்க்கை வாழ்வதற்கான வழிமுறைகள் உணர்த்தப்பட்டன. பண்டைய புலவர்களின் சொல்லாற்றல் சமூக ஒற்றுமைக்கும் சமூக மேம்பாட்டிற்கும் உற்ற துணையாக இருந்துள்ளது. மக்கள் இனிய வாழ்க்கை வாழ்வதற்கு அவர்தம் வாழ்வின் அனைத்து நிலைகளிலும் அறநெறிகளைப் போற்ற வேண்டிய இன்றியமையாமை வலியுறுத்தப்பட்டது. மனிதர்கள் தங்கள் பேச்சில் தூய்மையைக் கடைப்பிடிப்பதன்வழி உலகில் தனிமனித அறம் மேலோங்கும் என்பது பெறப்படுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. புறம். 192.
2. குறள். 642.
3. வே. முத்துலக்குமி, பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள், ப.125.

4. தி. அ. சொக்கலிங்கம், காப்பியச் சிந்தனைகள், ப.113.

5. இராம. பெரியகருப்பன், பரிசில் வாழ்க்கை, ப.12.

6. புறம். 5 : 5–7.

7. மேலது. 40 : 9.

8. மேலது. 27 : 11–17.

9. மேலது. 27 மேலது. 1–9.

10. குறள். 448.

11. புறம். 29 மேலது. 5–12.

12. மேலது. 28.

13. மேலது. 367 : 1–14.

14. புறம். 184.

15. திருக்குறள், பரிமேலழகர் உரை, ப.90.

16. குறள். 291.

17. மேலது. 294.

18. பதிற். 70 : 12–13.

19. கலி. 100 : 7–8.

20. புறம். 3 : 14.

21. பதிற். 41 : 18.

22. புறம். 71 : 7–9.

23. மேலது. 72.

24. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.143.

25. இரா. அனுராதா, சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள், ப.126.

26. புறம். 35 : 14–16.

27. புறம். 35 : 14–15.

28. பெரும்பாண். 36–37.

29. மதுரை. 489–492.

30. புறம். 35.

31. புறம். 20 : 7–11.

32. பதிற். 13 : 25–28.

33. புறம். 35 : 27–29.

34. மேலது. 55 : 7–12.

35. ஞா. தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.64.

36. புறம். 45.

37. மேலது. 44.

38. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.153.

39. மு. வரதராசன், தமிழ் நெஞ்சம், பக்.41–42.

40. பரி. 5.

41. புறம். 31.

42. ஐங். 387.

43. புறம். 26.

44. புறம். 69.

45. கலி. 133.

46. புறம். 192.

47. புறம். 58 : 26–27.

48. புறம். 58 : 20–23.

49. கலி. 21.

50. கலி. 14.

51. புறம். 367.

52. நற். 16.

53. கலி. 8.

54. அகம். 79.

55. நற். 46.

56. து. சிவராசன், சங்க இலக்கிய வாழ்வியல், ப.64.

57. நற். 210.

58. அகம். 231.

59. குறள். 615.

60. அகம். 279.

61. அகம். 93.

62. இரா. அனுராதா, மு.நூல், ப.64.

63. நற். 314.

64. கலி. 11; நற். 46.

65. குறிஞ்சிப்பாட்டு.

66. குறுந். 143.

67. கலி. 133 : 6–14.

68. கலி. 9 : 11–24.

69. கலி. 2 : 11.

70. குறுந். 137.

71. கலி. 14 : 14–15.

72. அகம். 155 : 1–3.

73. குறுந். 283 : 1–2.

74. கலி. 10 : 2.

75. புறம். 182.

76. புறம். 183.

77. புறம். 72.

78. புறம். 375.

79. புறம். 127.

80. புறம். 27.

81. புறம். 28.

82. ஐங். 371.

83. ஐங். 376.

84. குறிஞ். 13–18.

85. பதிற். 69 : 11–12.

86. அகம். 382.

87. நற். 217.

88. கலி. 42.

89. புறம். 58.

90. கலி. 119.

91. கலி. 139.

92. கலி. 130–6.

93. கலி. 149.

94. புறம். 312.

95. புறம். 186

96. புறம். 154.

97. புறம். 22.

98. புறம். 93.

99. புறம். 95.

100. மேலது. 367.

101. குறுந். 174.

102. மு. கதிரேசன் செட்டியார், உரைநடைக்கோவை, ப.52.

103. அகம். 339 : 11–14.

104. கலி. 18.

105. குறிஞ். 21–22.

106. குறிஞ். 231–233

107. ஐங். 405.

108. அகம். 225.

109. கலி. 23.

110. புறம். 110.

111. புறம். 29.

112. கலி. 39.

113. புறம். 363.

*****

# செயல் தூய்மையில் தனிமனித அறம்

## 4.0. முன்னுரை

உலக அரங்கில் தனி மனிதனின் சிந்தனைகளே நல்ல விளைவுகளுக்கும் தீய விளைவுகளுக்கும் காரணமாகின்றன. மனத்தில் உருவாகும் நல்ல சிந்தனையும் நற்சொல்லும் நல்விளைவுகளைத் தருவனவாம். ஒவ்வொரு நல்ல செயலின் பின்பும் தீய செயலின் பின்பும் தனிமனிதச் சிந்தனை இடம் பெற்றிருப்பதை மறுக்க இயலாது. எனவே, செயல் தூய்மையை அறக்கோட்பாட்டில் கொண்டு வருவது தவிர்க்க இயலாததாகிறது. மனத்தூய்மை, சொல்தூய்மை என்னும் இரண்டன் அடிப்படையில் அறங்களை எடுத்துக்காட்டிய புலவர்கள் செயல் தூய்மையின் அடிப்படையிலும் பண்டைத் தமிழர்களிடையே வழங்கிவந்த அறங்களைத் தம் கால இலக்கியங்களின் வாயிலாக எடுத்துக் கூறியுள்ளனர்.

“அறிவு, நோக்கம், வாக்கு, செயல், ஒழுகலாறு, முயற்சி, மனம், தியானம் என்ற எட்டும் தவறின்றி அறநேர்மையுடையதாக இருக்க வேண்டும்”[1] என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகிறது. மேற்குறித்த எட்டும் அறத்திற்கு இன்றியமையாதவை எனினும் மனம், சொல் என்னும் இரண்டன் வழிப்பிறந்த சிந்தனை எவ்விதமான குற்றங்களும் இன்றிச் செயல்படுத்தப்பட வேண்டும் என்பதை சொல் தூய்மையில் தனிமனித அறம் வலியுறுத்துகின்றது.

தனிமனிதச் சிந்தனையில் எழும் ஒரு செயல் முழுமையான வடிவம் பெறப் பலருடைய முயற்சியும், ஒற்றுமையும், விட்டுக் கொடுக்கும் மனமும் ஒருமுகப்பட்ட சிந்தனையும் இன்றியமையாதனவாகும். அவ்வடிப்படையில்தான்

வே. முத்துலக்குமி என்ற ஆய்வாளர், அறத்தின் வளர்ச்சி எவ்வாறு நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது குறித்து விளக்கம் தரும்போது, "ஒரு கொள்கை வெற்றிபெற வேண்டுமாயின் பின்பற்றுவோர் பெரும்பாலோராய் இருத்தல் வேண்டும். கூடிவாழும் சமுதாய நிலையில் ஒருவர்க்கொருவர் உதவலும், விட்டுக் கொடுத்லும் தவிர்க்க இயலாதவையாகிவிடுகின்றன. இச்செயல்களுக்கு அறிவும், நல்லது, அல்லது ஆராய்ந்து பார்க்கும் பண்பும் வேண்டும். இவற்றை மரபுநிலையில் பழக்கத்தின் காரணமாக மக்கள் பின்பற்றிக் கொள்கின்றனர்."[2] என்கிறார்.

மனத்தில் தோன்றுகின்ற சிந்தனை நல்விளைவை ஏற்படுத்தும் தன்மையது எனினும் அதனைச் செயல்படுத்தும் நிலையில் அதிகார வர்க்கத்தினர் இருக்கிறார்கள். சாதாரணமானவர்கள் தாமே தம்மிடம் உள்ள இயல்பூக்கத்தின் காரணமாகப் பிறருடைய உதவியைக் கொண்டு மனத்தில் தோன்றிய நற்சிந்தனைகளைச் சிறந்ததாகச் செயல்வடிவம் பெறச் செய்கிறார்கள். அறக்கோட்பாடு நிறைந்தவர்கள் வாழ்கின்ற சமுதாயத்தில் விளைவுகள் நன்மை தரத்தக்கனவாக அமைந்திருக்கும். சமுதாயம் மரபொழுக்கத்தினைக் கொண்டிருக்கிறபோது, அறமல்லாச் செயல்கள் அருகிய நிலையில் அறம் தழைத்திருக்கும். தனிமனிதன், குடும்பம் என்னும் இரு கூறுகளும் அறக்கோட்பாட்டில் சிறந்திருப்பின் பல தனிமனிதர்களும் குடும்பங்களும் சேர்ந்த சமுதாய அமைப்பு அறமுறைப்பட்டதாக அமைந்திருக்கும் என்பது தெளிவு.

"பழைய நிலையில் இருக்கும் சமுதாயங்கள் நாகரிக சமுதாயங்களைவிட மரபொழுக்கத்துக்கு மிகுதியான இடமும் தனிமனிதச் சிந்தனைக்குக் குறைந்த இடமும் கொடுக்கின்றன. இருந்தாலும் மிக வளர்ச்சியடைந்த சமூகங்களும் கூடப் பெரும்பாலும் மரபொழுக்க நிலையிலேதான் இருந்து வருகின்றன என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இத்தகைய சமூகத்தின் ஒரு சிலரே அறவழியைப் பற்றிச் சிந்திக்கின்றனர். அதுவும் குறிப்பிட்ட சில வழியில்தான் சிந்திக்கின்றனர். மரபொழுக்க நிலையில் முக்கியமான போக்கு இதுதான்."[3]

பண்டைய மக்களின் அரசியல், சமுதாய வாழ்விலும், குடும்ப வாழ்விலும் செயல் தூய்மையில் தனிமனித அறம் சிறந்து விளங்கியமைக்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் பரக்கக் காணப்படுகின்றன. தனிமனிதர்கள் பலரும் பரவலாகத் தங்கள் சீரிய சிந்தனைகளை அறம் நிறைந்ததாக எவ்வாறு செயல்வடிவம் கொடுத்திருக்கின்றனர் என்பதை அறியப் பண்டைய இலக்கியங்களே சான்றாக நின்றிலங்குகின்றன.

அகவாழ்வியல், புறவாழ்வியல் என்னும் இருநிலைகளிலும் பண்டைய மக்கள் செயல்தூய்மையில் கவனம் செலுத்தியிருக்கின்றனர். அகவாழ்வின் பிரிவுகளான களவிலும், புறவாழ்விலும் போர் முதலான சமுதாய வாழ்க்கையிலும் சிறந்த செயல் தூய்மைகளைக் காண முடிகிறது.

## 4.1. அகவாழ்வில் செயல் தூய்மை

பண்டைய மக்களின் வாழ்க்கை முறை அறம் நிறைந்ததாக இருந்தது. களவு, கற்பு என்னும் இரு நிலைகளில் மக்களின் வாழ்வியல் அறங்கள் அவர்களின் செயல் தூய்மையினை எடுத்துக்காட்டும் சான்றுகளாகின்றன.

### 4.1.1. களவு வாழ்க்கை

பண்டைய மக்களின் அகவாழ்க்கைமுறை அறமுறைப்பட்டதாக விளங்கியது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து பிரிவுகளாக நிலம் பாகுபாடு செய்யப்பட்டு அதன் அடிப்படையில் மக்களின் வாழ்வியல் முறைமைகளும் அமைந்திருந்தன. ஐந்திணைகளால் இயன்ற அகப்பாடல்களில் தலைவன் பெயரையோ தலைவியின் பெயரையோ அப்படிக்

கூறும் மரபு பின்பற்றப்படவில்லை. சுட்டிக் கூறப்படினும் இன்னார் என்று அறியும் சூழல் இலக்கியம் வாயிலாக அறியப்பட்டாலும் அது புறம் என்று கொள்ளப்பட்டது. தலைவன் தலைவியின் பெயர் சுட்டிக் கூறா வழக்கத்தை,

***“மக்கள் நுதலிய அகனைந் திணையும்***
***சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்”***[4]

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம். அகஇலக்கியங்களிலும், அகவாழ்வியல் முறைமையிலும் பெயர் சுட்டிக்கூறாத தன்மையை சரளா ராசகோபாலன், “அகத்திணை குடும்ப இலக்கியம் அகத்திணையில் சிறந்த மாந்தரெல்லாம் தாய், தந்தை, கணவன், மனைவியென நெருங்கிய உறவினர்கள். இவர்கள் தம்முள் பேசிக்கொள்ளும்போது கிளைசுட்டிப் பேசுவதல்லது பெயர் சுட்டிப்பேசார். அதிலும் காதல் துறையில் பெயர் சுட்டாத மரபு சிறப்பாகும்”[5] என்று குறிப்பிடுவர்.

களவு வாழ்க்கை பண்டைக் காலத்தில் செயல் தூய்மை மிக்கதாக இருந்தது. முன்பின் அறிமுகம் இல்லாத ஆணும் பெண்ணும் எதிர்ப்பட்டுக் காதல் கொண்டு குடும்ப வாழ்வில் இணைவதை ஊழின் தன்மையால் நிகழ்ந்தது என்று கருதினார்கள். தொல்காப்பியம்,

***“ஒன்றே வேறே என்றிரு பால்வயின்***
***ஒன்றி உயர்ந்த பால தாணையின்***
***ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப”***[6]

என்று குறிப்பிடுகின்றார். பண்டை நாளில் களவு வாழ்க்கை அறத்தின் பாற்பட்டதாக அமைந்திருந்தது. தலைவனும் தலைவியும் தாமாகவே எதிர்ப்பட்டு அறம் வழுவாமல் மணம் செய்து கொள்வதும் அறமாகவே போற்றப்பட்டது. பத்துப்பாட்டுள் இடம் பெற்றிருக்கும் குறிஞ்சிப்பாட்டு தமிழரின் மேன்மையான அகவாழ்வில், களவு முறைமையினையும் அது கற்பு வாழ்வில் முடிய வேண்டி

அவசியத்தையும் வலியுறுத்துகின்றது. களவு கற்பில் முடிய வேண்டும் என்பது செயல் அறமாதலால் களவின்வழி வந்த கற்பு, கொடுப்போர் கொடுக்கும் முறையால் உகந்த கற்பு என இருநிலைகளிலும் அறம் போற்றப்பட்டது. இதனை,

*"இருவே மாய்ந்த மன்றல்"*[7]

*"எமியேந் துணிந்த வேமஞ்சா லருவினை"*[8]

*"கொடுப்பினன் குடைமையுங் குடிநீர லுடைமையும்*
*வண்ணமுந் துணையும் பெறீஇ யெண்ணாது"*[9]

*"நேரிறை முன்னுக பற்றி றுமர்தர*
*நாடறி நன்மன மயர்தும்"*[10]

என்னும் சான்றுகளின்வழி அறியலாம். ஒருவர்மேல் ஒருவர் அன்பு கொண்டு காதலிப்பவர்கள் தாமாகவே களவுமணம் புணர்ந்து அறமுறைப்பட்டு வாழ்ந்தனர் என்பதையும் களவு மணமும் கற்பு மணமும் அறமுறைப்பட்டதாகவே போற்றப்பட்டன என்பதையும் அறிய முடிகிறது.

### 4.1.2. வரைவு கடாதல்

தலைவியை இயற்கைப் புணர்ச்சியில் கண்டு இன்பம் கொண்ட தலைவன், தோழி, பாங்கன் ஆகியோர் உதவியுடன் மீண்டும் மீண்டும் தலைவியைச் சந்திப்பதை வழக்கமாகக் கொள்கின்றான். இதனை அறிந்த தோழி, தலைவனை வரைவிற்கு – திருமணத்திற்கு விரைவுபடுத்தும் முகமாகவும் உடன்படுத்தும் முகமாகவும் அவன் வரும் வழியில் உள்ள துன்பங்களையும், காவலின் கடுமையினையும், தாய் அறிந்ததையும், இற்செறிக்கப்பட்டமையினையும், தினைப்புனம் அறுவடைக்குத் தயாரானதையும், ஊரில் அலர் எழுந்ததையும் கூறித் திருமணத்திற்கு வற்புறுத்துகின்றாள். தோழி, தன்னுடைய செயல் மூலமாகத் தலைவனுக்கு அறம் போதிப்பதையே நோக்கமாகக் கொள்கிறாள். தலைவியின் மீது அன்பு கொண்ட தோழி, தலைவி தலைவனுடன் கற்பு வாழ்க்கையில் ஈடுபட வேண்டும் என்பதைத் தன்நோக்கமாகக் கொண்டு

தலைவனுக்கு அதனை உணர்த்தும் முகமாகவே செயலாற்றுகிறாள்.

புலவர் குழந்தை, ''இருவகைக் குறியினும் பலகாலம் வந்து தலைவன் தலைவியைக் கூறச் செல்லும் களவு வெளிப்படின், ஊரார் அலருக்கஞ்சிய சுற்றத்தார், வெளியில் சென்று வரவிடாமல் தலைவியை இற்செறிப்பர் எனவும், இருள் நிறைந்த இரவு நேரங்களிலெல்லாம் கொடிய விலங்குகளும், பாம்பு முதலிய நச்சுயிர்களும் உள்ள அரிய வழியில் வருவதால் தலைவனுக்கு ஏதாவது இடையூறு நேர்ந்தாலும் நேரக்கூடும் எனவும் தோழி அச்சமுற்று இக்களவொழுக்கம் நமது குடிப்பிறப்புக்கும் பெருமைக்கும் ஏற்றதன்று. இனிநீர் இவளை மணந்து கொள்வதே தகுதியாகும் என்று தலைவனிடம் கூறுவாள். இது வரைவு கடாதல் எனப்படும்.''[11] என்று வரைவுகடாதலுக்கு விளக்கம் கூறுவர்.

சங்க இலக்கியத்தில் காணப்படும் பாடல்கள் பலவும் வரைவு கடாதலை ஓர் அறமாகவே மொழிந்திருக்கின்றன. வரைவை முன்னிலைப்படுத்தித் தலைவனைச் செயலாற்றுவிக்கும் பணியில் தோழி சிறந்து விளங்குகிறாள்.

***''கழிதேர்ந்து அசைஇய கருங்கால் வெண்குருகு***
***அடைகரைத் தாழைக் குழீஇப் பெருங்கடல்***
***உடைதிரை ஒலியில் துஞ்சும் துறைவ***
***தொல்நிலை நெகிழ்ந்த வளையல் ஈங்குப்***
***பசந்தனள் மன்என் தோழி என்னொடும்***
***இன்கிணர்ப் புன்னைஅம் புகர்நிழல்***
***பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே''[12]***

என்ற இப்பாடலில் தோழி, தலைவனிடம் தலைவியின் குணநலன்கள் மாறுபட்டமையினை எடுத்துக்கூறி, இனி தலைவி இற்செறிக்கப்படுவாள் என்பதை உணர்த்துகிறாள். மனதால் ஒன்றுபட்ட காதலர்கள் வாழ்வில் இணைய வேண்டும் என்னும் அறமுறைப்பட்ட சிந்தனை தோழியின் மனத்தில் எழுந்து அது களவைக் கற்பாக்கும் முயற்சியில் செயல் தூய்மையாக இடம் பெறுகின்றது.

### 4.1.3. தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்லல்

தலைவன் தலைவியின் காதல், தலைவியின் பெற்றோருக்குத் தெரிந்த நிலையில் இற்செறித்தல் முதலான நிகழ்வுகள் தலைவிக்குத் துன்பம் மிகுவிப்பனவாக இருத்தலின் தோழி தலைவனிடம், தலைவியை விரைந்து மணந்து கொள்ளுமாறு வற்புறுத்துகிறாள். இனியும் தலைவியின் துன்பத்தைப் பொறுக்க இயலாது என்னும் நிலையில் தோழி, தலைவனிடம், தலைவியை உடன்கொண்டு செல்லுமாறு கூறுகின்றாள். தலைவியிடம் கற்பின் அருமையைக் கூறி, களவு வாழ்வைக் கற்பில் முடிக்கின்றாள். தொல்காப்பியர், உடன்போக்கை, கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழும் என்று குறிப்பிடுகின்றார்.

***"கொடுப்போர் இன்றியுங் கரண முண்டே***
***புணர்ந்துடன் போகிய காலை யான"[13]***

உடன்போக்கு அறத்திற்குரிய செயலாகவே மதிக்கப்பட்டது என்பதை,

***"அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்***
***பிறைநுதற் குறுமகள்"[14]***

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் புலப்படுத்தும்.

"படிகடவா இளமங்கை பிறந்த வீட்டைத் துறந்து பெற்றோரை மறந்து முன்பின் அறியா ஆயனைக் காதற் கொழுநன் என நம்பிக் கரடுமுரடான வழியில் உடன்போக்குத் துணிந்தபோது, அகவிலக்கியம் புதினம் போலும் சாயலையும் விறுவிறுப்பையும் பெறுகின்றது. கற்பவருக்கும் உணர்ச்சிக் கூர்மையை விளைக்கின்றது. உடன்போக்கு எப்பொழுது நிகழும்? அறத்தொடு நின்ற பின்னும், எண்ணிய காதலனுக்குப் பெற்றோர் மணம் முடிக்க மறுத்தாராயின், இவ்வழிச் செலவு நிகழும் என்று கொள்ளலாமா! கூடாது, அறநிற்புக்குப்பின் பெற்றோர் மறுக்கார். மகள் கற்பிழுக்கம் படத் தயார். உடன்படார். உரியவனுக்கே மணஞ்செய்வர். ஆதலின் உடன்போக்குக்கு இடமில்லை. இற்செறிப்பு, ஊரலர்,

வெறியாட்டு, நொதுமலர் வரைவு என்ற இன்னாச் சூழ்நிலைகளைக் கடத்தற்கு இரண்டு வழிகள் உள. ஒற்று அறத்தொடு நிற்கை. ஏனையது உடன்போகுகை. இவற்றுள் ஒன்று நிகழின் மற்றொன்று நிகழாது. அறத்தொடு நின்றபின் உடன்போகார். உடன்போனபின் அறத்தொடு நிற்பதாற் பயனில்லை. இரண்டில் ஒன்றே களவு நாடகத்தின் இறுதிக்காட்சியாகும்''[15] என்று வ.சுப.மாணிக்கனார் உடன்போக்கு அறத்தின் வழிப்பட்ட செயல் அறம் என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கின்றார்.

***''ஊரார் அலரெழச் சேரி கல்லென***
***ஆனா தலைக்கும் அறனில் அன்னை***
***தானே இருக்க தன்மனை யானே***
***நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க''[16]***

என்னும் குறுந்தொகைப் பாடலில் தாய் அறனில்லாதவளாக உரைக்கப்படுகிறாள். இதன் காரணம் காதல் நிறைவேற வேண்டும் என்னும் நற்சிந்தனையேயாகும். உடன்போக்கிலும் தோழியின் செயலே தூய்மையுடைய அறமாக இருந்து தலைவனையும் தலைவியையும் சேர்த்து வைக்கிறது.

### 4.1.4. *அறத்தொடு நிற்றல்*

''தன்னைப் பிறர்க்குக் கொடுக்கக் கருதித் தினம் கட்டுவிச்சியும் வேலனும் கட்டெடுத்தும் கழங்கு பார்த்தும், வெறியாடியும் வெறியெனக் கூறினும், தலைவி தன் கருத்தைச் செவிலிக்குக் கூறும்படி தோழியிடம் கூறுவாள். இது அறத்தொடு நிலை எனப்படும்''[17] என்பார் புலவர் குழந்தை.

இதுகுறித்து கு. மோகனராசு என்பாரும், ''களவு வாழ்க்கையில் தோழியின் துணையோடு அமையும் கட்டத்தில் வருகின்ற அறத்தொடு நிற்றல் என்னும் துறை, துறைக் குறியீடு, அறம் நோக்கியே களவு நடையிட வேண்டியதை உணர்த்துகின்றது. அந்த அறம், தலைமகளின் உறவுகளோடு சேரும்போது

கொடுப்போர் கூடிய மணமாகிறது. அல்லாதபோது உடன்போக்காகிக் கொடுப்போர் இன்றி அமையும் மணமாகிறது. இருவகை மணங்களும் இல்லறம் என்னும் நல்லறப் பணிக்கு நுழைவாயில்கள் ஆகின்றன''[18] என்று அறத்தொடு நிற்றல் செயல் அறமாக நிகழ்வதை எடுத்துக் காட்டியிருக்கின்றார்.

தமிழ் இலக்கியங்களில் சொல் அறத்தை எடுத்துக் கூறுவதில் கபிலரின் குறிஞ்சிப் பாட்டு தலையானதாகத் திகழ்கின்றது என்கிறார் வே. முத்துலக்குமி. ''கபிலரின் குறிஞ்சிப்பாட்டு இத்துறையில் (அறத்தொடு நிற்றல் துறையில்) அமைந்த சிறப்புடையது. இப்பாட்டு தமிழரின் அறத்தொடு பட்ட அக வாழ்வின் வெற்றியை அறிவிப்பது. தோழி செவிலிக்கு அறத்தொடு நின்ற வகையினை நாடகப் பாங்கில் எடுத்தியம்புவது. அறத்தொடு நிற்கும் தோழி தலைவியின் நாண் முதலிய பண்புகளுக்கு ஊறு ஏற்படா வண்ணம் அறத்தொடு நிற்பள். தலைவியின் கற்பு நிலையும் தலைவனின் அறிவும் பெருமையும் உரனும் கெடாது காக்கும் பண்பும் இந்நூலுள் பெரிதும் போற்றப்படுகின்றன''[19] என்று குறிஞ்சிப் பாட்டின் சிறப்பைக் குறித்து அவர் குறிப்பிடுகின்றார். மேலும்,

***''வரையின் எவனோ வான்தோய் வெற்ப***
***கணக்கலை இகுக்கும் கறியிவர் சிலம்பின்***
***மணப்பருங் காமம் புணர்ந்தமை யறியார்***
***தொன்றியில் மரபின் மன்றல் அயரப்***
***பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி***
***நொறுமல் விருந்தனம் போலவிவள்***
***புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் யாமே''[20]***

என்னும் பாடலில் அறத்தொடு நிற்றலுக்கு நாணத்தைத் துறந்து நிற்க வேண்டுமாதலின் அறத்தொடு நிற்கும் முன்னே தலைவன் தலைவியை மணந்துகொள்ள வேண்டும் என்னும் சிந்தனை இங்கு முகிழ்ப்பதையும் அறிய முடிகிறது.

### 4.1.5. பொருள்தேடும் எண்ணம் கைவிடல்

இல்லற வாழ்க்கைக்கும், வறியவர்களைப் போற்றுதற்கும் பொருட்செல்வம் அவசியம். தலைவன் தலைவியை மணம் செய்து கொள்ளும் பொருட்டு வரைவிடை வைத்தும், கொடை வழங்குவதற்கும் பொருளீட்டச் செல்லல் மரபாகும். அவ்வாறு தலைவன் பொருளீட்டச் செல்ல நினைத்ததைத் தோழியின் மூலம் தலைவி அறிந்து வருந்துகிறாள். தோழி, தலைவன் பொருள் தேடும் எண்ணம் கொண்டிருக்கிறான் என்பதை அறிந்ததும் தலைவி துன்புறுவாளே என்று வருந்துகிறாள். அதனால் தலைவியின் இயலாமையை, துன்பத்தை எடுத்துக் கூறி, தலைவனைச் செலவழுங்கச் செய்ய நினைக்கிறாள் தோழி. வாழ்க்கை நிலையாமையின் பாற்பட்டது என்பதனால் வாழ்கின்ற காலத்தில் தலைவன், தலைவியுடன் இன்புற்று வாழ வேண்டும் என்னும் அடிப்படையில் செலவழுங்கலை முக்கியத்துவப்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியத்தில் பாலைத் திணையில் இடம்பெற்று பாடல்கள் செலவழுங்கலை முக்கியத்துவப்படுத்தியிருக்கின்றன.

***"அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்***
***பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ***
***என்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்***
***மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்***
***சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா***
***தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லார்***
***இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்***
***வளமை விழைதக்க துண்டோ வுளநாள்***
***ஒரோவகை தம்முட்டழீஇ யொரோ துகை***
***ஒன்றன் கூறாடை ஒடுப்பவரே யாயினும்***
***ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ***
***சென்ற விளமை தரற்கு"[21]***

என்னும் பாலைக் கலிப்பாடல், ஒரு ஆடையை இரண்டாகக் கிழித்து உடுத்தும் வறுமைநிலை வந்தாலும், அன்பு கொண்டு வாழ்வதே நல்வாழ்க்கை என்று கூறிச் செலவழுங்கு வித்தமையை எடுத்துக் காட்டுகிறது.

தோழி, தலைவியின் துன்பத்தை எடுத்துக்கூறிச் செலவழுங்கும் தன்மையை,

***"நனிகொண்ட சாயலா ணயந்துநீ நகையாகத்***
***துணிசெய்து நீடினுந் துறப்பஞ்சிக் கலுழ்பவள்***
***பொருணோக்கிய் பிரிந்துநீ போகுதி யெனக் கேட்பின்***
***மருணோக்க மடிந்தாங்கே மயல்கூர்கிற் பாண்மன்னோ***
***விடுணோக்க மிடையின்றி யீரத்தி னியன்றநின்***
***னடுதோக்க மழியினு மவலங் கொண்டழியவள்"***[21]

என்னும் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. தோழி, தலைவியன் மனத்தை நன்கு அறிந்தவள். ஆகையினால் தலைவனைப் பிரிந்து தலைவி வாழமாட்டாள். துன்புறுவாள் என்பதை அறிந்து தலைவியின் மென்மைத் தன்மையினையும், அவளின் தனிமைச் சூழலையும் எடுத்துக்கூறி, இருவரும் ஒன்றுசேர்ந்து வாழும் இனிய வாழ்க்கைக்கு வழிசெய்கின்றாள்.

### 4.1.6. வாழ்க்கை

தலைவனும் தலைவியும் சேர்ந்து வாழும் இல்லற வாழ்க்கை பல்வேறு நற்செயல்களும் நடைபெறுவதற்குரிய களமாக அமைந்திருக்கிறது. தமிழர்களின் குடும்ப வாழ்க்கை அறத்தின் பாற்பட்டதாகும். அவர்கள் மேற்கொண்ட செயல்கள் பலவும் அறமுறைப்பட்டனவாகவே அமைந்திருந்தன. நல்ல சமுதாயம் உருவாகத் துணை நிற்கும் இல்லறம் சிறப்பாக அமைந்த காரணத்தால்தான் சங்கச் சமுதாயம் சிறந்த சமுதாயமாக விளங்கியது என்பதை அ. தட்சிணாமூர்த்தி, "பண்டைத் தமிழர் குடும்ப வாழ்வு பற்றி மிகவும் உயர்ந்த கொள்கைகளைக்

கொண்டிருந்தனர். அவர்கட்கு அறம் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதியன்று. வாழ்வு முற்றுமே அறமாகும். எனவேதான் குடும்ப வாழ்க்கையை இல்லறம் என்றனர்''[22] என்று குறிப்பிடுவர்.

பண்டைத் தமிழரின் இல்லற வாழ்வில் தலைவன் தலைவியின் ஒற்றுமையான அன்பு வழிப்பட்டு மனநிலை, தலைவன் தலைவியின் வினை செயல்வகை, இல்லறத்தில் மேற்கொண்ட அறங்கள், வாழ்வியல் கடமைகள் முதலியனவும் தலைவன் இறந்தபின்பு மேற்கொள்ளும் கைம்மையும் அறவழிப்பட்ட செயல்களாகவே அமைந்திருந்தன.

### 4.1.7. அன்புடை வாழ்க்கை

தலைவன், தலைவி இருவரும் அன்பு வழிப்பட்ட வாழ்க்கை வாழ்ந்தனர். அவர்களின் மனம் அன்பால் ஒன்றி இருந்தது.

***“சாதல் அஞ்சேன் அஞ்சுவற் சாவிற்***
***பிறப்புபிறி தாகுவ தாயின்***
***மறக்குவேன் கொல்என் காதலன் எனவே”[23]***

***“இம்மைமாறி மறுமை யாயினும்***
***நீயா கியரென் கணவனை***
***யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே”[24]***

***“உள்ளினென் அல்லனோ யானே உள்ளி***
***நினைத்தனென் அல்லனோ பெரிதே நினைத்து***
***மருண்டினன் அல்லனோ உலகத்துப் பண்பு”[25]***

என்னும் சங்கப் பாடல் சான்றுகள் தலைவன் தலைவியின் இனிய வாழ்க்கை அன்புவழிப்பட்ட செயல்பாடுடையதாய் அமைந்திருந்தமையை அறிய முடிகிறது. தலைவன், தலைவி இருவரும் தங்களின் வாழ்க்கைச் சூழலை அவரவர்களின் அறக்கோட்பாட்டின்படி நன்னிலையான வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர்.

“தலைவனும், தலைவியும் உயிரும் உடலும் போல இயைந்த அன்பு உடையவர்களாக வாழ்ந்தமையை”[26] அகநானூறு குறிப்பிடுகின்றது. தலைவனும் தலைவியும் முன்பின் அறிமுகம் இல்லாதவர்களாக இருந்தும் ஒற்றுமையுடன் மனம் ஒன்றுபட்டமையினைக் குறுந்தொகை காட்டுகிறது. மண்ணுலகில் வாழும் வாழ்க்கையே நன்மை பொருந்தியது என்றும் அதைவிட இனியது ஏதும் இருக்க முடியாது என்பதையும் உணர்ந்து பண்டைய மக்கள் வாழ்ந்தனர். இதனை,

***“மனையுறை வாழ்க்கை வல்லி யாங்கு***
***மருவி னினியவு முளவோ”[28]***

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. பண்டை நாளில் கணவனும் மனைவியும் தங்களின் இல்லறக் கடமைகளையும், பிற கடமைகளையும் சிறப்பாக ஆற்றினர். இல்லறத்தைக் காப்பது தலைவிக்குரிய கடமையாக இருந்ததைப் போலவே பொருளீட்டல் முதலாகப் பிற கடமைகள் தலைவனுக்குரியவை என்றும் குறுந்தொகை வரையறுத்துக் கூறியிருக்கிறது.

***“வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்***
***மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென”[29]***

தலைவன், தன்னைப் பொருள் தேடிப் பிரிந்த காலத்தும் அவனை நினைத்து ஆற்றியிருத்தல் அறமாகப் போற்றப்பட்டது. இதனையே முல்லைத் திணைப்பாக்கள் மிகச்சிறந்த அறமாக உணர்த்தியிருக்கின்றன. பத்துப்பாட்டில் அமைந்திருக்கும் நப்பூதனாரின் முல்லைப்பாட்டு தலைவியின் ஆற்றியிருக்கும் திறனை அறிய நல்ல சான்றாகிறது.

இதனை, “இப்பாட்டிற்கு முல்லை என்று பெயர் கூறினார். முல்லை சான்ற கற்புப் பொருந்தியதனால், இல்லறம் நிகழ்த்துதற்குப் பிரிந்து வரும் துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை முல்லையாமென்று கருதி இருத்தல் என்னும்

பொருட்டு முல்லை என்று இச்செய்யுட்கு நப்பூதனார் பெயர் கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள் கூறலே அவர் கருத்தாயிற்று''[30] என்பர் நச்சர். தலைவி, தலைவன் நினைவில் ஆற்றி இருக்க மனஉறுதி கொண்டமையினை,

> ***"செல்ப என்ப தாமே சென்று***
> ***தம்வினை முற்றி வரும்வரை நம்மனை***
> ***வாழ்தும் என்ப தாமே"[31]***

என்னும் நற்றிணைப் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. காதல் வாழ்வில் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் எத்தனை இடர்கள் வந்தபோதும் இணைந்து வாழும் வாழ்க்கைக்காக முயன்று இருவரும் வாழ்ந்து காட்டியமையினையும் வறுமையிற் செம்மையான வாழ்க்கை வாழ்ந்தமையினையும் அறிய முடிகிறது. தான் காதல் கொண்ட பெண்ணின் மன மகிழ்ச்சியை மிகுவிப்பதில் பண்டை நாளில் ஆடவர்கள் மிகுந்த பண்புடையவர்களாக விளங்கினர். இதனை,

> ***"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்***
> ***வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய***
> ***வாரேன் வாழிய நெஞ்சே"[32]***

என்னும் பட்டினப்பாலை அடிகளின்வழி அறியலாம். தான் காதல் கொண்ட தலைவியினும் பொருள் சிறந்ததில்லை என்னும் கருத்து பாடலடிகளால் அறியக் கிடக்கிறது.

தலைவன் அறம் தவறிப் பரத்தையின் வழிப்பட்ட காலத்தும் தாம் கொண்ட பொதுமையினாலும் தளராத மனத்தாலும் அங்கும் நல்விளைவே நடைபெறல் வேண்டும் என்று தலைவி நினைத்த பான்மையினை ஐங்குறுநூற்றின் மருதத்திணைப் பாக்களால் அறிய முடிகிறது. தனக்கில்லாமல் போனாலும் உலக மக்கள் நலமுடன் வாழ வேண்டும் என நினைக்கும் உயரிய மனத்தைத் தலைவியிடம் காண முடிகிறது. சிறந்த அரசு முறையால் மக்கள் மகிழ

நாடு நலம் பெறல் வேண்டும் என்பதைச் செயல் அறமாக ஐங்குறுநூறு உணர்த்தியிருக்கின்றது. இதனை,

***"மாரி வாய்க்க வளநனி சிறக்க"[33]***
***"நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க"[34]***
***"பால்பல உறுக பகடுபல சிறக்க"[35]***
***"விளைக வயலே வருக இரவலர்"[36]***

என்னும் சான்றுகளான் அறியலாம். இவற்றான் பண்டைய மக்கள் இல்லறத்தை அன்பு விளையும் களமாகக் கொண்டு நற்செயல்கள் சமுதாயத்தில் நடைபெற வாய்ப்பாக நல்வாழ்க்கை வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

### 4.1.8. விருந்தோம்பல் பண்பு

பண்டைக் காலத்தில் வழக்கில் இருந்த செயல் அறங்களுள் தனிமனிதன் போற்றிக் காத்த ஒன்று விருந்து. இதுகுறித்து மா. இராசமாணிக்கனார், "இல்வாழ்க்கை நடத்தும் கணவனும் மனைவியும் தம் உற்றார் உறவினரைக் காக்கக் கடமைப்பட்டவர். அவருடன் நில்லாது, தம் இல்லம் நாடிவரும் பிறரையும் உண்டியாலும்உறையுளாலும் உபசரித்தல் அவர்தம் கடமை என்று அறநூல்கள் கூறுகின்றன"[37] என்று குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியங்கள் உணவு கொடுத்து வறியோர்களைக் காப்பதையும் விருந்து உபசரிப்பதையும் தலையாய அறங்களாகக் குறிப்பிடுகின்றன. விருந்தினர்களை முகம் மலர்ந்து வரவேற்க வேண்டும் என்பதை நற்றிணை,

***"எமக்கே வருகதில் விருந்தே சிவப்பாளன்று***
***சிறியமுள் எயிறு தோன்ற***
***முறுவல் கொண்ட முகங்காண் கம்மே"[38]***

என்னும் அடிகளால் தெளிவாக்குகிறது. வீட்டுக்கு வந்திருந்த விருந்தினர்களை வரவேற்று வரிசையாக அமர வைத்து விருந்து படைத்த பாங்கினை,

***"தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னாள்***
***நீணெரும் பந்த ருண்முறை யூட்டும்***
***இற்பொலி மகடூஉ"[39]***

என்னும் அடிகள் எடுத்துக்காட்டுகின்றன. ஆற்றுப்படை இலக்கியங்களில் விருந்து உபசரித்தல் விரிவான அளவில் சேப்பட்டிருக்கின்றது. சிறுபாணாற்றுப்படை,

***"விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி***
***ஆனா விருப்பிற்றானின் றூட்டி"[40]***

என்று விருந்தோம்பல் பண்பின் சிறப்பினை எடுத்துக்கூறுகிறது.

பண்டைய மக்கள் தங்கள் சுற்றத்தாரை மட்டுமின்றித் தம்மை நாடி வருபவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுக்கு உணவு கொடுத்துச் சிறப்பித்த பான்மையை சங்கப் பாடல்களின் வழியாக அறிய முடிகிறது. "தம் உற்றார் உறவினரையே அன்றிப் புலவர், பாணர், பொருநர், கூத்தர், விறலியர் போன்ற கலை வாணரையும் வரவேற்று உண்டியும் உறையுளும் தந்து உபசரித்தலைச் சங்ககால மக்கள் தங்கள் சிறந்த கடமையாகக் கருதினார்கள்"[41] என்று மா. இராசமாணிக்கனார் பத்துப்பாட்டு ஆராய்ச்சி என்ற தன் நூலில் குறிப்பிட்டிருக்கின்றார்.

அ. தட்சிணாமூர்த்தி என்பவரும், "பெரும்பான்மையான மக்கள் உணவுக்காகச் செல்லும் ஊரையே நம்பியிருந்தனர். இத்தகு சமூகத்தில் விருந்தோம்பல் ஒரு தனியறமாகப் போற்றியது வியப்பன்று. இவ்வறத்தால் புதுமுகங்களைக் கண்டு முகமலர்ந்தும் புதுமொழிகள் கேட்டு இன்சொல் வளர்த்தும் பசித்துன்பம் போக்கி இன்புற்றும் நாட்டுச் செய்திகளைப் பெற்று அறிவு பெற்றும் வாழும்பேறு அக்காலத்தவர்க்கு இருந்தது. அதனால் வாழ்க்கைக்கு அடிப்படையான அன்பையும் அறிவையும் வளர்க்கும் வாயிலாக

விருந்தோம்பல் விளங்கியது. இதனால்தான் இவ்வறத்தைப் பிற்காலத்து நூல்களும் வழிவழியே போற்றியுரைக்கலாயின''[42] என்று விருந்தோம்பலுக்கான சூழல் நிலவும் பான்மையினையும் எடுத்துக்காட்டியிருக்கின்றார்.

***"நல்மனை நனிவிருந்து அயரும்***
***கைது இன்மையின் எய்தாம் ஆறே''[43]***

***"அல்லி லாயினும் விருந்துவரி னிதுக்கும்***
***முல்லை சான்ற கற்பின் மெல்லியல்''[44]***

***"உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்***
***அமிழ்தம் இயைவ தாயினும் இனிதுஎனத்***
***தமியர் உண்டலும் இலரே''[45]***

என்னும் சங்கச் சான்றுகள் பண்டை நாளில் விருந்துபசரிக்கும் அறமாகிய செயல் சிறந்திருந்தமையினை விளக்குகின்றன. பண்டை நாளில் வறியோர்களையும் ஆதவற்றவர்களையும் முதியோர்களையும் காக்கும் பொருட்டு அறச்சாலைகள் அமைக்கப்பட்டிருந்தமையினையும் அங்கு எப்போதும் பலருக்காக உணவு சமைக்கும் செயலும், பலர் உணவு உண்ணும் செயலும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தன என்பதை,

***"புகழ் நிலைஇய மொழிவளர***
***அறன் நிலைஇய அகனட்டில்***
***சோறு வாக்கிய கொழுங்கஞ்சி***
***யாறுபோலப் பரந்தொழுகி''[46]***

என்னும் பட்டினப்பாலை அடிகள் மெய்ப்பிக்கின்றன. விருந்து உபசரிக்கும் பண்புடன் பகுத்துண்ணும் வழக்கமும் பண்டை நாளில் நிலவியமையினை அறிய முடிகிறது.

வே. முத்துலக்குமி என்பார், ''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்த அறங்களுள் தலையாயதாகும். பாரோர் போற்றும் சிறந்த அறங்களுள்

ஒன்று பகுத்துண்ணுதல். அறநூலார் தொகுத்துரைத்த அறங்களுள் தலைமை சான்றதும் அதுவே. கிடைத்தற்கரிய பொருளாயினும் பிறர்க்களிக்காது தனித்துண்ணுதல் தகுதியுடைய செயலாகாது. இந்திரர்க்குரிய அமுதமே கிடைத்தாலும் இனிதென்று எண்ணிப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் தனித்துண்ணுதலைச் செய்திலர். நின்னயந் துறைநர்க்கும் என்று தொடங்கும் பெருஞ்சித்திரனாரின் பாடல் பொருளைப் பகுத்துண்டு ஓம்பும் திறத்தினை வெளிப்படுத்துகின்றது. வறுமையால் வாடிய புலவர் பெருமக்களும் தாம் பெற்ற பரிசிற் பொருளை ஓம்பாது உண்டு கூம்பாது வீசும் இயல்பினராக வாழ்ந்ததைக் கோவூர்கிழார் பாடல் அறிவிக்கின்றது. குமணனிடம் பெற்ற பரிசிற் பொருளை எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே என்ற பெருஞ்சித்திரனாரின் கூற்று பொருளைப் பகுத்துண்டு வாழும் பண்பாற்றலை வெளிப்படுத்துகின்றது''[47] என்று பண்டை மக்களின் பகுத்துண்ணும் பண்புகளைத் தெளிவாக்குகின்றது.

***"உண்டாயிற் பதங்கொடுத்***
***தில்லாயி னுடனுண்ணும்***
***இல்லோ ரொக்கற் றலைவன்''[48]***

***"செந்நீர்ப் பொதுவினைச் செம்மல் மூதூர்த்***
***தமதுசெய் வாழ்க்கையின் இனிய துண்டோ''[49]***

***"இவரே புலனும் துண்மார் புன்ன ணஞ்சித்***
***தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்''[50]***

என்னும் சான்றுகள் பண்டை நாளில் பகுத்துண்டு வாழ்ந்த பான்மையினை எடுத்துக் காட்டுகின்றன. இதனால் பண்டைய மக்கள் விருந்தோம்பும் பண்பிலும் தம்மிடம் இருக்கின்ற பொருள் சிறிதாயினும் அது பிறருக்குப் பயன்பட வேண்டும் என்னும் வாழ்ந்த தனிமனிதச் சிந்தனைகள் செயலாக்கம் பெற்றமையினை எடுத்துக் காட்டுகின்றது.

### 4.1.9. கைம்மை வாழ்வியல்

கணவனை இழந்த பெண்கள் தம்மளவில் ஒழுக்க நெறிவழி நின்று வாழ்பவர்களாகச் சங்க இலக்கியங்களால் அறியப்படுகின்றனர். வே. முத்துலக்குமி, "கணவனை இழந்த மகளிர் கைம்மை நோன்பு மேற்கொண்டனர். அவ்வாறு மேற்கொண்டு வாழ்ந்த மகளிர் உயவற் பெண்டிர் என்ற அழைக்கப்பட்டனர். அவர்கள் நெய்யில்லாத நீர்ச்சோறும் வெள்ளெள் சாந்தும், புளி சேர்த்துச் சமைக்கப் பெற்ற வேளைக் கீரையும் உணவாக உண்டனர். பரற்கல்லால் பரப்பப்பெற்ற படுக்கையில் துயில் கொண்டனர். பாசடைகு மிசைத்தலும், பனிநீர் மூழ்குதலும் கைம்மை மகளிர் மேற்கொள்வன. கூந்தலைக் கொய்து கொள்ளும் வழக்கமும் தொடி நீக்கும் வழக்கமும் பண்டு நிலவியது. இழை களைதலையும் கைம்மை மகளிர் நெறியாகக் கொண்டனர்"[51] என்று கைம்பெண்களின் வாழ்வியலை விளக்குகின்றார்.

மணமான பெண்கள் தன் கணவன் இறந்துவிட்டால் உலக வாழ்வை விரும்பாமல் அவனுடன் சேர்ந்து இறந்து தங்கள் வாழ்க்கையை முடித்துக் கொள்ளவே விரும்பினர் என்பதைப் பண்டைத்தமிழ் இலக்கியங்கள் விளக்குகின்றன. பூதப்பாண்டியன் மனைவி பெருங்கொப்பெண்டு தன் கணவன் இறந்தபின், கணவனுடன் தானும் சேர்ந்து இறக்க எண்ணியதையும் சான்றோர்களின் சொல் கெட்டு அதற்கு அவள் பதில் கூறுவதையும் புறப்பாடல் எடுத்துக் காட்டுகிறது.

> *"பல்சான்றீரே பல்சான்றீரே*
> *செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்*
> *பொல்லார் சூழ்ச்சிப் பல்சான்றீரே*
> *அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட*
> *கால்போழ் நல்விளர் நறுநெய் தீண்டாது*
> *அடைகிடைக் கிடந்த கைபிழி பிண்டம்*

*வெள்ளெள் சாந்தொடு புளிப்பெய்து அட்ட*
*வேளை வெந்தை வல்சி ஆகப்*
*பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்*
*உயவற் பெண்டிரேம் அல்லேம் மாதோ*
*பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்*
*நுமக்கு அரிது ஆகுகதில்ல: எமக்குஎம்*
*பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்பற*
*வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை*
*நள்ளிரும் பொய்கையும் தீயும் ஓரற்றே"*[52]

என்ற இப்பாடலில் கணவனை இழந்த பெண்கள் கைம்பெண் நோன்பு நோற்கும் வழக்கமும், அவர்களின் உணவுமுறையும் வழக்கங்களும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. தலைவன் தலைவி இருவருள் ஒருவர் மட்டும் ஒருவரை இழந்து ஒருவர் வாழ்வது இல்லை. தனித்து வாழ்ந்து உலகத்துன்பங்களை ஏற்பதை விடவும் இறப்பு மேலானது என்று நினைத்த தனிமனித மனப்பான்மையை அறிய முடிகிறது. பண்டைக் காலத்தில் உடன்கட்டை ஏறலும் கைம்பெண்கள் கைம்பெண் நோன்பு நோற்றதையும் இத்தகு பாடல்களால் அறியமுடிகிறது.

## 4.2. காவிதிமாக்கள்

காவிதிமாக்கள் மன்னனுக்குத் துணையாக இருந்து அவனது செயல்கள் இனிதாகுமாறு ஆலோசனை கூறி அவனை வழி நடத்துபவர்களாவர். மன்னன் இவர்களின் துணையுடன் தான் ஓர் அறக்கோட்பாட்டாளனாய்த் திகழ்ந்தமையினை அறிய முடிகிறது. காவிதிமாக்களை அமைச்சர்கள் என்று கூறும் வழக்கமும் உண்டு என்பதை இலக்கியங்கள் தெளிவுபடுத்துவதாக நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். மேலும் இதுகுறித்து,

*"ஆவுதி மண்ணி யவிர்துனை முடித்து*
*மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல*
*நன்றுங் தீதுவ கண்டாய்ந் தடக்கி*

*அன்பு மறனு மொழியாது காத்துப்*
*பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த*
*செம்மை சான்ற காவிதி மாக்களும்"*

என்று மதுரைக்காஞ்சி காவிதி மாக்களின் செயல் இன்னது என்று குறிப்பிடுகின்றது. அறநெறி வழுவாத ஆட்சியை மன்னன் நடத்தும் பொருட்டு, காவிதிமாக்கள் தன்னளவில் அறம் மிக்கவர்களாக விளங்கி அரசின் செயல் வகைக்கு மன்னனோடு உடன் இருந்து உதவியிருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது.

## 4.3. மன்னனுக்கு வேண்டிய அரசியல் குணங்கள்

நாடாளும் மன்னன் செயல்திறன் மிக்கவனாக இருந்தால்தான் தனக்குக்கீழ் உள்ள நாட்டைச் சிறப்பாக வழி நடத்த இயலும். பண்டைக் காலத்தில் தமிழகத்தில் அரசோச்சிய மன்னர்கள் பலர் தம்மளவில் அறக்கோட்பாட்டில் சிறந்தவர்களாகவும் தனிமனித அறத்தைச் செயல் அளவில் சீர்மையுடனும் கடைப்பிடித்தனர் என்பதை அறியச் சங்க இலக்கியங்கள் துணைபுரிகின்றன. பண்டைய புலவர்கள் மன்னனை நெருங்கி இருந்து அவனுடைய குணத்தைக் காணும் வாய்ப்பினைப் பெற்றிருந்த காரணத்தால் அவன் குணத்தைப் பாடல்களில் தெளிவாகப் பாடியிருக்கின்றனர். மன்னர்கள் தம் வீரத்தால் பகை நாட்டாருக்கு அச்சம் தருவதாகவும், தன் மக்களுக்கு இனிய குணமுடையோனாகவும், இரவலர்களுக்குக் கொடைப்பண்பில் சிறந்தவனாகவும் விளங்கிய தன்மையை அறிய முடிகிறது.

முரஞ்சியூர் முடிநாகனார் என்ற புலவர், தன் மன்னன் மிக்க வீரமுடனும் பொறுமைக் குணமுடனும் விளங்கிய சிறப்பினை,

*"மண்திணிந்த நிலனும்*
*நிலம் ஏந்திய விசும்பும்*

*விசும்பு தைவரு வளியும்*
*வளிந் தலைஇய தீயும்*
*தீமுரணிய நீரும் என்றாங்கு*
*ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்*
*போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியனது அகலமும்*
*வலியும் தெறலும் அளியும் உடையோய்''*[53]

என்னும் தன் புறப்பாடலடிகளின் மூலம் எடுத்துக் காட்டுகிறார். இப்பாடலடிகளால் சேரமான் பெருஞ்சோற்றுதியனின் தனியாள் ஆளுமைப்பண்பு வெளிப்படுகிறது. பொறுமையில் நிலம் போன்றும், சூழ்ச்சியில் வான் போன்றும், வலிமையில் காற்றைப் போன்றும், அழித்தலில் தீ போன்றும், கொடையில் நீர் போன்றும் ஐம்பூத இயற்கையை ஒத்து விளங்கினான் என்று குறிப்பிடுவது அவன் தன்னளவில் வளர்த்துக் கொண்ட தனிமனித அறக்கோட்பாட்டையும் அவன் அவற்றைச் செயல் தூய்மையினால் செய்துக்காட்டுவதையும் குறிப்பிடுகின்றது.

ஊன்பொதி பசுங்குடையார் என்னும் புலவர் சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியைப் பாடிய பாடலில் தன்னை வணங்கித் தன்வழி நிற்பவர்களைப் போற்றி ஆதரித்தல், பிறரைத் தூற்றுபவர்களின் மொழிகள் எத்தகையவாயினும் அவற்றைக் கேளாமல் இருத்தல், குற்றம் செய்தவரின் குற்றத்தைத் தீர ஆராய்ந்து தண்டித்தல், தன்னை அடைக்கலமாக வந்தடைந்தவர்களை ஆதரித்தல், வினை செயல் வகை ஆகிய பண்புகளை உடையவனாக விளங்கினான் என்று குறிப்பிடுகின்றார். மன்னனின் பெருமைக்குரிய செயல்திறமும் ஆளுமைப்பண்பும் பாடலில்,

*"வழிபடு வேரை வல்லறி தீயே*
*பிறர்வழி கூறுவோர் மொழிதே றலையே*
*நீமெய் கண்ட தீமை காணின்*
*ஒப்பநாடி அத்தக ஒறுத்தி*
*வந்து, அடிபொருந்தி முந்தை நிற்பின்*

*தண்டமும் தணிதி பண்டையிற் பெரிதே*
*அமிழ்து அட்டு ஆனாக் கமழ்குய் அடிசில்*
*வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை. . .''*[54]

என்றவாறு அறியக் கிடக்கிறது.

சூரியன் போன்ற ஆண்மைக் குணமும் நிலவு போன்று குளிர்ந்த குணமும் கொண்டு பாண்டிய மன்னன் இலவந்திகை பள்ளித்துஞ்சிய நன்மாறன் திகழ்ந்தமையினை,

*''ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்*
*திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்''*[55]

என்னும் அடிகள் விளக்குகின்றன. இதனால் மன்னன் தன்வலிமையால் நாடுகாவலையும், தம் இனிய குணத்தால் நாட்டு மக்களுக்கு நல்ல மன்னனாகவும் திகழ்ந்தான் என்பது பெறப்படுகிறது.

நாடாளும் மன்னர்கள் தாம் கொண்ட அதிகாரத்தால் நாட்டு மக்களுக்கு நன்மை செய்வதிலும் தம்மை அடைந்து அடைக்கலமாக இருப்பவர்களைக் காப்பதையும் எதிரிகளை ஒடுக்குவதையும் தங்கள் சீரிய பண்களாகக் கொண்டதுடன் நட்பைப் போற்றுவதில் சிறந்து விளங்கினர் என்பதை வே. முத்துலக்குமி, ''தன்னுடன் நட்பு செய்து கொள்வோரையும் அவர் குடிகளையும் உயர்த்துதலை மன்னர்தம் கடமையாகக் கொண்டனர். அதே நேரத்தில் தம்முடன் பகைத்தவரை அடியோடு அழித்தலையும் மேற்கொண்டனர். சங்ககால மன்னர் இவ்விருவகை முரண்பட்ட ஆற்றல்களையும் உடையவர்களாக விளங்கிய திறத்தை ஒருசேர இணைத்துப் பாடியுள்ளனர் புலவர் பெருமக்கள்''[56] என்று மன்னர்களின் குணத்தை வெளிப்படுத்துகிறார்.

அதியமான் தன்னைச் சார்ந்தவர்களுக்கு இனியவனாகவும் சாராதவர்களுக்கு இன்னாதவனாகவும் இருக்கின்ற தன்மையை,

“நீர்த்துறையில் குளிக்கும் பெரிய களிற்று யானை தன் நீண்ட வெண்ணிறமான தந்தத்தைக் கழுவுகின்ற சிறுவர்களுக்கு இனிமை உடையதாகவும், மதம் கொண்ட நிலையில் கோபம் கொண்டு எதிரி நாட்டினை அழிக்கும் ஆற்றல் கொண்டதாகவும் இருப்பதைப் போல இம்மன்னனும் விளங்கும் பண்புடையவன்”[57] என்று குறிப்பிடுவர். இதனால் அதியமானின் இனிமைக் குணமும் கோபக்குணமும் ஒருசேர வெளிப்படுகிறது. அவன் தன்னைச் சாராதவர்களை அழித்தொழிக்கும் தன்மையன் என்பதையும், தன்னைச் சேர்ந்தவர்களை ஆதரிக்கும் அறக்கோட்பாட்டாளன் என்பதும் தெரிகிறது.

பாண்டியன் நெடுஞ்செழியன் நட்பு என்னும் தனிமனித அறத்தைச் செயல்படுத்துவதில் சிறந்து விளங்கினான். அதேவேளையில் பகைவரை அழிப்பதையும் தன் நோக்கமாகக் கொண்டு விளங்கினான் என்று பேரெயின் முறுவலார் குறிப்பிடுகின்றார். இதனை,

***“செற்றோரை வழி தடித்தனன்***
***நட்டோரை உயர்வு கூறினன்”***[58]

என்னும் புறப்பாடலடிகள் விளக்குகின்றன. புலவர்கள், மன்னர்களின் பெருந்தக்க குணங்களை எடுத்துக் கொண்டு தனியாள் ஒருவன் எவ்வாறு சிறந்த சமுதாயப் பங்களிப்பை நல்க முடியும் என்பதையும்; சிறந்த ஆட்சித்திறமுள்ள மன்னனால் அது எளிதாக நிகழும் என்பதையும் எடுத்துக்காட்டியுள்ளனர்.

## 4.5. அறம் போற்றல்

நாடாளும் மன்னர்கள் அறக்கோட்பாட்டைப் போற்ற வேண்டும் என்பதை இரா. அனுராதா, “சங்க இலக்கியங்கள் கூறும் அரசியல் கருத்துகள் புற இலக்கியங்களேயன்றி அக இலக்கியங்களிலும் நிரம்பியிருக்கின்றன. அரசியல் – நாட்டை ஆளும் அரசனின் ஆளுமை பற்றிப் படிக்கும் ஒன்றாக அரசியலைக் கொள்ளலாம். நாடு சிறப்புற்றிருப்பதை அரசனின் ஆட்சிச் சிறப்புதான்

உணர்த்தும. அதனால் தான் பண்டைய புலவர்கள் அரசனது ஆட்சிச்சிறப்பின் பெருமைகளைக் கூறிப் பாடல்கள் பல புனைந்துள்ளனர்''[59] என்று குறிப்பிடுவர்.

சாமி. சிதம்பரனார், அரசியலின் முக்கியத்துவம் கருதி ''அரசியலை எவரும் அசட்டை செய்துவிட முடியாது. அதை மறந்துவிடவும் முடியாது. நாட்டின் உயிர் ஆட்சிதான். நாட்டுக்கு நலம் புரியும் திறமுள்ள அரசியல் வேண்டும். ஒழுங்கான ஆட்சியுள்ள நாடு தான் உயர்ந்து நிற்கும். நல்ல ஆட்சியற்ற நாட்டிலே எந்த நன்மையும் நிலவாது''[60] என்பர். இதனால் அறமுறைப்பட்ட ஆட்சியே நாட்டுக்கு நன்மை விளைவிக்கும் என்பது விளங்கும். மன்னர்கள் அறக்கோட்பாடுகளைப் போற்றி அரசியல் நடத்த அந்தணர்களின் நெறிவழி நிற்றல் நலம் என்று சங்கப்பாக்கள் பலவும் வலியுறுத்துகின்றன. பல்யானைச் செல்கெழு குட்டுவன் அறவழி நின்று அந்தணரின் நெறியைப் பின்பற்றி நல்லாட்சி நடத்தினான் என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது.

இதனை, ''அந்தணர்கள் உலகின் இயல்பையும் உலகப்பொருள்களின் இயல்பையும் உணர்த்தும் தன்மையராவர். அத்தகைய குணமுடைய அந்தணர்களின் அறநெறி செல்லும் வழியில் மன்னர்கள் தங்களின் அரசை அமைத்துக் கொண்டனர். பல்யானைச் செல்கெழு குட்டுவர் வேதம் ஓதுதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறுதொழில்களைத் திறம்படச் செய்யும் அந்தணர்களின் சொல் கேட்டு உலகம் தன் அரசு நெறி நிற்குமாறு ஆட்சி புரிந்தான்''[61] என்னும் செய்தியால் அறியலாம்.

பண்டை நாளில் அறக்கோட்பாட்டுடன் வாழ்ந்த அந்தணர்கள் பெரிதும் மதிப்பு மிக்கவர்களாக இருந்தனர் மன்னர்கள். எத்தகை வீரமுடையவர்களாக இருப்பினும் அந்தணர்களுக்குப் பணிந்து அவர்களின் சொற்களை ஏற்பவர்களாக இருந்தனர். கபிலர் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனை, ''அந்தணர்களைத் தவிரப் பிறர்க்குப் பணியும் இயல்பில்லாதவன்''[62] என்று

புகழ்ந்துரைக்கின்றார். நாடு நலம் பெறவும் வளம் பெறவும் அந்தணர்கள் வேள்விகள் பலவற்றை மேற்கொண்டனர். அந்தணர்களின் வழிநின்று அறம் மேற்கொண்ட மன்னர்கள் அவர்களிடம் இருந்து நல்லறங்களை கற்றுக் கொண்டு தம் அறக்கோட்பாட்டில் மேம்பாடடைந்தவர்களாக விளங்கினர்.

### 4.5.1. *கொடைப்பண்பு*

தனிமனித அறங்களுள் கொடைப்பண்பு குறிப்பிடத்தக்கதாகும். பண்டை நாளில் மன்னர்களின் புகழ், போராலும் கொடையாலும் சிறந்திருந்தமையைச் சங்கப் பாக்கள் பலவும் எடுத்துக்காட்டுகின்றன. மன்னர்கள் கொடை வழங்குவதை அறச்செயலாகக் கருதியமையினால்தான் வறியவர்களுக்கும் இரவலர்களுக்கும் பொருட்களை வழங்கினர். பொருளைப் பாதுகாத்து வைக்காமல் அதனை அனைவருக்கும் பகிர்ந்தளிக்கும் உயரிய குணம் பண்டைய மன்னர்களின் தனிமனித அறம் செயல் வகைகளை உறுதிப்படுத்துகிறது. தன்னை நாடிவந்தவர்களுக்கெல்லாம் பொன்னும் பொருளும் உணவும் கொடுத்து அவர்களின் வறுமையைத் தீர்ப்பதைப் பண்டைய மன்னர்கள் தங்கள் நோக்கமாகக் கொண்டிருந்தனர்.

எத்தகைய உயரிய பொருள் பெறினும் அதனைப் பிறரும் பெறவேண்டும் என்னும் உயரிய உள்ளம் மன்னர்களிடம் இருந்தது.

***"இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்***
***தருகென விழையாத் தாவி னெஞ்சத்துப்***
***பகுத்தூண் தொகுத்த வாண்மைப்***
***பிறர்க்கென வாழ்தி நீயாகன் மாறே"[63]***

இப்பாடலடிகளில் இனிய பொருள் பெற்றபோது தான் மட்டும தனியாக உண்ண விரும்பாமல் பிறருக்கும் பகிர்ந்தளித்த உயரிய குணம் அறியக் கிடக்கிறது. பெரும் பொருள் படைத்த மன்னர்கள் பொருளையும், புகழையும்

பெரிதாக எண்ணாதவர்களாக இருந்தனர். கொடை வழங்கி உலக உயிர்களைக் காப்பதையே தம்முடைய உயரிய நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை,

*“ஈத்த திரங்கா னீத்தொறு மகிழான்*
*ஈத்தொறு மாவள்ளியன்”*[64]

என்னும் அடிகள் விளக்கும். பெரும்பாணாற்றுப்படை மன்னன் பொன் தாமரை மலர்களையும், குதிரைகள் பூட்டிய தேரையும் தொண்டைமான் இளந்திரையன் இரவலர்களுக்கு வழங்கினான் எனக் குறிப்பிடுகின்றது.

*“மங்குள் வானத்துத் திங்கள் ஏய்க்கும்*
*ஆடு வண்டு இமிரா அழல் அவிர் தாமரை*
*நீடு இடும் பத்தை பொலியச் சூட்டி*
*உரவுக் கடல் முகந்த பருது வானத்துப்*
*பகற்பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு*
*புனைஇடும் கதுப்பகம் பொலிய, பொன்னின்*
*தொடைஅமை மாலை விறலியர் மலைய*
*நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல்*
*வளைகண் டன்ன வால்களைப் புரவி*
*துணைபுணர் தொழில நால்கு உடன்பூட்டி*
*அரித்தேர் நல்கியும் அமையான்”*[65]

மேலும், பண்டை நாளில் கடையெழு வள்ளல்களும் தாம் யாருக்கு என்ன கொடை வழங்குகிறோம் என்பதைக் கூட அறியாமல் கொடைமடம்பட்டுக் கொடுப்பதை மட்டுமே தம்முடைய உயரிய குணமாகக் கொண்டு விளங்கினர் என்று சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

இதனை, “பேகன் குளிரின் மிகுதியால் வருத்தம் கொண்டு நடுங்கிய மயிலுக்குப் போர்வை வழங்கினான்.”[66] “பாரி தரையில் படர்வதற்கு இடமின்றித் தவித்த முல்லைக்கொடி வளரும் பொருட்டுத் தான் வந்த தேரையே வழங்கிய சிறப்புக்குரியவன்.”[67] “காரி, தான் குதிரைகளையும், காடுகளையும் தன்னை

நாடிவந்த இரவலர்களுக்கு வழங்கினான்.''[68] ''ஆய் என்னும் வள்ளல் நாகம் வழங்கிய ஆடையினை இறைவனுக்களித்தான்.''[68] ''அதியமான் பெறுதற்கு அரிதான் நெல்லிக்கனிகளைப் பெற்ற காலத்துத் தான் உண்ணாமல் ஔவைக்குக் கொடுத்தான்.''[70] ''இரவலர்கள் வேண்டும் அளவு வேண்டிய பொருளை நள்ளி வழங்கினான்.''[71] ''ஓரி என்னும் வள்ளல் மலைகளை உடைய நாட்டை இரவலர்களுக்கு வழங்கினான்''[72] என்னும் கருத்துக்களால் அறியலாம். பண்டைய மன்னர்கள் தம்மிடம் இருந்த செல்வத்தையும் திறையாக வரும் பொருள்களையும் மக்களுக்கு வழங்கிக் கொடை வள்ளல்களாக விளங்கியதுடன் அறம் சிறந்து விளங்கப் பாடுபட்டுள்ளனர்.

### 4.5.2. நாடு காவலும் மக்களைப் பேணலும்

நாட்டைக் காப்பதும், குடிகளைப் பேணிக் காப்பதும் மன்னனின் தலையாய செயல்களாக எண்ணத்தக்கனவாகும். ''சேர மன்னன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் உணவுப்பொருள்களை விளைவித்துக் கொடுக்கும் வேளாளர்களையும் பல பொருள்களையும் விற்பனை செய்யும் வணிகர்களையும் காப்பதைத் தன் நோக்கமாகக் கொண்டு விளங்கினான்.''[73] என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. இடைக்காடனார்,

> ***"புலிபுறங் காக்கும் குருளை போல***
> ***மெலிவில் செங்கோல் நீபுறங் காப்ப"***[74]

என்று, புலி தன் குட்டிகளைக் காப்பது போன்று நீ உன் நாட்டைக் காத்து வருகின்றாய் என்று கிள்ளி வளவனைப் பாராட்டுகின்றார். நாடாளும் மன்னன் மனத்திட்பமுடன் இருப்பதும் எதிர்வரும் சிக்கல்களைக் கண்டு அஞ்சாதவனாக இருப்பதும் அவசியம். அத்தகைய குணம் உள்ளவனுக்கு பெரும் பாரமும் எளிமையாகவே தோன்றும் என்று புறநானூறு குறிப்பிடுகிறது. இதனை,

***“மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்***
***பால்தர வந்த பழவிறழ் தாயம்***
***எய்தினம் ஆயின் எய்தினம் சிறப்பெனக்***
***குடிபுரவு இரக்கும் கூரில் ஆண்மைச்***
***சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே***
***மண்டமர்ப் பரிக்கும் மதனுடை நோன்தாள்***
***விழுமியோன் பெருகுவன் ஆயின் தாழ்நீர்***
***அறுகய மருங்கின் சிறுகோல் வெண்கிடை***
***என்றூழ் வாடுவறல் போல நன்றும்***
***நொய்தால் அம்ம தானேமையற்று***
***விசும்புஉற ஓங்கிய வெண்குடை***
***முரசுகெழு வேந்தர் அரசுகெழு திருவே”[75]***

என்னும் பாடலால் அறியலாம்.

புலவர்கள் மன்னனிடம் பொருள் பெற்று வாழ்வதை மட்டுமே தங்களின் நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. அவன் தவறு செய்தபோது அவற்றைச் சுட்டிக்காட்டுவதையும், அறம் போதிப்பதையும் தங்களின் தலையாய நோக்கமாகக் கொண்டிருந்தனர். புலவர்கள் கூறிய அறத்தால் ஏற்கனவே அறக்கோட்பாட்டாளர்களாக இருந்து அறம் செய்த மன்னர்கள் தங்கள் பொறுப்பை மேலும் உணர்ந்து தம்மளவில் அறக்கோட்பாடுகளைச் செயல்படுத்துபவர்களாக விளங்கினர். “பாண்டிய நாடு நீர் இன்றி வளமின்றிக் காணப்பட்ட போது குடபுலவியனார் நீர்வளம் பெருகினால்தான் நாடு வளம் பெறும் என்பதை உணர்த்தி, நாட்டில் நீர்வளம் பெருகுமாறு நீர் நிலைகளை அமைத்தவர்களே எல்லாச் செல்வங்களையும் பெற்றவர்களாவர்”[76] என்று குறிப்பிடுகின்றார். இதனால் நாட்டைக் காத்தல், மக்களைக் காத்தல், மக்களின் வாழ்வாதாரங்களைப் பெருக்கல் என்னும் நிலைகளில் எல்லாம் மன்னன் பெரியோர்களின் ஆலோசனைகளைப் பெற்று, தான் தீர ஆராய்ந்து நன்முடிவைச் செயல்படுத்தி நாட்டைக் காக்க வேண்டும் என்பது பெறப்படும்.

### 4.5.3. வரி வசூல் செய்தல்

நாடு நலம் பெறவும் திட்டங்களை நிறைவேற்றவும் பொருள் தேவை. அரசாட்சிக்குத் தேவையான பொருள்களைப் பெறுவதில் மன்னனுக்கு வரி முக்கியப் பங்காற்றுகிறது. ஆறில் ஒரு பகுதியை வரியாகப் பெற வேண்டும் என்பது நியதி. மக்களிடம் வரி வசூலித்தலில் மன்னன் அறக்கோட்பாட்டுடன் திகழ வேண்டும் என்பதைப் பண்டைய இலக்கியங்கள் கூறியிருக்கின்றன.

வே. முத்துலக்குமி என்பார் இதுகுறித்து, "உல்குவரி என்ற சுங்க வரியும் அரசு வருவாயுள் ஒன்றாக இருந்தது. ஏற்றுமதிப் பண்டங்களுக்கும் இறக்குமதிப் பண்டங்களுக்கும் விதிக்கப்படும் வரியே உல்கு என்பதாகும். இத்தகைய வரியே அரசாங்கத்தின் முக்கிய வருவாயாக இருந்தது. சோழ நாட்டில் சுங்கச் சாவடிகள் பல இருந்தன. அச்சுங்கச் சாவடிகளில் சுங்கக் காவலர் பண்டங்களுக்குச் சுங்கவரி விதித்தனர். சூரியனுடைய தேரிலே பூட்டப்பெற்ற குதிரைகள் போல இடையறாது செயல்பட்டனர். அவர்கள் பண்டங்களை நெஞ்சாலே மதித்து ஆராய்ந்த பின்னரே அவற்றிற்கு வரி விதித்தனர்"[77] என்று பண்டை நாளில் மன்னனின் அரசு செயல் வகைக்கு வரிப்பொருள் உதவியமைக்கான சான்றுகளை பாடல்களின்வழி அறியமுடிகிறது. அறமுறை மீறி மக்களிடம் வரிபெற்ற மன்னன் புலவர்களின் கண்டனத்துக்கு உள்ளாயினமையையும் அறிய முடிகிறது. பாண்டியன் அறிவுடை நம்பி மக்களை வருத்தி வரி வாங்கிய காலத்தில் பிசிராந்தையார் அளவறிந்து வரி வாங்கினால் நாடும் நன்றாக இருக்கும் நீயும் நலம்பெறுவாய். இன்றேல் யானை புக்க புலம் போலக் கெட்டுவிடும் என்று அறிவுரை கூறிப் பாண்டிய மன்னனைத் திருத்தினார் என்பதையும் பார்க்க முடிகிறது.

### 4.5.4. போரில் செயல்தூய்மை

சங்ககாலம் காதலும் வீரமும் போற்றப்பட்ட காலமாக விளங்கியது. பண்டைய மன்னர்கள் போரை விரும்பினர். உரிமை, புகழ், ஆசை, நாட்டின் எல்லையை விரிவுபடுத்துதல், குடிமக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமை, மான உணர்வு, செல்வப் பெருக்கம், மகள் கொடை மறுத்தல் என்பனவே பண்டைக் காலத்தில் போர்கள் நடைபெறக் காரணங்களாக விளங்கின. பண்டைக் காலத்தில் நிகழ்ந்த போர்களுக்கான காரணங்களை அறிஞர்கள் பலரும் கூறியுள்ளனர்.

“அரசர் போர், ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என்னும் ஆறுவகைக் காரணத்தாற் பிறக்கும்”[78] என்று நா. தேவநேயன் குறிப்பிடுகின்றார்.

மேலும் என். சுப்பிரமணியன் என்பார் இதுகுறித்து, “டார்வின் போன்ற கூர்தலறக் கோட்பாட்டினர் போரானது, தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் உணர்வு, தகுதியுடையவை நிலை பெறுதல் ஆகிய இரண்டு காரணங்களின் அடிப்படையில் நிகழும் என்பர். சிக்மண்ட் பிராய்டு போன்ற உளவியலார் தன்னைத் தானே காத்துக் கொள்ள வேண்டும் என்ற மனஇயல்பே போருக்குக் காரணம் எனக் கூறுவர்”[79] என்று குறிப்பிடுகின்றார்.

“பண்டைத் தமிழகத்தில் மூவேந்தர்களிடையே வழிவழியாக வந்த பகைமையுணர்வு காரணமாக, அவர்களிடையே போர்கள் நிகழ்ந்தன. நாடுகளுக்கிடையே உள்ள எல்லைகள் சரியாக வரையறுக்கப்படாமையால் அவை தொடர்பாக எல்லைப் போர்களும் தோன்றின. தத்தம் குடிப்பெருமை நிலைநாட்டிட விரும்பியும் ஒருவர்க்கொருவர் மாறுபாடு கொண்டும் போரிட்டனர்”[80] என்னும் கூற்றின்வழி வே. முத்துலக்குமி என்பார் போருக்கு அடிப்படையாகப் பகைமை உணர்வே காரணம் என்பதை எடுத்துக்காட்டுகிறார்.

பண்டைச் சமுதாயத்தில் தமிழ் மக்கள் வீரப் பண்பினைக் கொண்டிருந்தனர். வீரத்தைக் குறிக்க ஐம்படைத் தாலி அணிவித்த வழக்கத்தை இலக்கியங்களின் வாயிலாக அறிய முடிகிறது. போரில் இறந்தவர்களே சுவர்க்கம் புகுவர் என்னும் நம்பிக்கை மக்கள் மனத்தில் ஆழமாக வேரோடியிருந்தது. இதனை,

***"முன்சமத் தேமுதரும் வன்க ணாயர்***
***தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க***
***உயர்நிலை யுலக மெய்தினர் பலர்பட***
***நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை"[81]***

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. பண்டை நாளில் போர்கள் எவ்வளவு முக்கியத்துவம் உடையனவாகக் கருதப்பட்டனவோ, அவ்வாறே போரில் அறச்செயல்களும் கடைப்பிடிக்கப்பட்டன. சமமான வலிமை உடையவர்களுடன் மட்டுமே போர்புரிதல், புறமுதுகிட்டு ஓடுபவர்களுடன் போர் செய்யாமை, விலங்குகளின் மீது படைக்கருவிகளை எறியாமை, போருக்கான காலம் தேர்ந்து போர் புரிதல், சூரியன் மறைவிற்குப் பின்பு போர் புரியாமை முதலிய அறச்செயல்கள் மேற்கொள்ளப்பட்டன. பண்டைய போர் முறையில் அறச்செயல்கள் கடைப்பிடிக்கப்பட்டமைக்கு,

***"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்***
***பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்***
***தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்***
***பெண்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்***
***எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென***
***அறத்தாறிதுவென நுவலும் பூட்கை மறத்தின்***
***கொல்களிற்று மீமிசை கொடிவிசும்பு நிழற்றும்***
***எங்கோ வாழிய குடுமி தங்கோச்***
***செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த***

*முந்நீர் விழவின் நெடியோன்*

*நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"*[82]

என்னும் பாடல் சான்றாகிறது. பகை நாட்டின் மீது படையெடுத்துச் செல்வதற்கு முன்பு அந்த நாட்டிலுள்ள பசுக்கள், அந்தணர்கள், பெண்கள், நோயுற்றவர்கள், குழந்தைகளைப் பெறாதவர்கள் ஆகியோர்களுக்குப் போர் நிகழும் செய்தியை முறைப்படி அறிவித்து அவர்களைக் காக்கும் பெருந்தக்க செயல் பண்டைப் போர்முறையில் இருந்தது என்பதை மேற்கண்ட பாடல் வரிகள் எடுத்துக் காட்டியிருக்கின்றன.

பண்டை நாளில் வீரத்தில் ஒத்தவருடன் போர் புரிவதே பெருமையாகக் கொள்ளப்பட்டது. பகைவர்கள் பழமொழி கூறிய அன்று வஞ்சினம் கூறலும் வழக்கில் இருந்தது. இதனை,

*"நகுதக் கனரே நாடுமிக் கூறுநர்*
*இளைய இரட்டும் பாவடிப் பணைத்தாள்*
*நெடுநல் யானையும் தேரும் மாவும்*
*படையமை மறவரும் உடையம் யாம்என்று*
*உறுதுப்பு அஞ்சாது உடல் சினம் செருக்கிச்*
*சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்ககப் படேன்என் ஆயின் பொருந்திய*
*என்நிழல் வாழ்நர் சென்னிழல் காணாது*
*கொடியான்னும் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்*
*குடிபழி தூற்றும் கோலேன் ஆடுக*
*ஓங்கிய் சிறப்பின் உயர்ந்து கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவன் ஆக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைகவென் நிலவரை*
*புரப்போர் புன்கண் கூற*
*இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே"*[83]

என்னும் பாடல் உணர்த்தும் பாடலில் தன்னை வலிமை இல்லாதவன், படை பலம் அற்றவன், இளையவன் என்று கூறிப் படை எடுத்துவரும் பகைவர்களை வெல்வேன் என்று மன்னன் வஞ்சினம் கூறுவதனால் அறியலாம்.

பண்டைச் சமுதாய நிலையில் போர்கள் நிறைந்திருந்தாலும் அறநெறிப்பட்ட மன்னர்களின் தூய்மையான அறக்கோட்பாடு போரினால் நன்மைகள் நடைபெறவும் வழிவகுத்தது. போர்க்களத்தில் ஆயுதங்களைப் போட்டுவிட்டுப் புறமுதுகிட்டு ஓடுபவரிடம் போர் செய்யக் கூடாது என்னும் அறம் பண்டைக் காலத்தில் நிலவியது. இதனை,

***"நற்போர் ஓடா வல்லில்"***[84]

என்னும் தொடர் உணர்த்தும். போரில் இறந்தாலும் விழுப்புண் பட்டு இறப்பது பெருமைக்குரியதாகவும் புறப்புண் பெறுதல் இழிவென்றும் கொள்ளப்பட்டது.

***"ஒடுங்காத் தெவ்வ ருக்கறக் கடைஇப்***
***புறக்கொடை பெறியார்நின் மரப்படை கொள்ளுநர்"***[85]

என்னும் அடிகளால் புறமுதுகிட்டு ஓடுபவர்கள் மேல் பண்டைப் போர்முறையில் ஆயுதம் எறிவதில்லை என்னும் வழக்காறு தெளிவாகிறது. அவ்வாறானது நிகழின் அது அறமல்லாச் செயல் என்று கருதப்பட்டது. வீரம் உள்ளவர்கள் வீரம் இல்லாதவர்களிடமும், வயது முதிர்ந்தவர்கள் இளைஞர்கள் மேலும் படைக் கருவிகளை எய்தல் கூடாது என்னும் வழக்கம் கடைப்பிடிக்கப்பட்டது.

***"கடாஅ யானைக் கழற்காற் பேகன்***
***கொடைமடம் படுத லல்லது***
***படைமடம் படான்பிறர் படைமயக் குறினே"***[86]

என்னும் பாடலடிகள் மேற்கண்ட கருத்துக்கு அறன்செய்யும். பண்டை நாளில் போரிடுவதற்கு உரிய காலம் வகுக்கப்பட்டிருந்தது. கார்காலம், குளிர்காலம், முன்பனிக் காலம், பின்பனிக் காலம், இளவேனிற்காலம், முதுவேனிற்காலம்

என்னும் ஆறு பொழுதுகளில் வேனிற்காலமும் கூதிர் காலமும் போருக்குரிய காலமாகக் கொள்ளப்பட்டன. பண்டைய இலக்கியங்களுள் நெடுநல்வாடை கூதிர்ப் பாசறையிலும், முல்லைப்பாட்டு வேனில் பாசறையிலும் படைக்கப்பட்ட இலக்கியங்களாகும். தொல்காப்பியர்,

***"கூதிர் வேனில் என்றிரு பாசறைக்***
***காதலின் ஒன்றிக் கண்ணிய வகையினும்"***[87]

என்று இதனைக் குறிப்பிடுவார். இக்காலப்போர்முறை போன்று வரன்முறை இன்றி அக்காலப் போர்முறை அமையவில்லை. போர் நிகழும் காலம் பகல்காலமாக மட்டுமே இருந்தது. சூரியன் மறைந்தபின் போரிடும் வழக்கம் அன்று நிகழவில்லை. இதனை,

***"வெம்போர்ச் செழியனும் வந்தன னெதீர்ந்த***
***வம்ப மன்னரோ பலரே***
***எஞ்சுவர் கொல்லோ பகறவச் சிறிதே"***[88]

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

மன்னர்களின் இடையே போருக்கான சூழல் உருவானபோது புலவர்கள் அவ்விருவரின் இடையே தூதுசென்று தான் கொண்ட மனிதநேயத்தால் அறத்தைச் செயலாக்கிப் போரை நிறுத்தி நாட்டை அழிவில் இருந்து காக்கும் பணியினை மேற்கொண்டனர். அதியமானிடம் இருந்து தொண்டைமானிடம் தூது சென்ற ஔவையார் இருவரிடமும் நிகழ இருந்த போரைத் தன் அறிவினால் தடுத்து நிறுத்தினார். ஔவையாரின் நயமான பேச்சு அங்கு ஓர் அறமாகச் செயல்பட்டுப் போரை நிறுத்துகின்றது.

ஒரு குடியில் பிறந்த மன்னர்கள் போருக்கு நின்ற நிலையில் கோவூர்க்கிழார் தன் அறக்கோட்பாட்டால் இருவருக்கும் அறம் உணர்த்தி நீங்கள் போரிட்டால் தோற்பது உம்குடியே. அது பிறர் எள்ளக் காரணமாகிவிடும் என்று

அறிவுரை கூறுகிறார். அதன் காரணமாக, தம்முள் எழுந்த பூசலை நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் போர் செய்யும் எண்ணத்தைக் கைவிடுகின்றனர். கோப்பெருஞ்சோழனுடன் அவன் மக்கள் அரசுரிமைக்காகப் போர்புரிய முற்பட்ட நிலையில் புல்லாற்றூர் எயிற்றியனார் மக்களுடன் போர் செய்வது பழிவர வழியாகும் என்று கோப்பெருஞ்சோழனை அறவழிப்படுத்துகின்றார்.

### 4.5.5. *மன்னர்களின் சிந்தனை*

நாடாளும் மன்னர்கள் போர் நடத்திச் செல்லும்போது பகை நாடுகளை அழித்துத் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு வருவதை நோக்கமாகக் கொண்டனர். அதனால் போரில் நாடுகள் பாழ்படுத்தப்படுவதும் நகரங்கள் அழிக்கப்படுவதும் விளை வயல்கள் தீயிட்டுக் கொளுத்தப்படுவதும் நிகழ்ந்தது. வளமான நிலங்கள் பாழாக்கப்பட்டு மீண்டும் அவ்விடங்கள் பழைய நிலைக்கு மீள இயலாதவாறு அழிக்கப்பட்டன. அந்த அழிவும் அறத்தின் பாற்பட்டதாகவே பார்க்கப்பட்டது. இதனை மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை முதலான சங்கப் பனுவல்களால் அறியலாம்.

வே. முத்துலக்குமி, “அழிவு, போரின் இறுதி நிலையாக இருந்தது. பகைவர்தம் படைபலத்தைப் பெருக்கி, மீண்டும் தம்மைத் தாக்காது காத்துக் கொள்ளும் நோக்கமே இதற்குக் காரணம் ஆகும். பொருளாதார நிலையில் அவர்களின் உயர்ச்சியைத் தடுத்தற்கும் மீண்டும் தம் ஆற்றலைப் பெருக்கிக் கொள்ளாதவாறு தகைத்தற்கும் இத்தகைய அழிவுகள் மேற்கொள்ளப்பட்டன. அரசர்தம் பாதுகாப்பு ஆற்றலைப் பெருக்குவதுடன் பகைவரின் பாதுகாப்பு ஆற்றலைச் சிதைப்பதும் பேரறங்களாக மேற்கொள்ளப்பட்டன”[80] என்று பண்டைய போர் முறையில் அழிவு அறமாக நிகழ்ந்தமை எடுத்துக் காட்டப்படுகிறது. அழிவின் பின்பு பகை நாட்டில் தன் ஆட்சியை நிலைநாட்டிய

மன்னர்கள் நகரம், கோயில், விளைவயல்கள், நீர்நிலைகள் முதலானவற்றை நிர்மானித்து மக்களின் வாழ்க்கை மீண்டும் வளமடைய வித்திட்டனர்.

தனிமனித அறம் செயல் தூய்மையில் பல்வேறு களங்களைக் கொண்டிருக்கிறது. மனத்தில் எழும் சிந்தனை நற்சிந்தனையாக அமைந்து, அதனைச் செயல்படுத்தும் களம் செம்மையாக அமையும்போது விளைவுகள் சிறப்பாக இருக்கும் என்பதைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. மன்னனாயினும், புலவனாயினும், குடிமக்களாயினும் தனிமனித, சமுதாய, குடும்ப நிலைகளில் எண்ணம், சொல் இரண்டிலும் சிறந்திருப்பின் செயல்கள் நன்கு அமையும் என்பதைப் பண்டைய இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.

## 4.6. தொகுப்புரை

பண்டைய இலக்கியங்கள் தனிமனிதச் செயல்பாடுகள் அறக்கோட்பாட்டின் ஊற்றுக்கண்ணாக விளங்கியமையினை எடுத்துக்காட்டுகின்றன. காதல், வீரம் இரண்டும் மக்களின் இரு கண்ணெனப் போற்றப்பட்ட சமுதாயத்தில் தலைவன், தலைவி இருவரின் இடையே நடைபெற்ற களவு, கற்பு வாழ்க்கை தனிமனித அறச்செயல்பாட்டின் தூய்மைக்கு வழிகாட்டியிருக்கிறது. வரைவு கடாதல் தோழியின் மனம் அறச்செயல்களைச் சிந்தித்து தலைவனை வழிப்படுத்தித் தலைவியுடன் கற்பு வாழ்வில் சேர்க்கும் தன்மையதாகத் திகழ்கிறது.

தலைவன், தலைவியின் உடன்போக்கு தோழியின் துணையுடன் நிகழ்வது கற்பு போற்றப்பட வேண்டும், காக்கப்பட வேண்டும் என்னும் தனிமனிதச் சிந்தனையின் அறச்செயல் வடிவமாகிறது. தலைவன் தலைவியின் காதலை ஒன்றுசேர்க்கும் வாயிலாய் அறத்தொடு நிற்றல் தனிமனித முயற்சியின் அறமாகிறது. இல்லற வாழ்வில் அன்பே முதன்மை என்றும் அன்புடையவரைப் பிரியாமல் இருத்தலே அறம் என நம்பப்படுகிறது. விருந்தோம்பும் பண்பு அனைவரையும் போற்றி உபசரிக்க நினைக்கும் உளப்பாங்கின் வெளிப்பாட்டைத் தெளிவாக்குகிறது.

மன்னன் ஆட்சி நேரியதாக அமைய அறக்கோட்பாடு உடையவர்களின் அறிவுரை தக்க வழிகாட்டுவதை அறிய முடிகிறது. போர், வரிவசூல், நாடுகாவல் முதலானவை மன்னனின் சிந்தனையில் உதித்து அறமுறைப்படி செயலாற்றின் அறம் தழைக்கும் என்பது பெறப்படுகிறது. போர்ச்சிந்தனை அறவழிப்பட்டு நிகழ்ந்தால் அழிவு கூட அறமாக அமைவதை அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி இரண்டு, ப.36.
2. வே. முத்துலக்குமி, பண்டைத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள், ப.29.
3. வில்லியம் லில்லி, அறவியல் ஓர் அறிமுகம், ப. 85.
4. தொல். பொருள. அகத். இளம். நூ. 47.
5. சரளா ராசகோபாலன், சங்க இலக்கியம், ப.36.
6. தொல். பொருள். கள. இளம். நூ. 90.
7. குறிந். 21.
8. மேலது. 32.
9. மேலது. 30–31.
10. மேலது. 231–32.
11. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத்தமிழர், ப.179.
12. குறுந். 303.

13. தொல். பொருள். கற். இளம். நூ. 141.

14. ஐங். 371:4–5.

15. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.63.

16. குறுந். 262.

17. புலவர் குழந்தை, மு.நூல், ப.184.

18. கு. மோகனராசு, தொல்காப்பியர் ஓர் அறவாணர், ப.40.

19. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.73.

20. அகம். 112.

21. பாலைக்கலி. 10.

22. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.55.

23. நற். 397.

24. குறுந். 49.

25. குறுந். 99.

26. அகம். 339:11–14.

27. குறுந். 40.

28. குறுந். 322:5–6.

29. குறுந். 135.

30. பத்துப்பாட்டு மூலமும் உரையும், நச்சர், ப.272.

31. நற். 129:4–6.

32. பட்டினப். 218–220.

33. ஐங். 10.

34. ஐங். 1.

35. ஐங். 3.

36. ஐங். 2.

37. மா. ராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.572.

38. நற். 120:10–12.

39. புறம். 331:7–9.

40. சிறுபாண். 224–245.

41. மா. ராசமாணிக்கனார், மு.நூல், ப.573.

42. அ. தட்சிணாமூர்த்தி, மு.நூல், ப.63.

43. புறம். 182:1–3.

44. நற். 258.

45. புறம். 182.

46. பட்டினப். 42–45.

47. வே. முத்துலக்குமி, மு.நூல், பக்.92–93.

48. புறம். 95:6–8.

49. நற். 130:4–5.

50. புறம். 46:3–4.

51. வே. முத்துலக்குமி, மு.நூல், பக்.84–85.

52. புறம். 246.

53. புறம். 2:7–8.

54. புறம். 10.

55. மேலது. பா.13–17.

56. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.111.

57. புறம். 94.

58. மேலது. 239:4–5.

59. இரா. அனுராதா, சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள், ப.121.

60. சாமி. சிதம்பரனார், பழந்தமிழர் அரசியல், ப.9.

61. பதிற். 24:6–10.

62. பதிற். 63:1.

63. மேலது. 38:13–6.

64. பதிற். 61:12–13.

65. பெரும்பாண். 480–89.

66. சிறுபாண். 85–87.

67. மேலது. 89–91.

68. மேலது. 93–95.

69. மேலது. 97–100.

70. மேலது. 101–104.

71. மேலது. 105–108.

72. மேலது. 109–111.

73. பதிற். 13.

74. புறம். 42:10–11.

75. புறம். 75.

76. புறம். 18:13–30.

77. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.121.

78. ஞா. தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.101.

79. N. Subramanian, Sangam Politt, pp. 126–127.

80. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.130.

81. பதிற். 52:7–10.

82. புறம். 9.

83. புறம். 72.

84. முல்லைப். 38–39.

85. நெடுநல். 168–188.

86. புறம். 142:4–6.

87. க.த. திருநாவுக்கரசு, தமிழர் நாகரிக வரலாறு, ப.216.

88. புறம். 79:4–6.

89. வே. முத்துலக்குமி, மு.நூல், ப.154.

*****

# சமுதாய மேம்பாட்டில் தனிமனித அறம்

## 5.0. முன்னுரை

சங்க இலக்கியங்கள் மனிதன் வாழ்வாங்கு வாழ்வதற்கான அறங்களைக் கற்பித்திருக்கின்றன. அவற்றுள் தலையாயது தனிமனித அறம். தனிமனித அறமே குடும்ப, சமுதாய, உலகளாவிய அறமாக மாற்றம் பெறுவதனால் தனிமனித அறம் கவனிக்கத்தக்கதாகிறது. தனிமனிதர்கள் மேற்கொள்ளும் செயல்கள் சமூகத்தில் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன. அதனால் சமுதாய மேம்பாட்டில் தனிமனித அறத்தின் பங்கு பற்றிய செய்திகள் ஆய்வுக்குரியதாகிறது. அவ்வகையில் இவ்வியல் சமுதாய மேம்பாட்டில் தனிமனித அறம் குறித்து ஆராய்கிறது.

## 5.1. சங்க இலக்கியமும் தனிமனித வாழ்வும்

“மனிதன் சமுதாய அமைப்பில் ஓர் உறுப்பினராக இருத்தல் என்பது அவனுடைய இயல்பாகும்.”[1] “தான் வாழ்கின்ற வாழ்க்கையில், தான் வாழ்கின்ற நாட்டை ஆள்கின்ற அரசாங்கம், தான் வாழ்கின்ற ஊர், தெரு, சாதி, குலப்பிரிவு என்னும் ஏதேனும் ஒன்றால் அவன் பிணைக்கப்பட்டிருக்கிறான்.”[2] “தனிமனிதச் செயல்பாடுகள் இணைந்தே நல்லதொரு சமுதாயத்தைக் கட்டமைக்கின்றன.”[3] “தனிமனிதர்கள் ஒவ்வொருவரும் சமுதாயத்தின் பொது நன்மையைக் கருத்தில் கொண்டு ஒவ்வொருவரும் தம் விருப்பு வெறுப்புகளைத் தள்ளி வைத்துச் சமுதாய நன்மைக்காகப் பாடுபடும் கடமை மிக்கவர்களாக இருக்கின்றனர்.”[4]

சங்ககால வாழ்வியலில் தனிமனிதர்கள் ஒவ்வொருவரும் தம்மளவில் அறக்கோட்பாடு மிக்கவர்களாக விளங்கி இருக்கின்றனர். மக்கள்

எத்தகையோராக இருந்தாலும் அவர்களுக்கான உணவும் உடையும் குறித்த எல்லைக்குள் இருக்கின்றன. இரண்டின் தேவையும் தனிமனிதர்களைப் பொறுத்தவரை குறைந்த அளவாகவே இலக்கியத்தில் கூறப்படுகிறது. தனிமனிதர்கள் தாம் பெற்ற பொருளைப் பகிர்ந்து வழங்குவதன் மூலமாகச் சிறந்த சமுதாயம் அமைய உதவ இயலும் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

***“தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி***
***வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்***
***நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்***
***கடுமாப் பாக்குங் கல்லா வொருவர்க்கும்***
***உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே***
***பிறவு மெல்லா மோரொக் கும்மே***
***செல்வத்துப் பயனே வீதல்***
***துய்ப்பே மெனினே தப்புற பலவே”[5]***

என்னும் இப்பாடலில் நாடாளும் மன்னன் முதல் இரவு பகல் பாராமல் பசுக்களைக் காக்கும் சாதாரணக் குடிமகன் வரை அனைவருக்குமான தேவைகளைப் பதிவு செய்திருக்கிறார் ஆசிரியர். இப்பாடலில் தனிமனிதர்கள் ஒவ்வொருவரும் தமக்கான உரிமையைப் பெற வேண்டும் என்னும் சிந்தனை பதிவு பெற்றுள்ளது.

இப்பாடலில் மன்னனுக்கும் சாதாரண மக்களுக்குமான வாழ்வியல் வேறுபாடு அமைந்திருக்கும் தன்மை, “குடிபுரக்கும் வேந்தன் தெய்வமாகப் போற்றப்பட்டான். அவனது முரசு உறங்கும் கட்டில் கூட எண்ணெய் நுரை போன்று மென்மைத் தன்மை உடையதாக இருந்தது. ஆனால் இனக்குழு மக்களின் தலைவனோ தோலிலும் பாயிலும் படுத்து உறங்குபவனாகக் காணப்படுகிறான். இனக்குழுச் சமுதாயம் தம் மரபிற்கு ஒவ்வாத செல்வத் துடிப்புடைய வம்ப வேந்தர் மரபை ஏற்கவில்லை. இனக்குழுச் சமூகத்திற்கும் வேந்தர் சமூகத்திற்கும் இடையே ஒரு கருத்திசைவு இன்மை நிலவியதை அறிய முடிகிறது”[6] என்னும் சிந்தனையால் அறியப்படுகிறது.

இனக்குழு வாழ்க்கையில் தலைவன் தன்னைச் சார்ந்தவர்களையும், விருந்தாக வந்தவர்களையும் போற்றி உபசரிக்க வேண்டிய நிலையில் இருக்கிறான். தன் இனக்குழுவிற்கு, தான் சிறந்த நற்குணம் உடையவனாக இருக்க வேண்டிய நிலையில் இருக்கிறான்.

*"கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக்*
*காட்டொடு மிடைந்த சீயா முன்றில்*
*நாட்செருக் கனந்தர்த் துஞ்சு வோனே*
*அவனம் மிறைவன் யாமவன் பாணர்*
*நெருறை வந்த விருந்திற்கு மற்றுத்தன்*
*இரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்*
*கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்*
*டிவதிலாள னென்னாது நீயும்*
*வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்*
*கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்*
*சென்றுவாய் சிவந்துமேல் வருக*
*சிறுகண் யானை வேற்றுவிழு முறவே"*[7]

சங்ககாலப் புலவர்கள் இருப்போரையும் இல்லாதோரையும் சமமாகவே பாவித்தனர். இதனால் ஒற்றுமையான சமுதாயம் அமையப் பாடுபட்டனர். இப்பாடலில் இனக்குழுத் தலைவன் ஒருவன் தம்மை நாடிவந்த விருந்தினர்களை உபசரிப்பதற்காக, தன் பழமையான இரும்பு வாளினை அடமானம் வைத்துப் பொருள் பெற்றமையினை அறியமுடிகிறது. தன் குழு வறுமையில் வாடாதவாறு காக்க வேண்டியது இனக்குழுத் தலைவனுக்குரிய முக்கியமான தகுதியாக இருந்தது.

இனக்குழுத் தலைவன் எளிய வாழ்க்கை வாழினும் சிறந்த பண்பு நலன்களின் உறைவிடமாகத் திகழ்ந்ததற்கான ஆதாரங்களைச் சங்கப் பாடல்களின் திரண்ட கருத்து வடிவத்தால் கு.வெ. பாலசுப்பிரமணியம் விளக்குகின்றார். "தலைவன் வறியவன், வரகு விளையும் சீறூரினன், வாளை

அடகுவைத்து விருந்து புரப்பவன். தலைவன் எளியவன், பாணர்களோடு உடன் வசிப்பவன். தலைவன் வேந்தரினும் விழுமிய வீரச்சால்புடையவன். தலைவன் வேந்தர் வேண்டும்போது உதவி செய்பவன். தலைவன் வன்புல வைப்பினன். வேந்தரோ கரும்பு விளையும் தண்பணை ஊரினர். தலைவன் வீட்டில் இல்லாதபோதும் அவன் மனைவி விருந்தோம்பும் பண்புடையவள். தலைவன் தோலிலேனும், பாயிலேனும் படுத்துறங்கும் தன்மையன். தலைவன் குடியும் அவனே அரசனும் அவனே என்று கூறத்தகும் எளிமையன்.''[8]

இக்கருத்தினால் இனக்குழுத் தலைவன் அவன் சார்ந்த மனிதர்களுக்கு எல்லா நிலையிலும் உதவியமையினையும் தக்க காலத்தில் காத்தமையினையும் அறிய முடிகிறது. இனக்குழுத் தலைவனே பிற்காலத்தில் தான் மேற்கொண்ட அறங்கள் மூலமாகத் தலைவனாகும் பேறு பெற்றான் என்பதைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன.

## 5.2. பொருளும் சமூக மேம்பாடும்

தனிமனிதன் தேடும் பொருள் அறவழியில் பயன்பட வேண்டும் என்பது சங்கப் பாக்களின் சாரமாகும். குடும்ப வாழ்வில் இருந்த தலைவன் தான் தேடும் பொருள் சமுதாயத்தில் வாழ்கின்ற எளியோர்களுக்குப் பயன்பட வேண்டும் என்னும் எண்ணம் உடையவனாக இருந்தான். கொடுக்கும் குணம் உடையவர்களால் வறியவர்களின் துன்பம் குறைந்தது. ''வாழ்க்கையில் பொருள் தேடுவதும் தேடிய பொருள் வழியாக இன்பம் துய்ப்பதும், அறத்தைக் காப்பதும் நோக்கமாகக் கருதப்பட்டது.''[9] ''பிறருக்கு உதவுவதற்கும் தம் வாழ்க்கைக்கும் தேவையான பொருட்செல்வம் சுயமுயற்சியினால் வந்ததாக இருக்க வேண்டும்''[10] என்று வலியுறுத்தப்பட்டது. ''குடும்ப வாழ்வில் தலைவன் பொருள் தேடி இல்லறம் நடத்தல் பெருமைக்குரிய நிகழ்வாகக் கருதப்பட்டது.''[11] ''முயற்சியினால் பெறப்படாத எப்பொருளையும் பண்டைக்கால மக்கள் விரும்பவில்லை.''[12]

தனிமனித வாழ்க்கைக்குப் பொருளும் இன்பமும் தேவையாக இருந்தது. பொருள் தேடலின்போத இன்பம் அரிதானதாக இருந்தது. குடும்ப வாழ்வில் ஈடுபடும்போது பொருள் தேடல் அரிதானதாக இருந்தது. அதனால் குடும்ப வாழ்வில் இருந்த ஆண்கள் தாம் மேற்கொள்ளும் தனியாள் அறத்தை நிறைவேற்றும் பொருட்டாக முயற்சியுடன் வாழ வேண்டியவர்களாக இருந்தனர். தனியொருவரின் நடவடிக்கைகளுள் ஒன்றான பொருள்தேடல், சமுதாயத்தைக் காக்கவும் தேவையானது என்பதனால், பொருளின் முக்கியத்துவம் இன்றியமையாததாக உணர்த்தப்பட்டது.

## 5.3. சமூக நிலையில் தனிமனிதனின் செயல்பாடு

சமுதாய வாழ்வுக்குத் தனிமனிதனின் அறச்செயல்கள் இன்றியமையாதன. தனிமனிதன் ஒருவன் செய்யும் செயல் சமுதாயம் முழுமைக்கும் பாதிப்பை ஏற்படுத்தும் என்பதால் தனிமனித ஒழுக்கம் இங்கு முக்கியமாகக் கருதப்பட்டது. “தனிமனிதர்க்குச் சமூக அமைப்புகளான ஊர், நாடு ஆகியவற்றின் தலைமை கேடு செய்தால் அதனைப் பொதுச் சமூகம் கேட்க உரைக்கும் நிலை சங்க காலத்தில் இருந்தது.”[13] என்னும் கருத்தால் தனிமனித ஒழுக்கம் சிறந்திருந்ததையும் தவறுகள் நடந்தால் தனிமனிதனின் ஒழுக்கம் விமர்சனத்திற்கு உள்ளானதையும் அறிய முடிகிறது.

மன்னன், மக்களைக் காப்பதற்கு உரியவன். நாடாளும் தன்மையன் எனினும், மன்னன் எனினும், அவனும் ஒரு தனிமனிதனே. தன் மனத்தில் எழுகின்ற சிந்தனைகளை அவன் செம்மையாகப் பயன்படுத்தல் வேண்டும். அதனாலேயே மன்னனைத் தலைவனாகக் கொண்ட சமுதாயம் நலம்பெறும் வண்ணம் மன்னனுக்கு அறம் உணர்த்தும் பொறுப்பைப் புலவர்கள் மேற்கொண்டிருந்தனர். “புலவர்கள் பாடிய செவியறீவுறூஉத் துறைப்பாடல்கள் மன்னர்கள் நற்குணம் கொண்டோராக இருக்க வேண்டும் எனக் கூறுவதோடு

மட்டுமில்லாமல் தீமை செய்யாமலும் நடுவு நிலையுடன் இருக்க வேண்டியதன் அவசியத்தை உணர்த்துகின்றன.''[14] சேர, சோழ, பாண்டிய நாடுகள் எனப் பிரிவுற்றிருந்த பண்டைத் தமிழகத்தில் மக்களிடையே பிரிவுகள் பெரிய அளவில் பாதிப்பை ஏற்படுத்தவில்லை. மக்களிடம் ஒற்றுமை இருந்தது. மன்னனைத் தலைமையானவனாகக் கருதினர். நன்மைக்கும் தீமைக்கும் அவனே காரணமாக இருந்த சூழல் இலக்கியங்களில் பதிவு செய்யப் பெற்றிருக்கிறது.

### 5.3.1. *சமூக மதிப்பில் தனிமனிதனின் பங்களிப்பு*

சமூக மதிப்புகளை உருவாக்குவதில் தனிமனிதனின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும். ''மனித மனத்தின் அடித்தளத்தில் இருக்கும் சமூக மதிப்புக்குறித்த எண்ணத்தையும் அதில் உண்மையாகக் கொண்டுள்ள ஈடுபாட்டையும் மனிதனின் வாய்ச்சொற்களாலோ செயல்களாலோ ஒருவரால் கண்டறிய முடிவதில்லை''[15] என்பர் சமூகவியலாளர். மனிதன் வெளிப்படையான நிலையில் தூய்மையானவனாகவும் நற்குணங்களின் இருப்பிடமாகவும் தோற்றமளிக்கிறான். ஆனால் உள்மன அளவில் பல குழப்பங்களையும் அறத்திற்கு மாறான சிந்தனைகளையும் கொண்டவனாக விளங்குகின்றான். சங்க இலக்கியங்கள் மனிதன் சிறந்த மனப்பான்மை உடையவன் ஆதல் வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்டு மனிதனின் சிந்தனைகள் சீர்ப்படும் வண்ணம் சிந்தனைகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

கு.வெ. பாலசுப்பிரமணியன், ''தகுதி, தகவு, மதிப்பு ஆகியன ஒருபொருள் குறித்த சொற்களாகும். சமூக மதிப்பு என்பது சமூகத்தின் உறுப்பினரான தனிமனிதன் அச்சமூகத்தின் வாயிலாகப் பெறுகின்ற விருப்பு வெறுப்புகளைக் குறித்த மதிப்பீட்டின் வாயிலாகப் பெறுகின்ற விருப்பு வெறுப்புகளைக் குறித்த மதிப்பீட்டின் அளவு என்பர். புறத்தே காணப்படும் ஒன்றைக் குறித்து மனிதனின் அகத்தே உண்டாகும் எண்ண அடிப்படையில் உருவாகும் மதிப்பீடு ஒரு சமூக

முழுமையிலும் ஏற்கப்படும்போது அது சமூக மதிப்பு எனப்படும். கன்னிப் புழுவாகப் பயன்படும் ஒருவனைக் காணுகையில் அவனைப் போல் தான் ஆகிவிடக்கூடாது என்ற எண்ணம் ஒருவனுக்கு உண்டாகும். அவ்வடிப்படையில் ஏமாறுகின்றவர், ஏமாற்றுகின்றவர் குறித்த எண்ணங்களும், அவர்களைக் குறித்துச் சமூகம் செய்கின்ற மதிப்பீடுகளும் உருவாகின்றன. ஒரு பொருளைக் குறித்த, ஒரு நிகழ்ச்சியைக் குறித்த ஒரு செயலைக் குறித்த சமூகத்தின் மொத்த எண்ணமே மதிப்பு எனப்படும். ஒரு சமூகத்தின் ஒவ்வோர் உறுப்பினனும் இதற்குரிய பங்களிப்பைச் செய்கின்றான்''[16] என்று சமூகத்தின் நன்மைக்குத் தனிமனித மதிப்பின் அவசியம் தேவை என்பது குறித்துக் குறிப்பிடுவர்.

மனித மதிப்புகள் வாழ்க்கை முழுமைக்குரிய மதிப்புகள், துணைமை மதிப்புகள் என இருவகையாக நோக்கப்படுகின்றன. மகிழ்ச்சி, மனநிறைவு, ஊக்கம், உலக அமைதி, உரிமை, குடும்பப் பாதுகாப்பு, முதிர்ந்த காதல், இன்பம், வீடுபேறு, சமூக ஏற்ப, நட்பு, அறிவுடைமை ஆகியன முழுமையான மதிப்புகளாக எண்ணப்படுகின்றன. ஆவல், ஆர்வம், விரிந்த மனப்பான்மை, நேர்மை, துணிவு, பிழை பொறுக்கும் பண்பு, உதவி செய்யும் மனப்பான்மை, அறிவுக்கூர்மை, பணிவு, பொறுப்புணர்ச்சி, தன்னடக்கம் ஆகியன துணைமதிப்புகளாகக் கருதப்படுகின்றன.

பண்டைய இலக்கியங்களில் தனிமனிதனின் ஒழுக்கங்கள் முக்கியத்துவம் உடையனவாகக் கருதப்பட்டன. “சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றனையும் ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, மானம், பெருமை, குடிமை, ஈகை, விருந்தோம்பல் ஆகிய எல்லாவற்றையும் குறிப்பிடலாம்''[17] என்று மனித மதிப்புகளை வரிசைப்படுத்துகிறது. பொதுவான நிலையில் சங்க இலக்கியங்களில் தனிமனித அறக்கோட்பாடுகளே பெரும்பாலும் சமுதாய நலனுக்கான மாற்றங்களை உருவாக்கியிருக்கின்றன.

அடைக்கலமாக வந்தவர்களைக் காத்தல், அறத்தைக் கைக்கொண்டு அன்புக்குரியவரைப் பிரியாதிருத்தல், உறவினர்களைத் துன்பங்களில் இருந்து காத்தல், அறத்துடன் பொருந்திய தொழில்களை மேற்கொண்டு பொருட்செல்வம் ஈட்டல், பொருட்செல்வம் முக்கியம் எனினும் இன்பத்தைத் துறந்து பொருள் கருதிச் செல்லல் அறமாகக் கொள்ளப்படவில்லை. இல்லற வாழ்க்கை அறங்களில் எல்லாம் சிறந்ததாகக் கருதப்பட்டது. மதுவகைகளை உண்பவர்களிடத்தில் அறக்கோட்பாடு இருப்பதில்லை. அறச்செயல்களைப் புரிந்தவர்கள் தேவருலகத்தை அடைந்து நலம் பெறுவர். சொன்ன சொல் மாறாமல் இருப்பது நல்லறம் என சங்க இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் அறங்கள் யாவும் மனித மதிப்புகளை விளக்கும் பாங்கில் அமைந்திருக்கின்றன.

நன்னெறிகளுக்கெல்லாம் அடிப்படையாக அமையும் தனிமனித அறம் தனிமனிதனின் ஒழுக்கத்தை மையமிட்டதாகும். தனிமனித ஒழுக்கமே திடமான சமுதாயம் அமைவதற்குத் துணை புரிகிறது. அதனால், ஒழுக்கமே குடிமைக்கு அடையாளம். ஒழுக்கத்தாலேயே ஒருவன் உயர்பிறப்பினன் ஆவான். ஒழுக்கத்தால் உயர்வெய்துவர். ஒழுக்கமின்மையால் பழியடைவர். ஒழுக்கம் அறத்திற்கு வித்தாகும். ஒழுக்கமுடையவர் தீயவற்றைச் சொல்லவும் மாட்டார். உயர்ந்தோர் ஒழுகுநெறியே ஒழுக்கம் என ஒழுக்கம் குறித்துக் கூறப்படும் வரையறைகள் தனிமனித ஒழுக்கம் சரிவர அமைந்தால்தான் மனித மதிப்புகள் நலம் பெறும். சமுதாய இயக்கம் வளம் பெறும் என்பதை உறுதிப்படுத்தும் சான்றாகிறது.

## 5.4. வாழ்வியலில் தனிமனிதப் பங்களிப்பும் சமூக மாற்றங்களும்

தனிமனித வாழ்வியல் சமுதாயத்தில் சிறந்த மாற்றங்களைக் கொணர்வதாகும். சிறந்த சமுதாயம் அமைப்பதற்கான கூறுகள் தனிமனிதனைச்

சார்ந்துள்ளமையினால் அவன் குறிக்கோளியல் வாழ்க்கை வாழ வேண்டியவனாயிருக்கின்றான். குறிக்கோள் உள்ள மனிதன் வெற்றி பெறுகிறான். அவனுடைய அனுபவம் பிறருக்குப் பாடமாகவும் கடைப்பிடிக்கத்தக்க ஒழுக்கமாகவும் அமைந்து சமுதாய மாற்றத்திற்கும், சமுதாய மேம்பாட்டிற்கும் உதவுவதாக அமைகிறது.

### 5.4.1. குறிக்கோள் நிறைந்த வாழ்க்கை

மனிதன் இலக்கை முன்வைத்துச் செயலாற்ற வேண்டியவனாக இருக்கிறான். சிறந்த வெற்றியை ஈட்டுவதற்குச் சிறந்த திட்டமிடலும் குறிக்கோளும் அவசியமாகின்றது. தனிமனிதன் தன் நலனுக்கும் சமுதாய நலனுக்கும் சிந்திக்க வேண்டி உள்ளது. தனக்கான குடும்ப வாழ்வும் பிறருக்கான சமுதாய வாழ்வும் ஆடவனுக்குக் கண் போன்றன. தனக்குத் தேவையானவற்றைப் பெறவும் பிறருடன் கூடி வாழவும் வாழ்வியல் நெறிமுறைகள் பயன்படுகின்றன. இதனையே பண்டைய சான்றோர்கள் பூட்கை என்று உரைத்தனர். சங்கப்புலவர் ‘‘குறிக்கோள் இல்லாதவனுடைய வாழ்க்கை பொலிவு இல்லாமல் தோன்றும்’’[17] என்று குறிப்பிடுகின்றார்.

மன்னன் மக்களைக் காப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டியவன். போரல்லாக் காலத்தில் காப்பதினும் போர்க்காலத்தில் மக்களைக் காப்பது சிறந்த அறம் என்பதை மன்னர்கள் அறிந்திருத்தல் வேண்டும். ‘‘மன்னன் அறச்சிந்தனை நிறைந்தவனாக இருந்தால் நாட்டு மக்களும் அறச்சிந்தனையுடன் இருப்பர். போரும் அறவழியாகத்தான் நடைபெறும்’’[18] என்பதைப் புறநானூறு காட்டுகிறது.

### 5.4.2. *சீரிய சிந்தனை*

தனிமனிதனின் சிந்தனை சீரிய தன்மை அடைய வேண்டும். அச்சிந்தனை தனக்கு மட்டுமல்லாமல் சமுதாய மேம்பாட்டிற்கும் பயன்படும்.

நினைப்பவனவற்றைப் பெரிதாக, சிறந்ததாக நினைத்தல், அவ்வாறு நினைத்ததைப் பெற இடையறாது முயலுதல் ஆகியவற்றைப் புறநானூறு வலியுறுத்துகிறது. ‘‘உயர்ந்த நோக்கம் உடையவர்கள் உயர்ந்ததையே பெறுவார்கள் என்பது புறப்பாடலின் சாரமாகிறது.’’[19] ‘‘மன எழுச்சியுடைய மாந்தர்கள் எப்போதும் சிறந்த இலக்கையே கொள்கின்றனர். எடுத்துக் கொள்ளும் முயற்சியில் தோல்வி ஏற்பட்டாலும் உயரிய சிந்தனை உடைய மனிதனுக்கு எவ்வகையிலும் இதனால் பாதிப்பு ஏற்படுவது இல்லை. அவர்கள் உயரிய வழியையே தேர்ந்தெடுப்பர். அவ்வழி சமுதாய வாழ்வுக்கு நலம் பயக்கும்.’’[20]

### 5.4.3. அறம் போற்றல்

தனிமனித அறத்தில் தலையாயது அறம் போற்றல். பொருளும் இன்பமும் அறவழிப்படும். ஆடவன் அறக்கோட்பாட்டினை முன் வைத்துப் பயணித்து நல்ல செயல்களைச் செய்கின்ற போது தனக்கும் சமூகத்திற்கும் பயன்கிட்டும். விரும்பிய செயலை மேற்கொள்வதற்குப் பொருள் முக்கியத்துவம் உடையதாக எண்ணப்படுகிறது.

மு. சண்முகம் பிள்ளை இதுகுறித்து, ‘‘பிறர்க்கு உதவி வாழ்வதற்கும் தனக்கு நேரும் பகை முதலியவற்றை நீக்கி வெற்றி பெறுவதற்கும் தன் மனம் விரும்பும் காதல் இன்பத்தை நுகர்தலுக்கும் பொருளே ஆதாரமானது என்று எண்ணிப் பொருள் தேடும் முயற்சியை மேற்கொண்டனர்’’[21] என்று குறிப்பிடுகிறார். இத்தகைய பொருள் தேடும் முயற்சியே இல்லற வாழ்வில் இன்பம் பெறுவதற்கும் அறச்செயல்களை மேற்கொள்வதற்கான வாய்ப்பினையும் ஏற்படுத்திக் கொடுத்துச் சமூகத்திற்குப் பயன் விளைவித்தது. இதனையே கலித்தொகை,

***"அரிதாய அறனெய்தி யருளியோர்க் களித்தலும்***
***பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்***
***புரிவமர் காதலின் புணர்ச்சியும் தருமென***
***பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்***
***வருவர் கொல்"[22]***

என்னும் அடிகளில் தெளிவாக்கியிருக்கிறது. பொருள் நிலை இல்லாதது என்பதாலும், முயன்று ஈட்டுபவர்கள் அதன் தன்மையை மனத்தினால் தெளிந்து உணர்ந்து அறம் செய்தல் வேண்டும். பொருள் வளம் இல்லாதவர்களையும், இரந்து வருபவர்களையும், எளியோரையும் காத்தல் வேண்டும் என்னும் சிந்தனைகள் முன்வைக்கப்பட்டன. ஈகைக்குணம் ஒருவருடைய தனிமனிதனின் கொடைநெறி, ஆதரவற்றவர்களைக் காக்கும் கவசமாகப் பயன்படுகிறது.

### 5.4.4. இல்லறம்

ஆண், பெண் என்னும் இரு பாலினங்களின் ஒன்று சேர்ந்த வாழ்க்கை இல்லறம் எனப்பட்டது. ஆடவன் நற்குணம் உடையவனாகவும் அறக்கோட்பாட்டாளனாகவும் அமைந்து, அவன் மனைவியும் அவனது அறச்செயல்களுக்கு ஊக்கமளித்துப் போற்றும் திறம் வாய்ந்தவளாக அமைந்து விட்டால் குடும்பத்தில் நிலவும் இருதனிமனிதர்களின் அறங்கள் குடும்ப அறமாக மாற்றம் அடைந்து பின் அது சமுதாயத்தை நோக்கி நகர்கிறது.

ஆணும் பெண்ணும் வாழ்கின்ற அன்புறு வாழ்க்கை சமுதாயத்தைக் கட்டமைக்கின்றது. அறங்கள் விளையும் களமாகச் சமுதாயத்தை மாற்றுகின்றது. குடும்ப வாழ்வில் ஈடுபட்டு ஒருவரை ஒருவர் அன்பு செய்து சமுதாயத்திற்கு எடுத்துக் காட்டாக வாழ்கின்ற வாழ்க்கை சமுதாயம் முழுமைக்கும் பயன் விளைவிக்கத்தக்கது. ஒருவனுக்கு ஒருத்தி என்னும் அறம் பண்டை நாளில் மிகவும் வலியுறுத்தப்பட்டது.

*“சாதல் அஞ்சேன் அஞ்சுவன் சாவின்*
*பிறப்புப் பிறிதாகுவ தாயின்*
*மறக்குவென் கொல்லென் காதல னெனவே”[23]*

*“இம்மைமாறி மறுமை யாயினும்*
*நீயா கியரென் கணவனை*
*யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே”[24]*

என்னும் பாடல்கள் தலைவனும் தலைவியும் கொண்ட நல்லன்பினை வெளிக்காட்டுவதாய் அமைகிறது.

### 5.4.5. *பிறப்பு*

ஒழுக்கம், வாழ்வியல் நடைமுறை ஒழுகலாறுகள் ஆகியவற்றுடன் தொடர்புடையதாக ஒருவருடைய குடிப்பிறப்பு கருதப்படுகிறது. பிறப்பினால் நற்குணமும், முன்னோரின் விழுமியங்களும் பிறப்போடே சேர்ந்து வரும் என்னும் நம்பிக்கையைக் கொண்டவர்களாக முன்னோர் இருந்தனர். அதனடிப்படையிலேயே நற்குடிப் பிறப்பினை வலியுறுத்தினார்கள். அறக்கோட்பாடும், நற்குணமும் நிறைந்த குடும்பத்தில் பிறந்தவர்கள் தாங்களும் நற்குணம் கொண்ட அறவான்களாய் வாழ்வார்கள் என்னும் சிந்தனை சமுதாயத்தில் நிலைபெற்றிருந்தது.

தனிமனித ஒழுக்கத்துக்குக் குடிப்பிறப்பும் காரணம் என்னும் கருத்து முன்வைக்கப்பட்டது. தொல்காப்பியம், தந்தையின் குணம் அவன் பெற்ற மக்களுக்கும் அமைந்து வருமாற்றைக் குறிப்பிடுகிறது. ‘‘தந்தையர் ஒப்பர் மக்கள்’’[25] தொல்காப்பியக் களவியல் குணத்துடன் குடும்பம் சார்ந்த பிற கூறுகளையும் ஒப்பவைத்துப் பார்க்க வேண்டும் என்னும் சிந்தனையை முன்வைக்கிறது.

***“நாடும் ஊரும் இல்லும் குடியும்***
***பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி***
***அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ”[26]***

இந்நூற்பாவில் ஒருவனுடைய குணத்தையும், செயல்களையும் அவன் பிறந்த நாடு, ஊர், குடியிருப்பு, பிறந்த குடி, அக்குடியுள் அவனது ஏற்றம் முதலிய செயல்களுடன் ஒத்துப் பார்த்து மதிப்பிடுதல் முறை என்னும் சிந்தனை முன் வைக்கப்பட்டுள்ளது.

***“நின்னொடு தொன்று மூத்த உயிரினும் உயிரொடு***
***நின்று மூத்த யாக்கை அன்னநின்***
***ஆடுகுடி மூத்த விழுத் திணை”[27]***

என்னும் புறப்பாடல், முதுமையான குடிப்பிறப்பையும் சிறப்பாக முன்னிறுத்துகின்றது.

***“சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்***
***நூற்று இதழ் அலரின் நிரைகண் டன்ன***
***வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து***
***வீற்றிருந் தோரை எண்ணும் காலை***
***உரையும் பாட்டும் உடையோர் சிலரே***
***மரைஇலை போல மாய்ந்திசி னோர்பலரே”[25]***

இப்பாடலில், உயர்குடிப்பிறப்பு, நூறு இதழ்களைக் கொண்டிருக்கும் தாமரை மலருக்கு ஒப்பாகக் கூறப்படுகின்றது. இலைகள் எத்தனை இருந்தாலும் தாமரைக்குப் பெருமை இல்லை. பெருமை முழுவதும் மலருக்கே சென்று சேர்கிறது. அவ்வாறே நல்ல குடும்பத்தில் பிறந்த ஒருவன் தான் மேற்கொண்ட செயல்களின் வாயிலாக, சமுதாயத்தில் அறங்கள் சிறக்கப் பாடுபடுகிறான் என்பது புலனாகிறது. நல்ல குடிப்பிறப்பும் அப்பிறப்பின் சிறந்த குணங்கள் மனத்தில் நிறைந்திருக்க, ஒருவன் மேற்கொள்கின்ற சீரிய செயல்கள் அவனில் இருந்து சிறந்த சமுதாயம் அடைவதற்கான சூழ்நிலையை ஏற்படுத்துகின்றன.

### 5.4.6. அன்பு

அன்பு மனித இனத்தைத் தழைக்கச் செய்வது. அஃறிணை உயிர்களும் இணைந்து வாழக் காரணமாய் இருப்பது. அன்பு என்னும் குணத்தால் உலக இயக்கம் சீராக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மு. சண்முகம் பிள்ளை இது தொடர்பாக, ‘‘வாழ்வின் இன்பத்திற்கு அடிப்படையாக உள்ளது அன்பு. அன்பு என்பது ஒருவர் நெஞ்சம் மற்றவர் நெஞ்சத்தோடு ஒன்றிக் கலப்பதாகும். உத்தமமான அன்பிற்குச் சேர்ந்து வாழ்தலும் கூடிப்புகுதலும் முக்கியமன்று. அன்பு சுரக்கின்ற காலத்தில் அது இயல்பாகவே எழுந்து ஒருவரோடு மற்றவரைப் பிணித்துவிடும். முன்பின் பழகி அறியாத ஒரு ஆடவனுக்கும் ஒரு இள நங்கைக்கும் ஏற்பட்ட அன்பைக் குறித்து அந்த ஆடவன் வியந்து போவது அன்பின் ஆழத்தை நன்கு புலப்படுத்துகிறது’’[29] என்பர். அன்பு இயல்பாக எழுவதற்கு, மனத்தில் இயற்கையாக நற்குணம் அமைதல் வேண்டும். அன்பில்லா மனத்தை வள்ளுவர் பல்லாற்றானும் சாடுகிறார். வெறும் எலும்பும் தோலும் போர்த்த உடம்பு என்கிறார். தனிமனிதரிடம் எழுகின்ற அன்பு தன்னைச் சார்ந்தோரையும் சமுதாயத்தாரையும் ஒருங்கிணைக்கும் பான்மையது.

அன்பே, உலகில் மாற்றங்கள் பல எழுவதற்குக் காரணமாக அமைந்தது. சங்க இலக்கியத்தில் காணப்படும் அன்பு குறித்த சான்றுகள் சமுதாய மேம்பாட்டிற்குத் தக்க வகையில் அன்பு எவ்வாறு உதவியிருக்கும் என்பதை விளக்கியிருக்கின்றன. குறுந்தொகையில் இடம் பெறும்,

*‘‘யாயும் ஞாயும் யாரா கியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்*
*யானும் நீயும் எவ்வழி அறிதும்*
*செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே’’*[30]

என்னும் பாடல், மனத்தில் இயல்பாக அன்பு கிளர்ந்தெழும் சூழலை எடுத்துக் காட்டுகின்றது. அன்பைத் துணையாகக் கொண்டே அருள் பிறக்கும். அருளே அனைவரையும் காக்கத் துடிக்கும். அறத்திற்கு துணையாக அமையும் என்பதனால் அன்பும் அருளும் நீங்கியவர்கள் மனிதர்களாக எண்ணப்படவில்லை. சங்க காலத்தில், அன்பும் அருட்குணமும் இல்லாதவர்கள் நரக உலகம் சென்றடைவார்கள் என்னும் சிந்தனை நிலை கொண்டிருந்தது. இது,

> ***"அருளும் அன்பும் நீங்கி நீங்கா***
> ***நிரயம் கொண்டவரொடு ஒன்றாது காவல்***
> ***குழவி கொள்பவரின் ஓம்புமதி"[31]***

என்னும் புறப்பாடல் அடிகளின் மூலம் முன்வைக்கப்படுகிறது.

நற்குணம் இல்லாதவர்கள் பிறருக்குப் பயன் உடையவர்களாக இருப்பதில்லை. பிறர்மீது அன்பு காட்டுவதும் இல்லை. ஒருவர் மற்றவரிடம் அன்பு செலுத்தும் போதுதான் அது தனிமனிதனின் பண்பை வளர்க்கிறது. அன்பு நிறையப் பெற்று வாழ்ந்தவர்களின் வாழ்க்கை சமுதாய மேம்பாட்டிற்கும் உதவுவதாகிறது.

> ***"கேட்டல் மாத்திரை அல்லது யாவரும்***
> ***காண்டல் இல்லாது யாண்டுபல கழிய***
> ***வழுஇன்று பழகிய கிழமையர் ஆயினும்***
> ***அரிதே தோன்றல் அதற்பட ஒழுகல் என்று***
> ***ஐயங் கொள்ளன்மின் ஆர்அறி வாளீர்***
> ***இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்***
> ***புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே***
> ***தன்பெயர் கிடைக்கும் காலை என்பெயர்***
> ***பேதைச் சோழன் என்னும் சிறந்த***
> ***காதற் கிழமையுங் உடையின் அதன்தலை***
> ***இன்னது ஓர்காலை நில்லலன்***
> ***இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே!"[32]***

என்னும் புறப்பாடலில் கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையாரின் நட்புநிலை காட்டப்படுகிறது. கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் இருவருக்கும் ஏற்பட்ட நட்பு ஒருவரை ஒருவர் பார்த்து ஏற்பட்ட நட்பு அல்ல. ஒருவரை ஒருவர் கேள்வி அறிவால் அறிந்து கொண்ட நட்பாகும். சான்றோர் நட்பு நல்லதையே நடத்தும் என்னும் பான்மையில் சோழன், வடக்கிருந்த காலத்து, தன் நண்பர் பிசிராந்தையார் தவறாமல் வருவார் என்னும் நம்பிக்கை கொண்டவராக இருந்தார். அத்தகைய உயரிய நட்பும் அன்புமே சமுதாயத்திற்கு நலம் விளைவிக்கக் கூடியதாக இருந்துள்ளது.

## 5.5. நல்ல நட்பும் சமுதாய மேம்பாடும்

மனிதர்கள் உயரிய நட்புக் கொள்வதற்கு உரியவர்கள். தன்னைச் சார்ந்தவர்களிடம் சிறந்த நட்புக் கொண்டு, சமுதாயத்தில் நல்விளைவு ஏற்படக் காரணமாக இருப்பவர்கள். சிறந்த நட்பு நல்லோர் மாட்டே நிகழும். அந்நட்பு சமுதாயத்தின் உயர்வுக்குப் பயன்படும். உயிரோடு உயிராக ஒன்று கலந்த நட்பே சிறந்ததாகும். சிறந்த விழுமிய நட்பில் வெறுப்பும் குற்றங்களும் ஏற்படுவது கிடையாது. நல்ல நட்பு கடலை விடப் பெரியதாகக் கருதப்பட்டது. நல்ல நட்பு உயரியதாகக் கருதப்பட்டது. நல்ல நட்பு உடையவர்கள் ஈருடல் ஒருயிரானவர்கள் என்னும் சிந்தனை முன் வைக்கப்பட்டது.

*“யாத்தேம் யாத்தன்று நட்பே*
*அவிழ்த்தற்கு அரிது; அதுமுடிந்து அழைத்தன்றே”*[33]

*“கடலினும் பெரிது எமக்கு அவருடைய நட்பே”*[34]

*“ஒன்றுதும் என்ற தொன்றுபடு நட்பின் காதலர்”*[35]

*“உயிர்கலந்து ஒன்றிய தொன்றுபடு நட்பின்*
*செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர்”*[36]

சங்க இலக்கியத்தில் காணப்படும் மேற்கண்ட செய்யுள் அடிகள் நட்பின் உயர்வினை எடுத்துக்காட்டுகின்றன. தூய்மையான நட்புக் கொள்பவர்கள் தாம் நட்புக் கொள்வதுடன், தம்மைச் சார்ந்தவர்களுக்கும் முன் மாதிரியாக விளங்குகின்ற காரணத்தால் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் அறத்தைக் கற்றுக் கொடுக்கும் உயரிய பண்பாளர்களாகத் திகழ்ந்து நன்மைமிக்க சமுதாயம் அமையத் துணை புரிகிறார்கள்.

நட்புக் கொள்பவர்கள் தாம் யாருடன் நட்புக் கொள்கின்றோம் என்பதில் கவனமாக இருத்தல் வேண்டும். ஒருவர் கொள்ளும் நட்பு தீமையானதாக அமைந்து விட்டால் அவரைச் சார்ந்தவர்களுக்கும் அது துன்பம் தருவதாக அமைந்துவிடும். மு. சண்முகம் பிள்ளை நட்பின் இலக்கணம் குறித்து, ‘‘சிறந்த நட்பினர்கள் மாட்டும் சிறிதுகூட ஐயம் நேரா வண்ணம் ஒருவருக்கொருவர் நடந்து கொள்வது இன்றியமையாதது. சிறுதவறு நேரினும் அது நட்பினர்களிடம் பெரும் பிளவினை உண்டாக்கும். நெருங்கிப் பழகியபின் பிரிவதென்பதும் மிகத் துன்பம் தருவதாகும். ஆகையால் பெரியோர் ஒருவரிடம் நட்புச் செய்யுங் காலத்து அவர்களுடைய இயல்புகளை நன்கு ஆராய்ந்து நட்புக் கொள்வர். நட்புக் கொண்டபின் ஆராய்ச்சி செய்வதென்பது பொருந்தாத செயலுமாகும்’’[37] என்பர்.

இக்கருத்துகளுக்கு அரண் செய்யும் வண்ணம்,

***‘‘விழுமிதின் கொண்ட கேண்மை நொவ்விதின் தவறும்’’[38]***

***‘‘பழகிய பகையும் பிரிவு இன்னாதே’’[39]***

***‘‘பெரியோர்***
***நாடி நட்பின் அல்லது***
***நட்டு நாடார் தம்ஒட்டியோர் திறத்தே’’[40]***

என்னும் சான்றுகள் அமைந்திருக்கின்றன.

### 5.6. பொறுமைக்குணம் மேம்பாட்டிற்கு உதவுதல்

பொறுமைப்பண்பு ஒருவரை உயர்த்தும் பான்மையது. அத்துடன் அவர் சார்ந்த பிறரையும் நல்வழிக்கு இட்டுச் செல்லும் பான்மையது. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து பண்புகளின் நலமும் நல்வாழ்க்கைக்கு உதவும். ஐம்புலன்களையும் அடக்கி வாழ்பவர்கள் தீய எண்ணங்களுக்கும் தீய செயல்களுக்கும் இடம் கொடுக்காமல் நல்வாழ்வு வாழ்பவர்களாவர். புறநானூறு, சான்றோர்களை அடக்கமாகிய பண்பின் உறைவிடமாகக் குறிப்பிடுகின்றது.

***"ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்***
***சான்றோர்"***[41]

இச்சான்றோர்கள் உயர் பண்பாளர்கள். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்களையும் தாம் கொண்டிருக்கின்ற உயரிய அடக்கப் பண்பினால் புலன்கள் தத்தம் வழியில் செல்லாமல் காத்து நற்குணங்களும் நல்விளைவுகளும் விளையும் நிலமாக மனத்தைக் கொண்டோராவர். சான்றோர்கள் வழிவழியாக வந்த உயர்குடிப் பிறப்பாளர்களாக இருக்கின்ற காரணத்தால் நல்லனவற்றையே நினைக்கும் செயல்படுத்தும் குணத்தைக் கொண்டிருப்பர்.

***"ஆன்றவர் அடக்கம்போல் அலர் செல்லாச் சினையொகும்"***[42]

***"ஒன்று மொழிந்து அடங்கிய கொள்கை"***[43]

என்னும் அடிகளான் கலித்தொகையும் பதிற்றுப்பத்தும் சான்றோரின் நற்குணங்களைக் குறிப்பிடுகின்றன. சான்றோர் எச்செயலையும் நன்கு ஆராய்ந்து நற்குணத்தால் செய்து முடிக்கும் பண்பினராவர். சரியான காலத்திற்காக அவர்கள் காத்திருந்து செயல் முடிப்பர். சான்றோர்களின் பண்பு அவர்கள் சார்ந்திருக்கும் சமுதாயத்திற்கு வழிகாட்டக் கூடியதாகும். தாம் பெற்ற பொருளைத் தாமே அனுபவிக்கும் குணம் இன்மை, கோபம் கொள்ளாமை, செயல்

முடித்தல் ஆகிய பண்புகளின் உறைவிடமாகச் சான்றோர் விளங்குகின்ற காரணத்தினால் சமுதாயத்தார் ஏற்றுக் கடைப்பிடிக்கும் ஒழுகலாறுகள் பலவற்றையும் உலகிற்கு அறிவிக்கும் தன்மையராய் விளங்குகின்றனர்.

### 5.6.1. சொல்வன்மை

சொல் தூய்மை சொல்லறமாகக் கடைப்பிடிக்கப்படுகின்றது. உயர்ந்தவர்கள், நற்குணம் உடையவர்களின் வாயில் இருந்து பிறக்கின்ற சொற்கள் நற்செயல்களின் பிறப்பிடமாக விளங்குபவையாகும். சொல்வன்மை என்பது உண்மை, சீரிய சொல் ஆகியவற்றின் பிறப்பிடமாக அமையும் தன்மையது. சொல்வன்மையின் தொடக்கநிலை வாய்மை – உண்மையாகும். உண்மை பேசும் பண்புடையவர்கள் நற்குணம் உடைய சான்றோராவர். அதனாலேயே உண்மை புகழ் தருவதாகக் குறிப்பிடப்பட்டது. சொல்வன்மை, நல்ல மனம், நற்செயல், நீதி ஆகியவற்றின் அடிப்படைத் தன்மைகளைப் பெற்றதாகும்.

வாயில் இருந்து ஒருவனிடம் தோன்றுகின்ற பொய்ம்மொழி அவனைப் பிறரிடம் இருந்து ஒதுக்கி வைக்கும். பிறரால் வெறுக்கத் தக்கதாக அமையும். "பொய் கலக்காத உண்மையான மொழி புகழ் தருவதாகும்"[44] என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. "வாய் மொழி தூய்மையாக அமைந்துவிட்டால் எதற்கும் அச்சம் கொள்ள வேண்டியதில்லை"[45] என்கிறது குறுந்தொகை.

நீதி கூறும் அவையில் இருந்து குற்றங்களை ஆராய்ந்து நீதி கூறுபவர்கள், நடுநிலையான சொல் வன்மை கொண்டவர்களாக வாய்மொழியாளர்களாக இருத்தல் வேண்டும். சொன்ன சொல் மாறாத சான்றோர்களின் வாய்ச்சொற்களைக் கேட்டும் நற்குணம் உடையவர்கள் தாமும் சான்றோர்களின் நற்சொற்களைக் கடைப்பிடித்து வாழும் பண்புகளைப் பெறுவர். தனிமனிதன் கடைப்பிடிக்கும் சொல்வன்மை சிறந்த சமுதாய அறங்கள் தோன்றுவதற்கும் சமுதாய மேம்பாட்டிற்கும் உதவுகிறது.

*"நிலம்புடை பெயர்வ தாயினும், கூறிய*
*சொல்புடை பெயர்தலோ இலர்"*[46]

*"மாரி பொய்க்குவ தாயினும்*
*சேரலாதன் பொய்யலன் நசையே"*[47]

*"நிலம்திறம் பெயரும் காலை ஆயினும்*
*கிளந்தசொல் நீ பொய்ப்பு அறியலையே"*[48]

*"குன்றகல் நல்நாடன் வாய்மையில் பொய்தோன்றின்*
*தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி"*[49]

என்றவாறாக, சங்க இலக்கியங்களில் காணப்படும் அடிகள் வாய்மையின் முக்கியத்துவத்தை உணர்த்துவதாகவும் பிறர் ஏற்றுக் கடைப்பிடித்து நற்சமுதாயத்தை அமைக்கக் காரணமாகவும், தனிமனிதன் சமுதாய மேம்பாட்டிற்கு உதவும் தன்மையனாக விளங்குவதையும் உறுதி செய்கின்றன.

### 5.6.2. நற்சொற்கள் பேசுதல்

தனிமனிதன் சமுதாயத்தைக் கட்டமைக்கின்றான். அவன் ஒழுக்கத்தில் சிறந்தவனாகவும், நற்குணம் உடையவனாகவும் இருக்கும்போது நற்சமுதாயம் அமைவதற்கான சூழல் உருவாகிறது. ஔவையார் கூறியதுபோல, எவ்விடத்தில் நல்ல மக்கள் வாழ்கிறார்களோ அங்கு நாடும் நன்றாக இருக்கும் என்னும் பான்மையில் நல்லறங்கள் விளையவும் தனிமனித அறம் சிறக்க நற்சொல் அவசியம். இனிய சொல் பேசுவதனால் உறவுகளும் நட்புரைகளும் அருகில் நெருங்கி இருந்து நட்பு பாராட்டும் சூழலும் சமுதாய மாற்றங்களும் விளைவதற்கான வாய்ப்பு உண்டு. இனிய சொற்களால் மனம் மென்மைத் தன்மை அடையும் சூழலும், நல்லன நிகழக் காரணமான சூழல் பலவும் அமையும் என்பது சங்க இலக்கியத்தில் எடுத்துக் காட்டப்படுகிறது.

*"மெல்லிய இனியமே வரக்கிளந்து"*[50]

*"அன்னைபோல இனிய கூறியும்*
*கள்வர் போலக் கோடியன் மாதே"*[51]

### 5.6.3. நன்றியுணர்வு

சமுதாய மேம்பாட்டிற்கு நன்றியுணர்வு முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. ஒருவர் தனக்குச் செய்த நற்செயலை எந்நிலையிலும் மறக்காமல் மனத்தில் போற்றிக் காத்து, அவருக்கு தக்க காலத்தில் உதவுதல் வேண்டும். சங்க இலக்கியங்கள் மனித மனத்தில் இருக்கும் நன்றி உணர்வை மிகுவிக்கவும், நன்றி உணர்வு இல்லாதவர்களும் அதனைக் கடைப்பிடிக்கவுமான வழிகாட்டியாக விளங்குகின்றது. நன்றி உணர்வைக் கடைப்பிடிப்பவர்கள் இருந்தால்தான் அறம் நிலைபெறும். அறம் நிலைபெற அதனைக் கடைப்பிடிப்பவர்கள் மிகுதியாக இருக்க வேண்டும்.

*"பெருநன்றி ஆற்றின் பேணாரும் உளரோ"*[52]

*"முன்ஒன்று தமக்கு ஆற்றின் முயன்றவர் இறுதிக்கண்*
*பின்ஒன்று பெயர்த்து ஆற்றும் பீடுடையாளர் போல்"*[53]

*"ஒற்கத்துள் உதவியாளர்க்கு உதவாதான் மற்றுஅவன்*
*எச்சத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதேகாண்"*[54]

என்னும் சான்றுகள் நன்றி என்னும் பண்பின் முக்கியத்துவத்தை விளக்குகின்றன. நல்லொழுக்கம் உடையவர்கள் நன்றி என்னும் பண்பை மனத்தின் கொண்டிருப்பதனால் அவர்களின் நற்குணம் அனைவருக்குமான குணமாக விரிவடைந்து சமுதாய மேம்பாட்டை உருவாக்கும் தகைமையைப் பெறுகின்றது.

## 5.7. சிறந்த செயல் திறம் உடையோர்

தாம் எடுத்த செயலை முயற்சியுடன் செய்து முடிக்கும் திறம் உடையோர் சமுதாயத்தால் போற்றப்படுவர். எந்த ஒரு செயலையும் திறம்பட ஆராய்ந்து

துணிபவர்கள் தம் சீரிய செயல்பாட்டால் வெற்றி பெறுகின்றனர். தனிமனிதன் ஒருவர் தான் செய்யும் செயல் இன்னதென்று ஆராய்ந்து துணியும் திறன் பெறல் வேண்டும். செயலைத் தொடங்கும் போது ஆராயாமல் விட்டுவிட்டுப் பின் சிந்திப்பதால் பயன் விளையாததுடன் மற்றவர்களின் இகழ்ச்சியினையும் எதிர்கொள்ள நேரிடும். தான் மேற்கொள்கின்ற செயலால், சமுதாயத்திற்கு நன்மையும், தொடர்ந்து பலரும் அதனைப் போற்றிக் கடைப்பிடிக்கும் நிலையும் வேண்டும். அதனால் பண்பட்ட சொல் சிறந்ததாகக் கொள்ளப்பட்டது.

***"செய்துபின் இரங்கா வினையொடு***
***மெய்அல் பெரும்பழி எய்தினென் யானே"***[55]

என்னும் அகப்பாடல், நல்ல செயல்களைத் தேர்ந்தெடுத்துச் செய்கின்றபோது அதனால் பழிவந்தாலும் அது வருத்தம் கொள்ளத்தக்க பழியாக இருக்காது. பின்பு அதனை ஆராய்ந்து பார்த்தவர்கள் விளைந்த நன்மையை எண்ணி வியக்கும் சூழல் உருவாகும் என்று குறிப்பிடுகின்றது. சான்றோர்கள் உயரிய பொருளை நினைப்பதையும், உயரிய செயல்களைச் செய்வதையும் நோக்கமாகக் கொண்டவர்கள் என்பதனால், அவர்களின் செயல்பாடு, சமுதாய மாற்றத்தை விளைவிப்பதுடன் இவ்வாறு வினையாற்றலே சமுதாய மேம்பாட்டிற்கான வழி என்பதை மக்களின் மனத்தில் விதைத்து அவர்களையும் உயரிய செயலாக்க நிலைக்கு இட்டுச் செல்லும் என்பது புலனாகிறது.

### 5.7.1. நாட்டு நலம்

நாட்டின் நலமும் வளமும் அந்நாட்டில் வாழ்கின்ற மக்களைச் சார்ந்திருக்கிறது. நாட்டு மக்கள் நல்லவர்களாக இருந்தால்தான் அவர்களின் செயல்பாடுகள் நலம் பொருந்தியதாக இருந்தால்தான் சமுதாயத்தில் வாழ்கின்ற மக்களும் நாட்டு நலத்தில் பங்கேற்க இயலும். நாடாளும் மன்னர்கள் நற்குணம் வாய்ந்தவர்களாகவும் செயல்திறன் மிக்கவர்களாகவும் இருந்தால்தான் பிறருக்கு

நலம் விளையும் செயல்களை மேற்கொள்ள இயலும். நல்லோர் நிறைந்த சமுதாயத்தில் நல்லோர்கள் மேற்கொள்கின்ற செயல்கள் பலவும் நாட்டில் சிறந்த மாற்றங்களும் நலமும் பெற வழிவகுக்கும்.

நாடு தன்னிறைவு அடைய வேண்டுமாயின் அந்நாட்டு வளம் நிறைவாகவே இருந்தால் மட்டும் போதாது. நாடாளும் மன்னன் நற்குணம் உடையவனாக இருத்தல் வேண்டும்.

***"அளிதோ தானே பாரியது பறம்பே***
***நளிகொள் முரசின் மூவிரு முற்றினும்***
***உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே***
***ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளையும்மே***
***இரண்டே தீம் சுளைப்பலவின் பழம் ஊழ்க்கும்மே***
***மூன்றே, கொழுங்குடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே***
***நான்கே அணிகிற ஓரிபாய்தலின், மீதுஅழிந்து***
***திணிநெடுங் குன்றம் தேன்சொரியும்மே"***[56]

என்னும் புறப்பாடலின், ஒரு நாட்டு மக்கள் தம் வாழ்க்கைக்காகப் பிறநாட்டை எதிர்பாராமல் வாழ்தல் வேண்டும். அத்தகைய வளங்களைக் கொண்டிருப்பதே நாடென்று பெறப்படும். அப்போதுதான் பகைவர்களின் அச்சுறுத்தல்களையும் தாங்கிக் கொண்டு வலிமையுடன் விளங்க இயலும் என்னும் சிந்தனையை அறிய முடிகிறது. எனவே, நாடாளும் மன்னன் தன் நாட்டு வளத்தை எவ்வகையிலும் குன்றாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்வானானால் அவனுடைய நாட்டு மக்களுக்குத் துன்பம் வராமல் நிர்வாகம் செய்பவனாய் சிறந்த முன்னுதாரணமாக இருப்பான் என்பது பெறப்படுகிறது.

### 5.7.2. அரசனின் செயல் எடுத்துக்காட்டாதல்

நாடாளும் மன்னன் ஒழுக்கமுடையவனாகத் திகழ வேண்டும் என்பதற்கு புலவர்கள் சங்க இலக்கியங்களில் வரையறைகள் பலவற்றைக்

கூறியிருக்கின்றனர். தனிமனிதனின் வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்ளும் சூழலுக்கு மன்னன் முன் மாதிரியாய்த் திகழ்ந்தமையினைச் சங்க இலக்கியங்கள் தெளிவாக்கியுள்ளன. மன்னன் நாடாள்வதில் மேற்கொள்ளும் செயல்களில் சில, இல்லற வாழ்வியலும், தனிமனித வாழ்வியலிலும் பயன்படக் கூடியவையாகும்.

***"செய்ந்நன்றி அறிதலும் சிற்றினம் இன்மையும்***
***இன்முகம் உடைமையும் இனியன் ஆதலும்***
***செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த***
***அஞ்சினர்க்கு அளித்தலும் வெஞ்சினம் இன்மையும்***
***ஆண் அணி புகுதலும் அணிபடை தாங்கலும்***
***வாள்மீக் கூற்றத்து வயவர் ஏத்த***
***கருதியது முடித்தலும் காமுறப் படுதலும்***
***ஒருவழிப் படாஅமையும் ஓடியது உணர்தலும்***
***அரிஞர் உண்கண் அரிவையர் ஏத்த***
***அறிவுமடம் படுதலும் அ்றிவுநன் குடைமையும்***
***வரிசை அறிதலும் வரையாது கொடுத்தலும்***
***பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த***
***பல்மின் நடுவண் பால்மதிபோல***
***இன்நகை ஆயமொடு இரந்தோன்"***[57]

சிறுபாணாற்றுப்படையில் இடம்பெறும் இவ்வடிகள் நன்றிப்பண்பு, சிறுமைக்குணம் உடையவர்களுடன் சேராமல் இருத்தல், இனிமையான முகம் உடையவராக இருத்தல், நற்குணம் உடையனாதல், கோபமின்மை, நடுவு நிலையுடன் இருத்தல், அறிவுடைமை, அளவு கருதாமல் கொடை வழங்கல் முதலான பண்புகள் மன்னனுக்கு வேண்டும் என்று குறிப்பிடுகின்றன. மன்னனுக்கு வேண்டிய பண்புகள் பலவற்றையும் சமுதாய வாழ்க்கையில் வாழ்கின்ற தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டியவனாக இருக்கிறான். மன்னன் நற்குணம் உடையவனாய், நடுநிலையாளனாய் பழகுதற்கு இனியனாய் இருக்கின்றபோது அதனைக் காணும் அரசனின் சுற்றத்தாரும் பிறரும் நாட்டு

மக்களும் அவனது நடவடிக்கைகளைக் கண்டு தாமும் அவற்றைக் கடைப்பிடித்து இயற்கையான நற்குணத்தையும் செம்மைப்படுத்திக் கொள்கின்ற காரணத்தால் மன்னன், தனிமனித அறத்தின் மேம்பாட்டுக்கும், சமுதாயம் சிறக்கவும் எடுத்துக் காட்டாக விளங்குகின்றமை புலனாகும்.

## 5.8. தனிமனித அறத்தின் சமுதாயப்போக்கு

தனிமனித அறங்கள் பலரால் பின்பற்றப்பட்டுப் பொது நிலையை அடைகின்ற போது, மேன்மையான சமுதாயம் அமைகின்றது. தனிமனிதர்கள் தாம் கொண்ட அறக்கோட்பாடுகளைக் கடைப்பிடித்து ஒழுகும்போது அவை சமுதாயம் முழுமைக்கும் நன்மை விளைவிக்கின்றன. குறிப்பாக, அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோர்களின் ஒழுகலாறுகள் சமுதாயத்தில் பிறமக்களும் தம்மளவில் அறச்செயல்களை மேற்கொண்டு சமுதாயம் நன்னிலை அடைவதற்கான சூழலை ஏற்படுத்திக் கொடுக்கின்றன.

அந்தணர்கள் நாடு சிறக்கவும், நாட்டில் நல்லாட்சி நடைபெறவும், மன்னனின் ஆட்சி பல்லாற்றானும் சிறக்கவும் பாடுபட்டனர் என்பதைப் பதிற்றுப்பத்து,

***"ஓதல், வேட்டல், அவைபிறர் செய்தல்***
***ஈதல் ஏற்றல் என்று ஆறுபுரிந்து ஒழுகும்***
***அறம் புரி அந்தணர்"***[58]

என்றும், பரிபாடல்,

***"ஒருசார் அறத்தொடு வேதம் புணர்தவம் முற்றி***
***விறல்புகழ் நிற்ப விளங்கிய வேள்வித்***
***திறத்தின் திரிவு இல்லா அந்தணர் ஈண்பு***
***அறத்தின் திரியா பதி"***[59]

என்றும் குறிப்பிடுகின்றது. இவ்வாறு இலக்கியங்களில் அமையும் சான்றுகள் அந்தணர்கள் தங்கள் அறத்தில் நிலை வழுவாது நின்று தம் தொழிலை மேற்கொண்ட காரணத்தால் தான் அவர்களைக் கடைப்பிடித்து வாழும் பிறரும் அறக்கோட்பாட்டுடன் வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

வணிகர்கள் தாம் செய்யும் வணிகத் தொழிலில் இருந்து அத்தொழில் மூலமாக அறச்செயல்கள் பலவற்றையும் செய்து வாழ்ந்தனர்.

***“கொலை கடிந்தும் களவு நீக்கியும்***
***அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்***
***நல் ஆனொடு பகடு ஓம்பியும்***
***நான்மறையோர் புகழ் பரப்பியும்***
***பண்ணியம் அட்டியும் பசுபதம் கொடுத்தும்***
***கொடுமேழி நசை உழவர்***
***நெடுநுகத்துப் பகல் போல***
***நடுவு நின்ற நல்நெஞ்சினோர்***
***வடுவஞ்சி வாய் மொழிந்து***
***தமவும் பிறவும் ஒப்ப நாடி***
***கொள்வதூஉம் மிகை கொளாது***
***கொடுப்பதூஉம் குறை கொடாது***
***பல்பண்டம் பகர்ந்து வீசும்***
***தொல் கொண்டித் துவன்று இருக்கை”[60]***

பட்டினப்பாலையில் இடம்பெறும் மேற்கண்ட அடிகளில் வணிகர்களின் ஒழுகலாறுகள் பலவும் எடுத்துக் காட்டப்படுகின்றன. நடுவுநிலை தவறாத வணிகர்கள் தாம் கொண்ட அறத்தன்மை உடைய நன்மனத்தின் காரணமாக, கொலை செய்வதைக் கண்டித்தார்கள். களவு இல்லாத சூழலை உருவாக்கினார்கள். தேவர்களுக்குப் பூசைகள் செய்தனர், யாகங்கள் நடத்தினர், யாகப்பலி உணவு இட்டனர். அந்தணர்களுக்குக் காளைகளுடன் பசுக்களை வழங்கினர். நடுவுநிலை மனம் உடையவர்களாகத் திகழ்ந்தனர். மக்களிடம் பொய்

கூறாமல் வணிகத்தில் தவறாமல் நன்றாகத் தம் தொழிலை மேற்கொண்டனர் என்னும் பொருள் விளக்கத்தினைப் பெறுகிறது. வணிகர்கள் நல்லறம் உடைய மனத்தராய் இருந்ததனால் தாம் மேற்கொண்ட அறச்செயல்களால் சமுதாயத்தில் நன்மைகள் நடைபெறுமாறு செய்து தத்தம் தூய மனத்தால் சமுதாயம் முழுமைக்கும் தனிமனித ஒழுக்கம் சிறப்பாக அமையுமாறு அறங்களை மேற்கொண்டனர்.

நாட்டு மக்கள் இனிதாக வாழ உணவு தேவை. அவ்வுணவை அறவழியில் வாழ்ந்து விளைவித்துத் தருபவர்களாக உழவர்கள் இருந்தனர். வேளாளர்களின் உழவுத்தொழிலே அரசு வாகனத்திற்கு அச்சாணியாய் விளங்கியது எனலாம். நாட்டு நல்லாட்சிக்கு உழவுத் தொழில் அவசியம் என்பதனால் வெள்ளைக்குடி நாகனார் உழவர்களைக் காத்தல் வேண்டும் என்னும் கருத்தை முன் வைக்கிறார்.

***“வருபடை தாங்கி பெயர்புறத்து ஆர்த்து***
***பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை***
***ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே***
***மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்***
***இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்***
***காவலர்ப் பழிக்கும் இக் கண்ணகல் ஞாலம்***
***அதுநற்கு அறிந்தனை ஆயின் நீயும்***
***நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது***
***பகடு புறந்தருநர் பாரம் ஓம்பி***
***குடிபுறந் தருகுவை ஆயின், நின்***
***அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே”[61]***

உழவர்கள் நற்குணம் உடையோர்கள். அவர்களின் நடுநிலைக்குணம் உலகிற்கு உணவை விளைவித்துத் தந்தது. அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வரும் தத்தம் தனிமனித அறக்கோட்பாட்டில் பிழைக்காமல் தம் அறங்களைத் திறம்பட மேற்கொண்டு, தாம் மேற்கொண்ட சிறந்த அறங்கள் சமுதாய அறங்களாக மாற்றமடைய வழிவகுத்தனர்.

## 5.9. நல்வழி காட்டிய அறவோர்

தனிமனிதர்கள் பலரும் பண்டைக் காலத்தில் சமுதாய மேம்பாட்டுக்காகப் பெருமளவில் உதவியிருக்கின்றனர். குறிப்பாக அறிவர், அருந்தவர், சான்றோர் ஆகியோரை இதற்குத் தக்க சான்றாகச் சுட்டலாம். தவவாழ்க்கையை விரும்பி மேற்கொண்டவர்கள் இளமை, பொருள், உடல் ஆகியவற்றின் நிலையாமையினை வலியுறுத்தினர். தாங்கள் நிலையாக ஓரிடத்தில் தங்கி இருக்காமல் விரும்பிய இடங்களுக்குச் சென்று நல்ல கருத்துக்களை மக்களுக்கு உரைத்தார்கள். முனிவர்கள், அந்தணர்கள் மற்றும் தவத்தில் ஈடுபட்டோர் ஆகியோர் இத்தகைய வாழ்க்கையைக் கொண்டிருந்தனர்.

உலகின் உண்மை நிலையினையும் உடலின் உண்மை நிலையினையும் அறிந்திருந்ததன் காரணமாக இவர்கள் பற்றற்ற வாழ்க்கை வாழ்ந்தனர். இவற்றின் நிலையாமையையும் தாம் வாழ்ந்த வாழ்க்கையின் மூலமாக தம்மைச் சந்திக்க வந்தவர்களுக்கும் பிறருக்கும் உலக இயல்பினை எடுத்துக் கூறுவதை நோக்கமாகக் கொண்டிருந்தனர். "உலகிற்கு நன்மை தீமை ஆகியனவற்றை உணர்த்திய காரணத்தால் இவர்கள் திறவோர் எனப்பட்டனர்"[62] எனப் புறநானூறு மொழிகிறது.

இத்தகைய முனிவர்களும், தவயோகிகளும், அந்தணர்களும், சான்றாண்மை, நற்குணம், மன அடக்கம், ஐம்புலன் அடக்கம் உடையோராய் இருந்த காரணத்தினால் தான் இவர்கள் மக்களுக்கு நல்வழி காட்டுவதை நோக்கமாகக் கொண்டிருந்தனர். பெரியோர்களின் அறவுரைகளையும் வழிகாட்டுதல்களையும் மேற்கொண்ட அரசரும் பிறரும் அவர்கள் காட்டிய வழியில் நடந்து நற்குணம் உடையவர்களாய், நல்ல சமுதாயம் மலர்ந்திடவும், அதன் மேம்பாட்டிற்கு உதவினர்.

### 5.9.1 . உறவு பேணல்

உறவுகளைப் பேணுவதில் தனிமனித அறம் குறிப்பிடத்தக்க நிலை வகிக்கிறது. தனிமனிதன் தான் சார்ந்த அனைவரையும் அரவணைத்துச் செல்ல வேண்டியவனாக இருக்கிறான். பிறரின் நலம் பேணுகின்ற பண்பு பரந்த அளவில் சங்ககாலத்தில் கடைப்பிடிக்கப்பட்டமையினைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிய முடிகிறது. தலைவன், தலைவி, தோழி முதலான பாத்திரங்களும் இல்லற வாழ்க்கையில் அறச்சிந்தனை மிக்கவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர். வினை முடிந்து மீள்கின்ற தலைவனிடம் தேர்ப்பாகன் அவன் மனநிலை கண்டு ஆறுதலாகப் பேசுவதும் தலைவன் தேர்ப்பாகனுடனும் பாங்கனுடனும் உறவாடுவதும், தோழி, செவிலிக்கும் தலைவிக்கும் நற்றாய்க்கும் நல்லுறவு பேணும் பாலமாக விளங்குவதும் இங்குக் குறிபிடத்தக்கதாகும்.

***“வான் வழங்கியற்கை வளிபூட் டினையோ***
***மானுரு வாகநின் மனம்பூட் டினையோ***
***வுரைமதி வாழியோ வலவ”[63]***

***“உள்ளிலோர்க்கு வலியாகுவன்***
***கேளிலோர்க்குக் கேளாகுவன்”[64]***

என்னும் சங்கச் சான்றுகள் பண்டைக் காலத்தில் உறவு அறம் பேணப்பட்டமைக்குச் சான்றுகளாக விளங்குகின்றன. தனிமனிதன் அங்கம் வகிக்கும் குடும்பத்தில அவன் பேணும் உறவுகள் ஒவ்வொன்றும் தன் எல்லையில் விரிவடைந்து சமூக மேம்பாட்டிற்கு உதவுகின்றன.

### 5.9.2. சமநிலை

மனிதமனம் ஒரு நிலைத்த தன்மை உடையது அல்ல, இதனால் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக உணர முடியாது. இன்பம் வந்த காலத்து மகிழ்வதும், துன்பம் வந்த காலத்து வருந்துவதும் இதன் பொது இயல்பாகும்.

இச்சமநிலையில்லாத் தன்மை காரணமாகவே மனிதனுக்குப் பல துன்பங்கள் வந்தடைகின்றன. பிறந்தது முதல் இறக்கும் வரை வாழ்க்கையில் கிடைக்கும் அனுபவங்கள் மனிதனைச் செம்மைப்படுத்துகின்றன. வாழ்க்கையில் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்னும் பாடத்தை வழங்குகின்றன. இன்பத்தை விடத் துன்பமே மனிதனைப் பக்குவப்படுத்துகின்றது. துன்பங்களால் மனதில் ஒரு சமநிலை உருவாகிறது. படிப்பினையும், அறிவு முதிர்ச்சியும், உலக அனுபவங்களும், உறவு அனுபவங்களும் மனிதனைப் பண்படுத்துகின்றன. யாதும் ஊரே யாவரும் கேளீர் என்னும் சிந்தனை பிறக்க இத்தகை மனநிலையே காரணம். ''பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி''[65] என்னும் பாடலடி பெரியோர்கள் பாதுகாத்தலுக்கு உரியவர்கள் என்பதையும் சிறியோர்கள் வழிகாட்டலுக்கு உரியவர்கள் என்பதைக் காட்டுகின்றது.

வெற்றியிலும் தோல்வியிலும் மனம் துடிக்காத சமநிலை என்றும் வெற்றி தருவதாகும்.

***''உடன்று மேல்வந்த வம்ப மள்ளரை***
***வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே அவரை***
***அழுங்கப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்***
***கவிழ்ந்து நிலம்சேர அட்டதை***
***மகிழ்ந்தன்றும் இகழ்ந்தன்றும் அதனினு மிலனே''[66]***

இப்பாடலில் பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவர்கள் போர்க்களத்தில் போர்புரிந்தபோது ஏற்பட்ட வெற்றியில் வெற்றிக்காக, பெருமிதமோ மகிழ்ச்சியோ கொள்ளாத சமமான மனநிலையில் இருந்தான் என்பதைக் காட்டுகிறது. நாடாளும் மன்னன் என்னும் தனிமனிதன் மூலமாக ஆசைகளில் வீழாத மனமும், மனஉறுதியும் சமநிலையுடன் விளக்கப்பட்டு இவ்வாறு இருக்க வேண்டும் என்னும் பாடம் புலவர்களால் உணர்த்தப்படுகிறது.

மனிதன் தான் நேர்மையானவனாக, நடுநிலை உடைய மனத்தை உடையவனாக இருக்கிறபோது எதனையும் அறக்கோட்பாட்டுன் எதிர்கொள்ளல் எளிது. பண்டைய புலவர்கள் நடுவுநிலையுடன் இருந்த காரணத்தால்தான் மன்னர்களுக்கே அறிவுரை கூறும் மாண்பினைப் பெற்றிருந்தனர். எத்தகைய சூழலிலும் எதற்கும் அச்சம் கொள்ளாமல் தம் கருத்தைத் தெளிவாக எடுத்துரைத்தனர்.

***"மண்கெழு தானை ஒண்கேழ் வேந்தர்***
***வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே***
***எம்மால் வியக்கப் படுஉ மோரே***
***சீறூர் மன்னர் ஆயினும் எம்வயின்***
***பாடறிந்து ஒழுகும் பண்பினாரே"[67]***

நாடாளும் மன்னனாயினும் முறையறிந்து நடக்க வேண்டும் என்னும் சிந்தனை பாடலில் பதிவுபெற்றுள்ளது. மன்னர்கள் தாங்களிடம் உள்ள செல்வம் குறைவதைப் பற்றியோ, மிகுவதைப் பற்றியோ என்றும் கவலை கொள்ளவில்லை. இருக்கின்ற பொருள் சிறிதாக இருந்தாலும் கூட அதையும் கொடுத்து மகிழும் கொடைத்தன்மை கொண்ட பண்பட்ட மனம் இருந்தமையை,

***"நிரம்பாது கொடுக்கும் செல்வமும் இலனே***
***இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே"[68]***

என்னும் பாடலடிகளால் புலனாகிறது. எளியோரையும் வளம் உள்ளோரையும் சமமாகக் கருதிய பண்டைய மன்னர்களின் மனமாண்பு மனிதன் எத்தகைய சூழலிலும் சமமான மனநிலை உடையவனாக இருத்தல் வேண்டும் என்பதை அறிவித்து, உலகவாழ்வில் தனிமனித அறத்தைச் சமுதாய மேம்பாட்டிற்குப் பயனுள்ளதாக்கும் பான்மை முன் வைக்கப்படுகிறது.

### 5.9.3. மனப்பக்குவம்

முறையறிந்து செயலாற்றும் மனப்பக்குவம் தனிமனிதனுக்கும் இன்றியமையாதது. மனப்பக்குவமே தனிமனித அறம் சிறக்க முக்கியக் காரணமாகும். மனப்பக்குவம் இல்லாத மனிதரிடம் நல்ல செயல்களையோ, நல்ல செயல் விளைவுகளையோ எதிர்பார்த்தல் இயலாது. தனிமனிதன் சமூகத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகள் ஏராளமாக இருப்பதால் அவன் நற்குணம் உடையவனாய் இருந்தால்தான் நன்மை நிகழும். எண்ணங்களே செயல் வடிவம் பெறுகின்ற தன்மையன என்பதால் நினைவில் தூய்மை வலியுறுத்தப்படுகிறது.

***"சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்***
***சுற்றமாச் சூழ்ந்து விடும்"***[69]

***"நிலந்தியல்பான் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு***
***இனத்தியல்பு அதுஆகும் அறிவு"***[70]

மேற்கண்ட இரு திருக்குறள்களும் மனிதத் தோற்றத்தால், வாழ்கிற சூழலால் மனம் மாறுபடும் தன்மையை விளக்குவதால் தீய சிந்தனைகளையும் தேவையற்ற சூழல்களையும் விட்டு விலகித் தூய்மையான அறத்தைப் பேண வேண்டியது அவசியம். "ஒருவன் இது சரியான செயல். இதனால் அனைவரும் பயனடையக் கூடும். ஆதலால் இதனைச் செய்யக் கடமைப்பட்டவன் என்ற அறிவோடும் முழு மனத்தோடும் முடிவு செய்து செயற்படும் நிலை மனச்சான்ற நிலையாகும். மனச்சான்று நிலை அற உணர்வு வளர்ச்சியின் இறுதிநிலை ஆகும்"[71] என வாழ்வியல் களஞ்சியம் கூறும் விளக்கம் மனிதன் மனப்பக்குவம் உடையவனாய் இருக்க வேண்டிய அவசியத்தையும் அதனால் விளையும் பயன்களையும் உணர்த்துகிறது.

மனப்பக்குவம் பெற்ற தனிமனிதனால்தான் தனக்கும் தன் உறவினர்களுக்கும் பிறருக்கும் உதவியாக இருக்க இயலும். அதனாலேயே

வள்ளுவர் "தன் இன்பத்தைப் பாராமல் தன்னைச் சார்ந்தவர்களின் துன்பம் துடைக்கும் ஒருவன் அவர்களைத் தாங்கி நிற்கும் தூண் போன்றவன் ஆவான்"[72] என்று குறிப்பிடுவர். மனிதன் இப்படித்தான் வாழ வேண்டும் என்னும் சட்ட திட்டங்கள் பண்பாட்டாலும், நாகரிகத்தாலும் வளர்ந்தவை. தனிமனித நடத்தை, சமுதாய நடத்தை என்பவை எல்லாம் நீண்ட காலமாக வழக்கில் இருந்து தொடர்ந்து வழிவழியாகக் கடைப்பிடிக்கப்படுபவை. எனவே, தனிமனிதன் தன் முன்னோர் கடைப்பிடித்த அறக்கோட்பாடுகளையும் அறமுறைமைகளையும் கடைப்பிடித்துப் பெறும் மனபக்குவம் அவன் மட்டுமல்லாது அவன் சார்ந்த சமுதாயத்திற்கும் மேம்பாட்டை வழங்கும் தன்மையுடையது.

### 5.9.4. நற்குணம்

நீரின் பண்பு நிலத்தின் தன்மையால் மாற்றமடைவது போல், மனிதனின் நற்குணங்களும் செயல்களும் அவன் வாழ்கின்ற வாழ்க்கைச் சூழலால் மாற்றமடையும். இதனால் தனிமனிதன் எந்நிலையிலும் தன் நல் இயல்பை இழக்காமல் காத்துக் கொள்ளல் அறமுறைப்பட்டதாகும். மனிதன் தன் நற்குணங்களை இழப்பதற்கான வாழ்க்கைச் சூழல் சமூக வாழ்வில் மிகுதியும் உண்டு என்பதனால் அதனை இழக்காது கட்டிக் காத்தலிலேயே தனிமனிதச் சிறப்பு அடங்கியுள்ளது.

*"முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை*
*நேர்வரும் குறைய கலம்கெடின் புணரும்*
*சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்*
*மாசறக் கழீஇய வயங்குபுகழ் நிறுத்தல்*
*ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை*
*எளிய என்னார் தொல்மருங்கு அறிஞர்"*[73]

மேற்கண்ட குறிஞ்சிப்பாட்டு இலக்கியத்தின் அடிகள் எத்தகைய நற்குணம் உடையவராக இருந்தபோதும் தம் நற்குணத்தை இழந்துவிட்டால் மீண்டும் பெற இயலாது என்பதை வலியுறுத்துகிறது. இரா. அனுராதா அவர்கள், "தனிமனித அறம் முழுக்க முழுக்க வாழ்க்கை சார்ந்தது. இல்லறம் சார்ந்து அமைகின்ற செயல்கள் எல்லாம் குடும்பத்தின் அங்கத்தினர்களைச் சார்ந்து இருப்பதால் ஒவ்வொருவரும் தனது கடமையைச் சரியாகச் செய்ய வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றனர். ஒவ்வொருவருடைய செயல்களும் சரியான நோக்கில் செயல்படுகின்றபோது தனிமனிதனின் அறங்கள் சமூகத்தை நோக்கி விரிவடையும் தன்மை உடையவை"[74] என்று குறிப்பிடுவர். அதனால் ஒருவனின் நல்லியல்பே அவனுடைய நன்னிலைக்கும், அவனைச் சார்ந்த சமுதாயம் நற்சமுதாயமாக அமைவதற்கும் துணைநிற்கும் என்பது இதன் மூலம் அறியப்படுகிறது.

### 5.9.5. குற்றம் பொறுத்தல்

குற்றம் பொறுத்தலில் தனிமனிதனின் பங்கு இன்றியமையாதது ஆகும். சமூக அமைதியில் தனிமனிதனுக்குப் பெரும்பங்கு உண்டு என்பதால் தனிமனிதன் மிகுந்த பொறுமையும் மனப்பக்குவமும் வேண்டுபவனாக இருக்கிறான். வள்ளுவர் தனிமனிதனுக்கு வேண்டிய பொறுமையின் அவசியத்தை,

***"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை***
***இகழ்வார்ப் பொறுத்தல் தலை"[75]***

என்னும் குறளில் வலியுறுத்தியிருக்கின்றார். சங்க இலக்கியம் குற்றம் பொறுத்தலைத் தலையாய நிலையில் வைத்துக் குறிப்பிட்டிருக்கிறது.

***"தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்***
***தாமறிந்து உணர்க என்ப"[76]***

இப்பாடலடிகள் குற்றம் செய்தவரைத் தண்டித்தலினும் அவர்களே குற்றத்தை உணர்ந்து திருந்த வாய்ப்பு ஏற்படுத்தித் தர வேண்டும் என்பதை உணர்த்தியிருக்கிறது.

### 5.9.6. பொதுநலம்

பொதுநலம் பேணுவதும் சமுதாயத்தில் நல்ல விளைவுகளை ஏற்படுத்தி மாற்றங்களைக் கொண்டு வருவதும் தனிமனிதனின் செயல்களில் இருந்து தொடங்குகின்றது. தனிமனிதன் தூய்மையான மனத்துடன் மேற்கொள்ளும் அறச்செயல் உலகளாவிய நிலையில் பரந்து விரிந்து நலம் தரும் தன்மையது.

தனிமனிதனால் சமூக மேம்பாடு நிகழ்வதைச் சங்க இலக்கியம் சான்றோர்களின் உயரிய குணநலனால் முன்வைத்திருக்கிறது.

***“உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்***
***அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்***
***தமியர் உண்டலும் இலரே முனிவிலர்***
***துஞ்சாலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்***
***புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்***
***உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்***
***அன்ன மாட்சி அனைய ராகித்***
***தமக்கென முயலா நோன்தாள்***
***பிறர்க்கென முயலுநர் உண்மை யானே”[77]***

இப்பாடலில் பகிர்ந்து கொடுத்து உண்ணல், புகழை விரும்புதல், பழியை வெறுத்தல், கோபமின்மை எனச் சான்றோர்களின் உயரிய குணங்கள் விளக்கப்பட்டுள்ளன. இக்குணங்கள் தனிமனிதர்கள் ஒவ்வொருவரும் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகத்தக்கவை ஆகும்.

***“தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்”[78]***

என்னும் அகப்பாடல் அடி, தனக்கென வாழாமல் பிறர் நலனுக்காக வாழ வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகின்றது.

***“இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்***
***தருகென விழையாத் தாவினெஞ் சத்துப்***
***பகுத்தூண் தொகுத் தா ண்மைப்***
***பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே”79***

இப்பாடல் எத்தகைய உணவாயினும் தனித்து உண்ணாமல் பகிர்ந்து கொடுத்து உண்ண வேண்டியதன் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. ஆக்கப்பூர்வமான செயல்களுக்கும் பயனுள்ள செயல்களுக்கும் தனிமனிதன் சிறந்த தொடக்கத்தைத் தர இயலும். தனிமனிதன் சிறந்த அறத்திற்குத் தரும் தொடக்கம் பல நல்ல செயல்களுக்கும் களம் அமைத்துக் கொடுத்துச் சமுதாய மேம்பாட்டிற்கு உதவுகின்றது.

### 5.9.7. *சமுதாய நல்லிணக்கம்*

சமுதாயம் அமைதியாக விளங்கவும் அதில் நற்செயல்கள் பல நடைபெறவும் சமுதாய நல்லிணக்கம் முக்கியமானதாகும். ஒருவன் தனிமனிதனிடம் கொள்கின்ற தொடர்பும், குடும்பத்தில் பெறப்படும் படிப்பினைகளும் வாழ்வியல் அனுபவங்களும் சமூக நல்லிணக்கத்தை ஒருவரின் மனத்தில் தோற்றுவிக்கின்றன. குடும்பத்தில் வளர்கின்ற குழந்தைகள் அறக்கோட்பாட்டின்படி நல்ல, தீய செயல்கள் இவை என்று உணர்த்தி வளர்க்கப்பட வேண்டும். நல்ல குடியில் பிறந்த ஒருவன் தன் குடிக்கேற்ற நற்செயல்களில் ஈடுபடுவான் என்பதை,

***“குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியல***
***னெடுநா மொழியன் அன்பின் எனநீ”80***

என்னும் அகநானூற்றுப் பாடலடிகள் விளக்குகின்றன. தனிமனித, குடும்ப வாழ்வின் செயல்பாடுகள் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய அறங்கள்

ஆகியவற்றைச் சரியாகக் கடைப்பிடித்தால்தான் சமூக நல்லிணக்கத்தை உருவாக்க இயலும். அது சமுதாயம் முழுமைக்கும் பயன் உடையதாய் அமையும்.

### 5.9.8. வழிபாடு

தனிமனிதன் வழிபாட்டுச் சிந்தனை மிக்கவனாக இருக்க வேண்டும். தனிமனிதன் தன்னளவில் தானே செம்மைப்படுத்திக் கொள்வதற்கு வழிபாடு மிகவும் உதவுகின்றது. இயற்கை வழிபாடு சிறந்திருந்த பண்டைய நாளில் மக்கள் இயற்கை சான்ற வழிபாட்டு முறைகள் விழாக்கள் ஆகியவற்றின் மூலம் சிறந்த அறக்கோட்பாடுகளைச் சமுதாயத்தில் நிலைநிறுத்தினர். அக்கோட்பாடுகள் தனிமனித அறம் சிறக்க உதவின. விருந்தினர்கள் இல்லத்திற்கு வர வேண்டும். அறம் செய்ய வேண்டும் என எண்ணி நடுகல் வணக்கம் நிகழ்த்தப்பட்டமையினைப் புறநானூறு குறிப்பிடுகிறது.

***"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி***
***ஒளிறுஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தெனக்***
***கல்லே பரவின் அல்லது***
***நெல்உகுத்துப் பரவும் கடவுளும் இலவே"[81]***

தனிமனிதர்கள் பலரும் ஒன்று சேர்ந்து மனமகிழ்ச்சிக்காகவும் அமைதிக்காகவும் அறத்திற்காகவும் வழிபாடு நிகழ்த்தியமையை பட்டினப்பாலை பரதவர்களின் வாழ்வியலை மையமிட்டு விளக்கியிருக்கின்றது.

***"சினைச் சுறவின் கோடு நட்டு***
***மனைச் சேர்த்திய வல்லணங்கினான்***
***மடல்தாழை மலர் மலைந்தும்***
***பிணர்ப் பெண்ணைப் பிழிமகிழ்ந்தும்***
***புன்தலை இரும்பரதவர்***
***பைந்தழை மாமகளிரொடு***
***பாஇரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது***
***உவவு மடிந்து உண்டாடியும்"[82]***

வழிபாட்டிடம் மனிதனின் ஆன்ம அமைதிக்கும், அறத்திற்கும் உறுதுணை புரிவதாகும். மனிதன் தன் அறக்கோட்பாட்டை இழந்தால் அறம் தழைக்கும் வழிபாட்டிடமும் தன் நிலை மாறும். தெய்வம் கோயில் இருக்கின்ற இடத்தை விட்டு நீங்கி விடும் என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

***"கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்***
***பலிகண் மாறிய பாழ்படு பொதியில்"***[83]

மனிதன் தன் மனத்தை அமைதிப்படுத்தவும், நல்லறங்களை மேற்கொள்ளவும் தக்க துணையாகக் கடவுள் வழிபாட்டைக் கொள்ளல் வேண்டும். உலகில் வழங்கும் அறங்களுடன் இறைவழிபாடும் அறங்களைச் செம்மைப்படுத்த இயலும் என்பதால் வழிபாடு நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்திருக்கிறது.

### 5.9.10. *பண்பின்மை தவிர்த்தல்*

தனிமனிதன் நல்லறங்களை மேற்கொள்வதற்கு உரியவன். அவனிடம் இருந்தே சமுதாய முன்னேற்றத்திற்கான சிந்தனைகள் ஏற்படுகின்றன. அதனால் தனிமனிதன் எதிர்கொள்ளும் சமுதாயத்தில் நல்லவை நடைபெற வேண்டுமானால் பண்பில்லாத செயல்களைத் தவிர்த்தல் நலம் தருவதாகும்.

சங்க இலக்கியங்களில் எத்தகைய ஒழுக்கங்கள் கடைப்பிடிக்கப்பட வேண்டும். எத்தகைய ஒழுக்கங்கள் விலக்கப்பட வேண்டும் என்னும் சிந்தனை விரிவான அளவில் பேசப்பட்டுள்ளது. தனிமனிதனின் சிந்தனை தடம் மாறும் போது அவன் தவறு செய்வதற்கான சூழல் ஏற்படுவதை,

***"கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்***
***ஒட்டை மனவ னுரமிலி"***[84]

என்னும் பரிபாடல் அடிகள் தெளிவாக்குகின்றன. வைகை ஆற்றில் நீராடும் பெண்ணின் மார்பை உற்றுநோக்கும் ஒருவனைப் பரிபாடல் ஓட்டை மனம் உடையவன் என்று குறிப்பிடுகிறது.

அகவாழ்வில் பொருள்தேடச் செல்லும் தலைவன் கடும் வெப்பம் மிக்க பாலை வழியைக் கடந்து செல்கிறான். அவ்வழியில் பொருள்களைப் பறித்துச் சூறையாடும் சூழலைக் கள்வர்கள் அறம் இன்றி நடந்து கொள்ளும் சூழலை,

***"அந்தம் செல்வோர் அலறத் தாக்கி***
***கைப்பொருள் வௌவும் களவேர் வாழ்க்கைக்***
***கொடியோர்"[85]***

என்னும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் விளக்குகின்றன. பிறர் அறியவில்லை என்று தவறு செய்தல் கூடாது. மனச்சாட்சி சான்றாக நிற்கும் என்னும் உண்மையைக் கலித்தொகை விளக்குகிறது.

***"நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அயலவர்***
***நெஞ்சத்துக் குறுகிய கரி கில்லை"[86]***

சங்ககாலம் எத்தனை அறச்சிந்தனைகளை எடுத்துரைத்த போதும் அறமல்லாச் செயல்களும் அக்காலத்தில் நடைபெற்றன என்பதற்கான சான்றுகளைத் தந்திருக்கிறது. அறமல்லாச் செயல்களை விலக்கி அறனுடைய செயல்களைப் போற்றி வாழ்வதே நல்ல வாழ்க்கையாகும். சங்க இலக்கியத்தில் கூறப்பட்டிருக்கும் தனிமனித அறங்கள் தனிமனிதன், குடும்பம், சமுதாயம் என உலகியல் நோக்கில் விரிந்து அனைவரும் கடைப்பிடிக்கத்தக்க நல்ல அறங்களாக நிலைபெற்றுள்ளன.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களில் தனிமனித வாழ்வில் அறமும், அறவழியில் ஈட்டப்படும் பொருளும், நல்ல பொருள் வழியாகப் பெறப்படும் நல்இன்பமும் வீடுபேற்றுக்கு வழியாகின்றன. தனிமனித வாழ்வில்

மேற்கொள்ளப்படும் அறங்கள் தனிமனிதர்களின் மனத்தை நற்சிந்தனைகள் விளையும் களமாக்கிக் குடும்பம், சமுதாயம் இவை இரண்டும் பயனுறும் வண்ணம் நல்ல விளைவினை ஏற்படுத்துகின்றது.

தனிமனித அறம் தனிமனிதனை மட்டும் சார்ந்ததல்ல. தனிமனிதன் சமூகத்தில் வாழ்பவன் என்பதுதான் தன்னளவில் தன் செயல்களை வழுக்கள் இன்றி ஒழுங்குபடுத்திக் கொண்டு செயல்படும்போது சமுதாயமும் நன்னிலை அடையும் என்பது பெறப்படுகிறது.

## 5.10. தொகுப்புரை

தனிமனிதன் சமுதாயத்தின் ஓர் அங்கம். தன்னளவில் அவன் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயல்பாடுகளும் சமுதாயத்தில் ஒருவிதத் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன என்பதால் தனிமனிதன் தன் மனத்தை நல்லறங்கள் விளையும் இடமாகச் சீர்திருத்திக் கொள்ளுதல் அவசியமாகிறது. பொருள் தனிமனித வாழ்க்கைக்கும் சமுதாய வாழ்வுக்கும் அவசியமானது என்பதால் ஒருவன் நல்வழியில் பொருளீட்டி அதனைப் பிறருக்கும் வழங்க வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது.

சமுதாய மதிப்புகளை உருவாக்குவதில் தனிமனிதனின் பங்களிப்பு முக்கியமானது. அன்பு, அருள், நடுவு நிலைமை, நட்பு, இன்பம், குடும்பப் பாதுகாப்பு, சமுதாய ஏற்பு, உரிமை, உலக அமைதி முதலானவற்றைப் பாதுகாக்க வேண்டியவனாகத் தனிமனிதன் இருக்கிறான். அடைக்கலகமாக வந்தவரைக் காத்தல், அறத்தைக் கைக்கொண்டு அன்புக்குரியாரைப் பிரியாமல் இருத்தல், உறவுகளைக் காத்தல், அறமுறையில் பொருளீட்டல், ஈதல் ஆகியன தனிமனிதனின் அறமுறைப்பட்ட கடமைகளாகும்.

சிறந்த சமுதாயம் அமைவதற்கும் நிலை பெறுவதற்குமான சூழல் தனிமனிதனிடம் இருந்து தொடங்குகிறது. இல்லற வாழ்வில் தோன்றும் தனிமனித அறங்கள் பலவும் குடும்பங்களின் பொது அறமாகிப் பின் அவை சமூகத்தில் மாற்றம் ஏற்படுத்தும் தன்மையதாகத் திகழ்கிறது. உயர்குடிப்பிறப்பு இயல்பாக அறத்திற்கு உதவும் பாங்குடையது. அன்பு உயிர்களை, குடும்பத்தை, சமுதாயத்தை ஒருங்கிணைக்கும் சக்தியாக விளங்குகிறது. நன்மை பொருந்திய நட்பு நல்லறங்கள் விளைய காரணமாகிறது. பொறுமைக் குணம் தீமைகளை அகற்றி, நற்சமுதாயம் அமையத் துணை நிற்கிறது. தீய சொற்களை விலக்கி இனிய சொற்களைப் பேசுதல் அனைவரையும் ஒருங்கிணைக்கும் சக்தியாகச் செயலாற்றுகிறது.

பண்டைய சமுதாயத்தில் முனிவர், அறவோர், அந்தணர், யோகிகள் மக்களுக்கு உரைத்த அறங்கள் தனிமனித அறங்களாக அமைந்துள்ளன. உறவுகளைப் பேணுவதன் மூலம் சமுதாய மேம்பாட்டடையும் தீமைகளற்ற நடுநிலையான மனம் நல்லறம் விளைவிக்கும் தன்மை கொண்டது. தனிமனித அறம் சமுதாய நல்லிணக்கத்துக்கு உதவும் பான்மை விளக்கப்படுகிறது. வழிபாட்டுச் சிந்தனை மனத்தைத் தெளிவாக்கும் மனதைத் தீய எண்ணங்களில் இருந்து விலக்கும்.

## அடிக்குறிப்புகள்

1. பாஸ்கல் கிஸ்பர்ட், ஜெ. நாராயணன் (மொ.பெ.), சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.69.
2. மேலது. ப.77.
3. மேலது. ப.80.

4. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.19.

5. புறம். 189.

6. கு.வெ. பாலசுப்பிரமணியன், மு.நூல், ப.20.

7. புறம். 316.

8. கு.வெ. பாலசுப்பிரமணியன், மு.நூல், ப.82.

9. புறம். 31.

10. புறம். 160.

11. கலி. 111.

12. குறுந். 295.

13. கு.வெ. பாலசுப்பிரமணியன், மு.நூல், ப.26.

14. புறம். 55.

15. Davis Dressier & M, Willson, Sociology, Pg. 52-53.

16. கு.வெ. பாலசுப்பிரமணியன், மு.நூல், ப.108.

17. புறம். 69:5.

18. புறம். 9:6.

19. புறம். 24:5–7.

20. புறம். 237:16–20.

21. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.229.

22. கலி. 11:1–5.

23. நற். 397:7–9.

24. குறுந். 49:3–5.

25. தொல். கற்பு. 6.

26. தொல். பொருள். களவு. 24:33–35.

27. புறம். 24:26–28.

28. புறம். 27:1–6.

29. மு. சண்முகம்பிள்ளை, மு.நூல், ப.259.

30. குறுந். 40:1–5.

31. புறம். 5:5–7.

32. புறம். 216.

33. குறுந். 313:4–5.

34. ஐங். 184:4.

35. நற். 109:1–2.

36. அகம். 205:1–2.

37. மு. சண்முகம் பிள்ளை, மு.நூல், ப.263.

38. நற். 315:8–10.

39. நற். 108:6.

40. நற். 32:8–9.

41. புறம். 191:6–7.

42. கலி. 32:8.

43. பதிற். 15:29.

44. பதிற். 21:4.

45. பதிற். 392:2.

46. நற். 289:2–3.

47. பதிற். 18:11–12.

48. பதிற். 63:6–7.

49. அகம். 349:3–4.

50. குறிஞ். 138.

51. நற். 28:3–4.

52. குறுந். 115:1.

53. கலி. 34:4–5.

54. கலி. 149:6–7.

55. அகம். 268:13–14.

56. புறம். 109.

57. சிறுபாண். 207–220.

58. பதிற். 24:6–8.

59. பரி.திரட்டு. 1:18–21.

60. பட்டினப். 199–212.

61. புறம். 35:24–34.

62. புறம். 192.

63. அகம். 384.

64. புறம். 396.

65. பதிற். 79.

66. புறம். 77.

67. புறம். 197.

68. புறம். 180.

69. குறள். 451.

70. மேலது. 452.

71. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி –2, ப.49.

72. குறள். 615.

73. குறிஞ்சி. 13–18.

74. இரா. அனுராதா, சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள், ப.73.

75. குறள். 151.

76. நற். 116.

77. புறம். 182.

78. அகம். 54.

79. பதிற். 38.

80. அகம். 352.

81. புறம். 335.

82. பட்டினப். 86–93.

83. புறம். 52.

84. பரி. 12.

85. பெரும். 39–41.

86. கலி. 3.

*****

# முடிவுரை

'சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்' என்னும் தலைப்பிலமைந்த இந்த ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் இப்பகுதியில் தொகுத்துரைக்கப்படுகின்றன.

நல்ல செயல்களின் தொகுதி அறம் என்று அழைக்கப்படுகின்றது. அறு என்னும் வினை அடியை முதலாகக் கொண்ட அறம் நன்மையை முதலாகக் கொண்டது. நல்ல மனத்தில் தோன்றுகின்ற சிந்தனைகளின் வெளிப்பாட்டால் அறம் பிறக்கிறது. வள்ளுவன் வழியில் அறம் தூய்மையான மனத்தில் இருந்து பிறக்கிறது. மனத்துக்கண் மாசிலன் ஆதல் அறமாகும். அறங்கள் தனிமனித அறம், குடும்ப அறம், சமுதாய அறம், உலகளாவிய அறம் எனப் பலவகைப்படுகிறது.

தனிமனித மனமே அறத்தின் தொடக்கத்திற்குக் காரணமாக அமைவதனால் தனிமனித அறம் குறிப்பாகச் சிந்திக்கத்தக்க ஒன்றாக அமைந்திருக்கிறது. மிகப்பெரிய சாதனைகளை உருவாக்கும் நற்சிந்தனைகளும் அழிவுக்குக் காரணமான தீய சிந்தனைகளும் மனத்தைக் களமாகக் கொண்டு பிறப்பதனால் தனிமனித மனம் கவனிக்கத்தக்க ஒன்றாகிறது.

தனிமனித அறம் மனம், சொல், செயல் என்னும் மூன்று களங்களில் செயல்படுகின்றது. தூய்மையான மனத்தில் இருந்து பிறந்த சிந்தனையால் நற்சொல்லும், நற்சொல்லின் பிறப்பால் நல்ல செயல்களும் நடைபெற ஏதுவாகின்றது. அறச்செயல் செய்வதற்கான முயற்சியும் செயல்பாடும் தனிமனிதனில் இருந்து தொடங்குகின்றது. அதனால் தனிமனிதனுக்கு

அறக்கோட்பாடு இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. தனிமனித ஒழுக்கமே குடும்ப, சமுதாய, உலகளாவிய அறமாக மாற்றமடையும் என்பதனால் தனிமனிதன் மிக்க கவனமுடன் செயலாற்ற வேண்டியவனாக இருக்கிறான்.

மனிதர்களின் புறத்தோற்றத்தைக் கொண்டு இவர் நல்லவர், இவர் கெட்டவர் என்று வரையறை செய்ய இயலாது. ஆனால் மனிதனின் மனம், சொல், செயல் இவற்றின் மூலம் வெளிப்படும் அவனுடைய நடத்தையால் மட்டுமே குணநலன்களை அறிந்து கொள்ளலாம்.

மனிதமனம் நன்மைக்கும் தீமைக்குமான சிந்தனைகள் தோன்றும் களமாக அமைந்திருக்கிறது. தனிமனித மனத்தில் எழும் சிந்தனைகள் வலிமையானவை என்பதனால் நன்மைகள் நடைபெறும் பொருட்டு நல்ல செயல்களை மட்டும் சிந்திக்கும் களமாக மனத்தை மாற்றுவது அவசியமாகும். நடுநிலை உடைய மனிதன் தன் நடுநிலை உடைய மனச்சாட்சியின்படி அறத்தைக் கடைப்பிடிக்க வேண்டியவன் ஆகிறான். மனத்தூய்மையே அறத்தின் தொடக்கமாக அமைவதனால் மக்கள் அனைவரும் அறத்தைக் காக்க வேண்டிய பொறுப்புக்கு ஆளாகின்றனர்.

பண்டைய சங்க இலக்கியங்களில் இல்லறவாழ்வில் ஈடுபட்டுள்ள தனிமனிதர்கள் ஒவ்வொருவரும் தம் மன அளவில் தூய்மையைக் கடைப்பிடித்து வந்துள்ளனர். கற்பு ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான நிலையில் உணர்த்தப்பட்ட காரணத்தால் அறம் தனிமனித மனத்தின் சாரமாக அமைந்திருக்கிறது. வாழ்வில் ஒழுக்கமே முக்கியமானது. மனத்தின் வழியாக உருவாகும் சிந்தனையே செயலாகும் என்பதால் மனத்தில் தூய்மை நிலை வேண்டும் என்பது உணர்த்தப்படுகிறது. அன்பு, அருள், பொறுமை, விட்டுக்கொடுத்தல், ஈகைப்பண்பு, அடைக்கலம் கொடுக்கும் எண்ணம் முதலானவை பிறக்கும் இடம் மனம் என்பதனால் அறத்துக்கு மனத்தின் பங்களிப்பு அவசியமாகிறது.

தூய்மையான நட்பு, நட்பு சார்ந்த சிந்தனைகளின் பிறப்பு ஆகியவற்றுக்கும் உண்மையின் பிறப்புக்கும் மனம் காரணமாகிறது. வாழ்க்கையில் நிகழும் நிகழ்வுகளுக்கு மனம் சாட்சியாய் நின்று செயலாற்றுகிறது.

மனித மனத்தில் உருவாகும் சிந்தனை அதன்வழிப் பிறக்கின்ற சொற்கள் அதுதொடர்பான செயல்கள் என மூன்று நிலைகளுக்கும் மனம் தூண்டுகோலாய் அமைகின்றது. வாயில் இருந்து பிறக்கின்ற சொற்கள் செயலுக்கு அடிப்படையாகின்றமையால் பண்டைய புலவர்கள் சீரிய தம் சொல்லாற்றலின் காரணமாக அறிவையும் மனத்தையும் உழுது நற்சிந்தனைகளை விதைத்தனர். இக்காரணத்தால் இவர்கள் புலனேருழவர் எனப்பட்டனர். அன்றைய நிலையில் சொன்ன சொல்லைக் காப்பது ஒரு பேரறமாகக் கருதப்பட்டது.

ஒருவருக்கு நன்மையும் தீமையும் அவர் பேசுகின்ற பேச்சினால் வருவதனால் பேச்சில் கவனம் தேவைப்பட்டது. அதனால் பேச்சறம் பேணுதல் என்பதும் ஓர் அறமாகக் கருதப்பட்டது. மக்கள் நல்வழியில் வாழ வேண்டும் என்னும் நோக்குடன் சமூகத்தில் உயர்ந்த நிலையில் உள்ளவர்களான அறவோர்களும் மன்னர்களும் தம் சொற்களில் அறத்தைக் கட்டிக்காத்து வாழ்ந்தனர்.

மன்னன் நடுநிலையாளனாய் சிறந்த சொல்லாற்றல் உள்ளவனாய் விளங்குதல் வேண்டும் என்ற சிந்தனையின் அடிப்படையில் அவன் இன்சொல் பேசுதல் ஓர் அறமாகக் கருதப்பட்டது.

புலவர்கள் தங்களின் சொல்திறனால் மன்னர்களுக்குள் இருந்த பகையைத் தணித்தனர். குடும்பத்தில் ஏற்பட்ட பூசல்களை விலக்கினர். இதனால்

இவர்கள் தங்களின் சொற்களால் நல்லறம் பேணுபவர்களாகவும் சமுதாயத்திற்கு நல்லறங்களைக் கற்பிப்பவர்களாகவும் கருதப்பட்டனர்.

இளமை, செல்வம், யாக்கை முதலியன நிலை இல்லாதவை என்பதை அறவோர்களும் சான்றோர்களும் உணர்த்தினர். அதன் காரணமாக மக்கள் உண்மை உணர்ந்து நல்வழியில் வாழ வழி கிடைத்தது. அதற்குக் காரணமாய் அமைவது சொல்லறம் ஆகும்.

சொல்லறம் மூலமாக நல்லாட்சி, தூய்மையான மனத்தின் தேவை, அறம் செய்ய வேண்டியதன் அவசியம், அறத்தின் முக்கியத்துவம், நீதியின் சிறப்பு, நடுநிலையின் பெருமை, சான்றோர்களின் உயர்வு, உலக இயற்கை, மக்களின் வாழ்க்கை முறை முதலியன உணர்த்தப்பட்டன.

தனிமனிதன் தன் சொல் ஆற்றல் காரணமாகச் சிறந்த வாழ்க்கை வாழ்ந்தமைக்கு சங்க இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் கருத்தாக்கங்கள் சான்றாக அமைகின்றன. சொல்லறத்தின் மூலமாகவே மக்கள் மீது அக்கறை இல்லாத மன்னர்கள் திருத்தப்பட்டிருக்கிறார்கள். தீயவர்கள் நல்வழிப்படுத்தப்பட்டிருக்கிறார்கள்.

மனம், சொல் என்னும் இரண்டின் அடிப்படையில் பிறந்த தனிமனிதச் செயல்பாடுகள் நல்லறங்களாக முகிழ்த்துப் பயன் தந்தமையினைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. காதல், வீரம் என்னும் இருகூறுகளும் பண்டைய சமுதாயக் கட்டமைப்புக்கு உதவி புரிந்துள்ளன. ஈகை என்ற அறச்செயலின்வழி சமூக ஏற்றத்தாழ்வுகள் நீக்கப்பட்டன. வறியவர்கள் வளம் பெற்றனர்.

அகவாழ்வில் நடைபெறும் செயல்கள் அனைத்தும் பிறருக்குச் சிறிதும் தீங்கு நேரா வண்ணம் அமைய வேண்டும் என்பது எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

தலைவன், தலைவி இருவர் மனத்தில் உண்டான காதலும் அறமுறைப்படி மணச் செயலில் முடிவதாக அறம் கற்பிக்கப்பட்டிருக்கிறது.

தலைவன், தலைவியின் காதலை அறவழியில் அமைத்துக் கொடுக்கும் பொறுப்பு தோழியின் செயல்பாடுகளின் மூலமாகக் கட்டமைக்கப்பட்டிருக்கிறது.

அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருள்களையும் துணையாகக் கொண்டு வாழ்கின்ற இல்லற வாழ்க்கையில் நல்லறங்கள் விளைவதற்கு நல்ல சிந்தனையும், நல்ல சொல்லும், நல்ல செயல்களும் துணையாக அமைகின்றன.

தனிமனித மனத்தில் தோன்றும் மனம் (சிந்தனை), சொல், செயல் என்னும் மூன்றும் மனிதனின் பண்பு நலத்தை அறிந்து கொள்ளத் துணை நிற்கின்றன. நல்லவர்களையும் தீயவர்களையும் இவையே இனம் காட்டுகின்றன.

**மேலாய்வுக் களங்கள்**

**'சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்'** என்னும் இப்பொருண்மை தொடர்பாக,

- ✪ சங்க இலக்கியத்தில் குடும்ப அறம்
- ✪ சங்க இலக்கியத்தில் சமுதாய அறம்
- ✪ சங்க இலக்கியத்தில் உலகளாவிய அறம்

என்னும் வகையில் எதிர்காலத்தில் ஆய்வுகள் மேற்கொள்ள வாய்ப்புகள் இருக்கின்றன.

*****

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


அகநானூறு – *களிற்றியானை நிரை,*
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
இரண்டாம் பதிப்பு, 1962.

அகநானூறு – *மணிமிடை பவளம்,*
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
இரண்டாம் பதிப்பு, 1964.

அகநானூறு – *நித்திலக்கோவை,*
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
இரண்டாம் பதிப்பு, 1963.

ஐங்குறுநூறு – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
முதற்பதிப்பு, 1972.

கலித்தொகை – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
முதற்பதிப்பு, 1962.

குறுந்தொகை – சாமிநாதையர், உ.வே., (உ.ஆ.),
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
சிதம்பரம்,
முதற்பதிப்பு, 1955.

குறுந்தொகை – சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்,
சென்னை – 18,
முதற்பதிப்பு,1965.

திருக்குறள் – *பரிமேலழகர் உரை,*
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்,
சென்னை – 18,
இரண்டாம் பதிப்பு, 1967.

தொல்காப்பியம் – *பொருளதிகாரம், இளம்பூரணர்
உரை,* சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
வெளியீடு 1974.

தொல்காப்பியம் – *பொருளதிகாரம்,
நச்சினார்க்கினியர் உரை,*
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்,
சென்னை – 18,
வெளியீடு 1970.

நற்றிணை – சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்,
சென்னை – 18,
இரண்டாம் பதிப்பு, 1976.

பத்துப்பாட்டு – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
இரண்டாம் பதிப்பு, 1961.

பதிற்றுப்பத்து – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
முதற்பதிப்பு, 1958.

பரிபாடல் – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
இரண்டாம் பதிப்பு, 1975.

புறநானூறு – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 18,
ஐந்தாம் பதிப்பு, 1964.

## துணைமை ஆதாரங்கள்

அனுராதா, இரா., – *சங்க இலக்கியத்தில் அறக்கருத்துகள்,*
தமிழாய்வு மன்றம்,
சென்னை–96,
முதற்பதிப்பு, 2007.

ஆறுமுகம், அ., – *சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு,*
பாவேந்தர் பதிப்பகம்,
திருச்சி,
வெளியீடு 1994.

இராசமாணிக்கனார், மா., – *தமிழர் நாகரிகமும் பண்பாடும்,*
பாரி நிலையம்,
சென்னை,
ஏழாம் பதிப்பு, 1970.

இராமநாதன், பொ., – *இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகாதி,*
இன்ஸ்டியூட் ஆப் சவுத் இந்தியன் ஸ்டடீஸ்,
சென்னை,
வெளியீடு 1991.

இலக்குவனார், சி., – *இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், (சங்க காலம்),*
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை,
முதற்பதிப்பு, 1962.

இராசமாணிக்கனார், மா., – *பத்துப்பாட்டு ஆராய்ச்சி,*
சாகித்திய அகாதெமி,
புதுதில்லி,
வெளியீடு 2012.

இளங்கோவடிகள் – *சிலப்பதிகாரம்,*
டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம்,
சென்னை,
வெளியீடு 1968.

கதிரேசன் செட்டியார், மு., – *உரைநடைக்கோவை,*
பழநியப்பா பிரதர்ஸ்,
சென்னை,
ஏழாம்பதிப்பு, 1963.

குழந்தை, புலவர் – *தொல்காப்பியர் காலத்தமிழர்,*
சாரதா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2008.

சண்முகம்பிள்ளை, மு., – *சங்கத்தமிழர் வாழ்வியல்,*
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
வெளியீடு 2004.

சதாசிவம், சு., – *சங்கப் பெண்பாற் புலவர்களும் சமூகமும்,*
செம்மூதாய் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2009.

சந்திரசேகரன், இரா., – *சங்க இலக்கியம், பன்முக நோக்கு,*
மகாகவி பாரதியார் நூலகம்,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்,
வெளியீடு 2001.

சரளா ராசகோபாலன் – *இலக்கியக் காட்சிகள்,*
ஒளிப்பதிப்பகம்,
சென்னை–18,
முதற்பதிப்பு, 1981.

சரளா ராசகோபாலன் – *சங்க இலக்கியம்,*
ஒளிப்பதிப்பகம்,
சென்னை–18,
முதற்பதிப்பு, 1988.

.............................. – *சங்கத் தமிழ் வளர்த்த நங்கையர்,*
ஒளிப்பதிப்பகம்,
சென்னை – 18,
முதற்பதிப்பு, 1997.

சாமி சிதம்பரனார் – *எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்,*
இலக்கிய நிலையம்,
சென்னை – 94,
இரண்டாம் பதிப்பு, 1986.

.............................. – *பழந்தமிழர் அரசியல்,*
இலக்கிய நிலையம்,
சென்னை – 94,
வெளியீடு 1973.

சாமிநாதையர், உ.வே., – *சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்,*
டாக்டர் உ.வே.சா.நூல் நிலையம்,
சென்னை–41,
ஏழாம் பதிப்பு, 1978.

சிங்காரவேலு முதலியார், ஏ., – *அபிதான சிந்தாமணி,*
ஏசியன் எஜுகேஷனல் சர்வீஸ்,
புதுதில்லி,
வெளியீடு 1994.

சிவராசன், து., – *சங்க இலக்கிய வாழ்வியல்,*
சிவம் பதிப்பகம்,
வேலூர்–2,
முதற்பதிப்பு 1998.

சீத்தலைச் சாத்தனார் – *மணிமேகலை,*
டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம்,
சென்னை–90,
வெளியீடு 1965.

சுப்பிரமணியன், கா., – *சங்ககாலச் சமுதாயம்,*
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை–98,
மூன்றாம் பதிப்பு, 1993.

செல்வராசு, நா., – *சங்க இலக்கியமும் சமூகவியலும்,*
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை–8,
முதற்பதிப்பு, 2002.

சொக்கலிங்கம், தி.அ., – *காப்பியச் சிந்தனைகள்,*
செல்வம் பப்ளிசர்ஸ்,
மதுரை,
நான்காம் பதிப்பு, 1981.

தட்சிணாமூர்த்தி, அ., – *தமிழர் நாகரிகமும் பண்பாடும்,*
யாழ் வெளியீடு,
சென்னை,
வெளியீடு 1999.

தண்டபாணி (உ.ஆ.) – *திருக்குறள் அறத்துப்பால்,*
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்,
சென்னை–18,
வெளியீடு 1956.

தண்டாயுதம், இரா., – *சங்க இலக்கியம் (எட்டுத்தொகை),*
தமிழ்ப் புத்தகலாயம்,
சென்னை – 5,
முதற்பதிப்பு, 1978.

திருநாவுக்கரசு, க.த., – *தமிழர் நாகரிக வரலாறு,*
தொல்காப்பியர் நூலகம்,
சென்னை,
வெளியீடு 1962.

............................ – *திருக்குறள் நீதி இலக்கியம்,*
முனைவர் பட்ட ஆய்வேடு, 1977,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை–5.

திருநாவுக்கரசு, க.த., – *தமிழ்ப்பண்பாடு,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை–113, வெளியீடு 2009.

தேவநேயன், ஞா., – *பழந்தமிழர் ஆட்சி,* சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை–18, நான்காம் பதிப்பு, 1961.

பாலசுப்பிரமணியன், கு.வே., – *சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்,* தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 1994.

.............................. – *சங்க இலக்கியத்தில் புறப்பொருள்,* மீரா பதிப்பகம், புதுக்கோட்டை – 1, முதற்பதிப்பு, 1986.

பாலசுப்பிரமணியன், சி., – *சங்க இலக்கியம் சில பார்வைகள்,* நறுமலர்ப் பதிப்பகம், சென்னை–29, முதற்பதிப்பு, 1989.

பாலுசாமி, நா., – *வாழ்வியல் களஞ்சியம்,* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பாஸ்கல் கிஸ்பர்ட் நாராயணன், ஜெ., (மொ.பெ) – *சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்,* தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, வெளியீடு 1964.

பிள்ளை, கே. கே., – *தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்,*
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை–113,
மறுபதிப்பு, 2000.

புலியூர்க்கேசிகன் – *புறநானூறும் தமிழர் நீதியும்,*
பசவேசுவரா பிரசுரம்,
சேலம்,
முதற்பதிப்பு, 1965.

பூமா, ஆ. – *பாரதத்தில் அறச்சிக்கல்கள்,*
முனைவர் பட்ட ஆய்வேடு, 2003,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை – 5.

மாணிக்கம், வ.சுப. – *தமிழ்க்காதல்,*
சாரதா பதிப்பகம்,
சென்னை –5,
முதற்பதிப்பு, 2008.

முத்துலக்குமி, வே., – *பண்டைத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்,*
அனிதா பதிப்பகம்,
திருச்சி – 2,
முதற்பதிப்பு, 1999.

மோகனராசு, கு., – *தொல்காப்பியர் ஓர் அறவாணர்,*
ஸ்டார் பிரசுரம்,
சென்னை,
வெளியீடு 1987.

வரதராசன், மு., – *தமிழ் நெஞ்சம்,*
பாரி நிலையம்,
சென்னை–1,
பனிரெண்டாம் பதிப்பு, 1984.

வில்லியம் லில்லி – *அறவியல் ஓர் அறிமுகம்,*
காந்தி, கோ.மோ., (மொ.பெ.) தமிழ் வெளியீட்டுக் கழகம்,
சென்னை,
வெளியீடு **1964.**

இதழ் – *அமுதசுரபி,*
தீபாவளி மலர் (ஆண்டு **1997**),
சென்னை.


ᘛᘚᘛᘚ

# சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்

சென்னைப் பல்கலைக்கழகக் கலைப்புலத்து
முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றிற்காக
அளிக்கப்படும் ஆய்வேடு

ஆய்வாளர்
**மு. நாராயணன்**

நெறியாளர்
**முனைவர் சுப. நடராசன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ் இணைப்பேராசிரியர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 005




**தமிழ்த்துறை**
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 005.

ஏப்ரல் – 2014

# முடிவுரை

**'சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்'** என்னும் தலைப்பிலமைந்த இந்த ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் இப்பகுதியில் தொகுத்துரைக்கப்படுகின்றன.

நல்ல செயல்களின் தொகுதி அறம் என்று அழைக்கப்படுகின்றது. அறு என்னும் வினை அடியை முதலாகக் கொண்ட அறம் நன்மையை முதலாகக் கொண்டது. நல்ல மனத்தில் தோன்றுகின்ற சிந்தனைகளின் வெளிப்பாட்டால் அறம் பிறக்கிறது. வள்ளுவன் வழியில் அறம் தூய்மையான மனத்தில் இருந்து பிறக்கிறது. மனத்துக்கண் மாசிலன் ஆதல் அறமாகும். அறங்கள் தனிமனித அறம், குடும்ப அறம், சமுதாய அறம், உலகளாவிய அறம் எனப் பலவகைப்படுகிறது.

தனிமனித மனமே அறத்தின் தொடக்கத்திற்குக் காரணமாக அமைவதனால் தனிமனித அறம் குறிப்பாகச் சிந்திக்கத்தக்க ஒன்றாக அமைந்திருக்கிறது. மிகப்பெரிய சாதனைகளை உருவாக்கும் நற்சிந்தனைகளும் அழிவுக்குக் காரணமான தீய சிந்தனைகளும் மனத்தைக் களமாகக் கொண்டு பிறப்பதனால் தனிமனித மனம் கவனிக்கத்தக்க ஒன்றாகிறது.

தனிமனித அறம் மனம், சொல், செயல் என்னும் மூன்று களங்களில் செயல்படுகின்றது. தூய்மையான மனத்தில் இருந்து பிறந்த சிந்தனையால் நற்சொல்லும், நற்சொல்லின் பிறப்பால் நல்ல செயல்களும் நடைபெற ஏதுவாகின்றது. அறச்செயல் செய்வதற்கான முயற்சியும் செயல்பாடும் தனிமனிதனில் இருந்து தொடங்குகின்றது. அதனால் தனிமனிதனுக்கு

அறக்கோட்பாடு இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. தனிமனித ஒழுக்கமே குடும்ப, சமுதாய, உலகளாவிய அறமாக மாற்றமடையும் என்பதனால் தனிமனிதன் மிக்க கவனமுடன் செயலாற்ற வேண்டியவனாக இருக்கிறான்.

மனிதர்களின் புறத்தோற்றத்தைக் கொண்டு இவர் நல்லவர், இவர் கெட்டவர் என்று வரையறை செய்ய இயலாது. ஆனால் மனிதனின் மனம், சொல், செயல் இவற்றின் மூலம் வெளிப்படும் அவனுடைய நடத்தையால் மட்டுமே குணநலன்களை அறிந்து கொள்ளலாம்.

மனிதமனம் நன்மைக்கும் தீமைக்குமான சிந்தனைகள் தோன்றும் களமாக அமைந்திருக்கிறது. தனிமனித மனத்தில் எழும் சிந்தனைகள் வலிமையானவை என்பதனால் நன்மைகள் நடைபெறும் பொருட்டு நல்ல செயல்களை மட்டும் சிந்திக்கும் களமாக மனத்தை மாற்றுவது அவசியமாகும். நடுநிலை உடைய மனிதன் தன் நடுநிலை உடைய மனச்சாட்சியின்படி அறத்தைக் கடைப்பிடிக்க வேண்டியவன் ஆகிறான். மனத்தூய்மையே அறத்தின் தொடக்கமாக அமைவதனால் மக்கள் அனைவரும் அறத்தைக் காக்க வேண்டிய பொறுப்புக்கு ஆளாகின்றனர்.

பண்டைய சங்க இலக்கியங்களில் இல்லறவாழ்வில் ஈடுபட்டுள்ள தனிமனிதர்கள் ஒவ்வொருவரும் தம் மன அளவில் தூய்மையைக் கடைப்பிடித்து வந்துள்ளனர். கற்பு ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான நிலையில் உணர்த்தப்பட்ட காரணத்தால் அறம் தனிமனித மனத்தின் சாரமாக அமைந்திருக்கிறது. வாழ்வில் ஒழுக்கமே முக்கியமானது. மனத்தின் வழியாக உருவாகும் சிந்தனையே செயலாகும் என்பதால் மனத்தில் தூய்மை நிலை வேண்டும் என்பது உணர்த்தப்படுகிறது. அன்பு, அருள், பொறுமை, விட்டுக்கொடுத்தல், ஈகைப்பண்பு, அடைக்கலம் கொடுக்கும் எண்ணம் முதலானவை பிறக்கும் இடம் மனம் என்பதனால் அறத்துக்கு மனத்தின் பங்களிப்பு அவசியமாகிறது.

தூய்மையான நட்பு, நட்பு சார்ந்த சிந்தனைகளின் பிறப்பு ஆகியவற்றுக்கும் உண்மையின் பிறப்புக்கும் மனம் காரணமாகிறது. வாழ்க்கையில் நிகழும் நிகழ்வுகளுக்கு மனம் சாட்சியாய் நின்று செயலாற்றுகிறது.

மனித மனத்தில் உருவாகும் சிந்தனை அதன்வழிப் பிறக்கின்ற சொற்கள் அதுதொடர்பான செயல்கள் என மூன்று நிலைகளுக்கும் மனம் தூண்டுகோலாய் அமைகின்றது. வாயில் இருந்து பிறக்கின்ற சொற்கள் செயலுக்கு அடிப்படையாகின்றமையால் பண்டைய புலவர்கள் சீரிய தம் சொல்லாற்றலின் காரணமாக அறிவையும் மனத்தையும் உழுது நற்சிந்தனைகளை விதைத்தனர். இக்காரணத்தால் இவர்கள் புலனேருழவர் எனப்பட்டனர். அன்றைய நிலையில் சொன்ன சொல்லைக் காப்பது ஒரு பேரறமாகக் கருதப்பட்டது.

ஒருவருக்கு நன்மையும் தீமையும் அவர் பேசுகின்ற பேச்சினால் வருவதனால் பேச்சில் கவனம் தேவைப்பட்டது. அதனால் பேச்சறம் பேணுதல் என்பதும் ஓர் அறமாகக் கருதப்பட்டது. மக்கள் நல்வழியில் வாழ வேண்டும் என்னும் நோக்குடன் சமூகத்தில் உயர்ந்த நிலையில் உள்ளவர்களான அறவோர்களும் மன்னர்களும் தம் சொற்களில் அறத்தைக் கட்டிக்காத்து வாழ்ந்தனர்.

மன்னன் நடுநிலையாளனாய் சிறந்த சொல்லாற்றல் உள்ளவனாய் விளங்குதல் வேண்டும் என்ற சிந்தனையின் அடிப்படையில் அவன் இன்சொல் பேசுதல் ஓர் அறமாகக் கருதப்பட்டது.

புலவர்கள் தங்களின் சொல்திறனால் மன்னர்களுக்குள் இருந்த பகையைத் தணித்தனர். குடும்பத்தில் ஏற்பட்ட பூசல்களை விலக்கினர். இதனால்

இவர்கள் தங்களின் சொற்களால் நல்லறம் பேணுபவர்களாகவும் சமுதாயத்திற்கு நல்லறங்களைக் கற்பிப்பவர்களாகவும் கருதப்பட்டனர்.

இளமை, செல்வம், யாக்கை முதலியன நிலை இல்லாதவை என்பதை அறவோர்களும் சான்றோர்களும் உணர்த்தினர். அதன் காரணமாக மக்கள் உண்மை உணர்ந்து நல்வழியில் வாழ வழி கிடைத்தது. அதற்குக் காரணமாய் அமைவது சொல்லறம் ஆகும்.

சொல்லறம் மூலமாக நல்லாட்சி, தூய்மையான மனத்தின் தேவை, அறம் செய்ய வேண்டியதன் அவசியம், அறத்தின் முக்கியத்துவம், நீதியின் சிறப்பு, நடுநிலையின் பெருமை, சான்றோர்களின் உயர்வு, உலக இயற்கை, மக்களின் வாழ்க்கை முறை முதலியன உணர்த்தப்பட்டன.

தனிமனிதன் தன் சொல் ஆற்றல் காரணமாகச் சிறந்த வாழ்க்கை வாழ்ந்தமைக்கு சங்க இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் கருத்தாக்கங்கள் சான்றாக அமைகின்றன. சொல்லறத்தின் மூலமாகவே மக்கள் மீது அக்கறை இல்லாத மன்னர்கள் திருத்தப்பட்டிருக்கிறார்கள். தீயவர்கள் நல்வழிப்படுத்தப்பட்டிருக்கிறார்கள்.

மனம், சொல் என்னும் இரண்டின் அடிப்படையில் பிறந்த தனிமனிதச் செயல்பாடுகள் நல்லறங்களாக முகிழ்த்துப் பயன் தந்தமையினைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. காதல், வீரம் என்னும் இருகூறுகளும் பண்டைய சமுதாயக் கட்டமைப்புக்கு உதவி புரிந்துள்ளன. ஈகை என்ற அறச்செயலின்வழி சமூக ஏற்றத்தாழ்வுகள் நீக்கப்பட்டன. வறியவர்கள் வளம் பெற்றனர்.

அகவாழ்வில் நடைபெறும் செயல்கள் அனைத்தும் பிறருக்குச் சிறிதும் தீங்கு நேரா வண்ணம் அமைய வேண்டும் என்பது எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

தலைவன், தலைவி இருவர் மனத்தில் உண்டான காதலும் அறமுறைப்படி மணச் செயலில் முடிவதாக அறம் கற்பிக்கப்பட்டிருக்கிறது.

தலைவன், தலைவியின் காதலை அறவழியில் அமைத்துக் கொடுக்கும் பொறுப்பு தோழியின் செயல்பாடுகளின் மூலமாகக் கட்டமைக்கப்பட்டிருக்கிறது.

அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருள்களையும் துணையாகக் கொண்டு வாழ்கின்ற இல்லற வாழ்க்கையில் நல்லறங்கள் விளைவதற்கு நல்ல சிந்தனையும், நல்ல சொல்லும், நல்ல செயல்களும் துணையாக அமைகின்றன.

தனிமனித மனத்தில் தோன்றும் மனம் (சிந்தனை), சொல், செயல் என்னும் மூன்றும் மனிதனின் பண்பு நலத்தை அறிந்து கொள்ளத் துணை நிற்கின்றன. நல்லவர்களையும் தீயவர்களையும் இவையே இனம் காட்டுகின்றன.

**மேலாய்வுக் களங்கள்**

**'சங்க இலக்கியத்தில் தனிமனித அறமும் சமுதாய மேம்பாடும்'** என்னும் இப்பொருண்மை தொடர்பாக,

- சங்க இலக்கியத்தில் குடும்ப அறம்
- சங்க இலக்கியத்தில் சமுதாய அறம்
- சங்க இலக்கியத்தில் உலகளாவிய அறம்

என்னும் வகையில் எதிர்காலத்தில் ஆய்வுகள் மேற்கொள்ள வாய்ப்புகள் இருக்கின்றன.

*****